அச்சில் வாரா அருந்தமிழ் — 10

திருவேங்கட பாரதி

இயற்றிய

# பாரதிதீபம்

பதிப்பாசிரியர்
மு. சண்முகம்பிள்ளை
தமிழ் விரிவுரையாளர்
திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி
சென்னைப் பல்கலைக் கழகம்

சென்னைப் பல்கலைக் கழகம்

1980

அச்சில் வாரா அருந்தமிழ் — 10

# திருவேங்கட பாரதி

இயற்றிய

# பாரதிதீபம்


பதிப்பாசிரியர்

மு. சண்முகம்பிள்ளை

தமிழ் விரிவுரையாளர்

திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி

சென்னைப் பல்கலைக் கழகம்



சென்னைப் பல்கலைக் கழகம்

1980

முதற் பதிப்பு : 1980

விலை : ரூ. 5-50

இதுவரை வெளிவந்துள்ள

அருந்தமிழ் நூல்கள்

1. அப்பாண்டை நாதர் உலா
—தமிழாய்வு I, 1972
2. நாக குமார காவியம்
—தமிழாய்வு II, 1973
3. திருமேற்றிசை யந்தாதி
—அப்பாண்டை நாதர் உலாவின்
தனி வெளியீட்டுப் பிற்சேர்க்கை - III, 1974
4. ஈனமுத்துப் பாண்டியன் கதை
— தமிழாய்வு IV, 1974
5. அடிமதிக்குடி அய்யனார் பிள்ளைத்தமிழ்
— தமிழாய்வு V, 1975
6. மெய்ம்மொழிச் சரிதை
—தமிழாய்வு VI, 1977
7. சேலம் தாலந்தீர்த்த செழியன் மஞ்சரி
— தமிழாய்வு VII, 1978
8. மேருமந்தர மாலை
— தமிழாய்வு VIII, 1978
9. கம்பராமாயணக் கௌஸ்துபம்
— தமிழாய்வு IX, 1979

அச்சிட்டோர்:
அவ்வை அச்சுக்கூடம், சென்னை-13.

# முகவுரை

'பாரதி தீபம்' என்பது திருவேங்கட பாரதியாரால் ஆக்கப் பெற்ற நிகண்டு நூல். ஆசிரியர் தம் பெயரைத் திருவேங்கட பாரதி, பாரதி என்று நூலுள் ஒவ்வொரு தொகுதியின் இறுதியாக அமையும் வரலாற்றுப் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

'திருவேங் கடவன் ஏன்ருசு கூறுங் கவிவேந்தன்...
செப்பிய பாரதிதீபம்'. (200)

'திருவேங் கடபாரதி வண்டமிழின்
செழுமைய தாகு மிலக்கிய பாரதிதீபம்'. (243)

'முந்துதமிழ்ப் பன்னிய பாரதி பாரதிதீபம்'. (293)

'பாரதி வாதுகவிக் கேருனவன் சொன்ன
பாரதிதீபம்'. (319)

இவற்ருல் பாரதி இயற்றிய நூல் பாரதி தீபம் என்பது தெரியவரும். இஃது ஆக்கியோன் பெயரால் அமைந்த பெயராகும்.

தீபம், தீபிகை என்னும் பெயர்களால் தமிழில் சில நூல்களின் பெயர்கள் அமைந்துள்ளன.* தீபம், தீபிகை என்ருல், 'விளக்கு' என்பது பொருளாம். இங்கே பொருள்களின் பெயர்கள், சொற் பொருள்கள் ஆகியவற்றைத் தெளிவுறத் தொகுத்து விளக்குவது என்னும் பொருளில் 'தீபம்' என்பதை ஆசிரியர் பயன்படுத்தி யுள்ளார். அகராதி நிகண்டு, நாமதீப நிகண்டு முதலிய நூற் பெயர்களில் இணைந்துள்ள நிகண்டு என்பது போல இங்குத் 'தீபம்' என்பது வந்துள்ளது. ஆகவே, நிகண்டு என்னும் பொருளில் 'தீபம்' என்பது இவ்வாசிரியரால் ஆளப்பட்டுள்ளது என்று கருதவும் இடமுண்டு.

தமிழிலே காலத்தால் முந்திய நிகண்டுகளாகிய திவாகரமும் பிங்கலந்தையும் நூற்பாவினுல் இயன்றன. பின்னர் வந்த நிகண்டுகள் நூற்பாவினுல் மட்டுமன்றி வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம் என்னும் யாப்பு வகைகளிலும்

---

* அரிசமய தீபம், இலக்கிய தீபம், ஞானதீபம், தத்துவ தீப சங்கிரகம், ஆனந்த தீபிகை, கோளதீபிகை, சின்மய தீபிகை, நானுர்த்த தீபிகை, பதார்த்த தீபிகை முதலியன.

அமைந்துள்ளன. கட்டளைக் கலித்துறைப் பாவினுல் ஆகிய நிகண்டுகள் கயாதரமும் பாரதிதீபமும் ஆகும்.

கட்டளைக் கலித்துறை வகையான பாவினம் தமிழுலகில் முற்காலத்தில் பெருவழக்காயிருந்தது. யாப்பருங்கலக் காரிகை, வீரசோழியம், நவநீதப் பாட்டியல் முதலிய இலக்கண நூல்களும் எண்ணிறந்த கோவைகளும் இதற்குச் சான்ருக அமைகின்றன. இனிய ஓசையும், எண்ணினுல் வரையறைப்பட்ட எழுத்தமைதியும், எதுகை மோனை முதலியவற்றின் நயமும் இவ்வகைச் செய்யுள்கள் கற்போர்க்குப் பெருவிருந்தாயின. இத்தகு நயங்களால் நினைவில் வைத்தற்கு ஏற்றதொரு பாவினமாக இது கருதப்பட்டது எனலாம்.

கயாதரமும் பாரதிதீபமும் கட்டளைக் கலித்துறைப் பாவால் அமைந்திருப்பதோடு இரண்டும் முதல் நிகண்டு எனப் போற்றப் பெறும் திவாகரத்தை அடியொற்றியுள்ளன. திவாகரத்தில் ஒவ்வொரு தொகுதி இறுதியிலும் ஆசிரியர் தம்மைப்பற்றி வெளிப் படுத்தும் வரலாற்றுப் பாடல்கள் அமைந்துள்ளது போலவே இந் நிகண்டுகளிலும் உள்ளன. அன்றியும் பொருள்களின் அமைப்பு முறையிலும் பெரிதும் ஒற்றுமை காணப்படுகிறது. எனினும் கயாதரம் சற்று வேறுபட்டுள்ளது. கயாதரம் 11 தொகுதியுடையதாய் அமையப் பாரதிதீபமோ திவாகரத்தைப் போல 12 தொகுதிகள் கொண்டுள்ளது. கயாதரத்தில் திவாகர நிகண்டில் ஐந்தாவதாக உள்ள இடப்பெயர் இரண்டாவதாக இடம் பெற்றுள்ளது. அதோடு கயாதரர் தொகுதிகளைத் தெய்வப் பெயரியல், இடப்பெயரியல் என்ருற் போல 'இயல்' என்று பெயரிடுகின்ருர்.

பாரதி தீபமோ தொகுதிகளின் பெயரிலும் சரி, தொகுதிப் பொருளடைவிலும் சரி, சற்றும் மாருமல் திவாகரத்தை அடியொற்றிச் செல்லுகிறது. மேலும், பொருள்களை விளக்கும் முறையிலும் திவாகரர் நூலின் அடைவையே பாரதிதீபம் எங்கும் தழுவிச்செல்லு கிறது. திவாகரத்தில் பல நூற்பாக்களில் காணும் பொருட் கூறுகள் இதன்கண் ஒரு பாடலில் சேர்ந்து காணப்படும். கயாதரம் திவாகரத்தைப் பெரும்பாலும் பின்பற்றி அமையினும் முற்றிலும் அதன் வழித்தாய் அம் முதல் நூலின் பொருளடைவு முறையிலேயே செல்லுவது பாரதிதீபம்.

திவாகரர் பதினெராந் தொகுதியில் அமைத்திருந்த நூற்பா அடைவுமுறை தொல்காப்பிய உரியியலிற் போல எதுகை முறை தழுவிய ஓர் அமைப்பாகும். இத் தொகுதி நூற்பாக்களை ஆதியிற் பொருள், அந்தத்துப் பொருள் என்று பாகுபடுத்திப் பிரித்து அகராதியடைவு படுத்தியதும், முற்றிலும் அகராதி முறை கொண்டு அமைத்ததும் பிற்காலத்தார் செய்த மாறுபாடுகள். திவாகரர் அமைத்த பழைய முறையோ இவற்றிற்கு முற்றிலும் வேறுபட்ட அமைப்பாகும்.

'சேமங் காவ லின்ப மிரவுபொன்
ஏமாப்பு மயக்க மேமமாகும்'.

'செழுமை வளனுங் கொழுப்பு மாகும்'.

'சிறப்புச் சீர்மை யிடும்பையிம் மூன்றும்
விரிக்கின் மேலோர் விழும மென்ப'.

என்பவை திவாகரம் பதினொராந் தொகுதியின் முதல் மூன்று நூற்பாக்கள்.

'சேமமே காவல்பொன் னின்ப
மேபாப் பிரவு செறி மயக்க
மேமம தாகுஞ் சிறப்பொடு
சீர்மை யிடும்பையிவை
தாமுரை செய்யில் விழுமம
தாகத் தருஞ்செழுமை
நாமம தென்னில் வளனே
கொழுப்பெனு நானிலமே'

என்பது பாரதி தீபத்தின் பதினொராந்தொகுதி முதற்பாடல். மேலே காட்டிய திவாகர நூற்பாக்கள் மூன்றன் செய்திகளையும் இப்பாடல் கொண்டிருத்தல் காணலாம். இந்த அளவு மிக நெருங்கிய ஒற்றுமை திவாகரத்தோடு இந் நிகண்டிற்கு உண்டு. இதனால் திவாகரத்தில் பின்னாளில் வந்து சேர்ந்த இடைச் செருகல்களான நூற்பாக்கள் எவையெவை என்பதைக் கண்டுகொள்ளவும் இப் பாரதி தீபம் துணைசெய்கிறது.

கயாதர நிகண்டின் காலத்தைக் குறித்து அந்நூலின் முன்னுரையில் (பக் xi, xii) பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் மிக நுணுக்கமாக ஆராய்ந்துள்ளார்கள். கயாதரம், யாப்பருங்கலக் காரிகை தோன்றிய கி. பி. 11 ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டுத் தோன்றியது என்றும், கி. பி. 1575-ல் அந்நூலைக் கல்வியாளர் அங்கீகரித்து எடுத்தாண்டிருப்பதால் இதற்கு முற்பட்டது என்றும் குறிப்பிட்டுள்ளார்கள். உத்தேசம் கி. பி. 1450-ல் கயாதரம் இயற்றப்பட்டிருக்கலாம் என வரையறுத்தல் தக்கது என்னும் முடிவுக்கு வந்துள்ளார்கள்.

கயாதரம் யாப்பு வகையாலும் திவாகரத்தைப் பின்பற்றிச் செல்வதிலும் பாரதி தீபத்தை ஒத்துக் காணப்படினும் அந்நூல் முற்றும் அந்தாதித் தொடையில் அமைந்திருக்கிறது. அந்தாதி முறை நினைவில் வைத்துப் பாடல்களை மனப்பாடம் செய்வதற்கு ஏற்றமுறை. இத்தகு வளர்ச்சி நிலையை நோக்கப் பாரதி தீபம் அதற்கு முன்பே தோன்றிய நூலாதல் கூடும் என்று கருதலாம். பாரதி தீபத்தையும் அந்நிகண்டைப் போலவே 15 ஆம் நூற்றாண்டில் தோன்றிய நிகண்டு நூலாகக் கொள்ளலாம்.

பாரதி தீப நிகண்டினைக்குறித்து யாழ்ப்பாணம் மானிப்பாய் சதாசிவம் பிள்ளை என்பார் (*1820–1896*) *1886*-ல் எழுதி வெளியிட்ட 'பாவலர் சரித்திர தீபகம்' என்னும் நூலின் **211** ஆம் பக்கத்தில் பல செய்திகள் காணப்படுகின்றன. இவர் தந்துள்ள வரலாற்றுச் செய்திகள் வருமாறு :

> "கடம்பை ஊரில் இருந்த வித்துவ சிரோமணியாகிய இவர் குலத்தாற் பிராமணன், 'மாதவஞ் செய் பாரதி' என்றும், 'கன்னல் குலாவும் வயல் சூழ் கடம்பையான்' என்றும்' 'செழுமுனி பாரதி' என்றும் பற்பல விசேடண மொழிகள் சார்த்தி இவர் பேசப்படுகின்றார். இம் மாத்திரமன்றி இவரது சரிதம் வேறே ஏதும் சொல்லப்படக் காணேம். தச நிகண்டுள் ஒன்றை இவர் பாடியிருக்கின்றார். அது இவருடைய நாமதேயப்படி 'பாரதி தீபம்' எனப் பெயரியது. 12 தொகுதி கொண்ட அந் நிகண்டிலே கலித்துறைப்பாவில் 737 செய்யுள்கள் அடங்கியிருக்கின்றன. அதன் 12-ம் தொகுதி இறுதிப் பாவாகிய,
>
> 'விதிதரு வேதியன் வேங்கட
> நாதன் விரகறியும்
> அதிகுண வேள்பர மானந்த
> பாரதி யாங்கடம்பைப்
> பதிநிதி யோதிய பாரதி
> தீபத்திற் பன்னிரண்டாம்
> முதிரொரு சொற்பல் பொருட்பேர்த்
> தொகுதி முடிந்ததுவே'
>
> என்னும் கலித்துறை, அந்நூலுக்கு இவர் ஆக்கியோன் எனத் திருட்டாந்தப்படுத்துகின்றது. இப் புலவரது பாடற்றிறமைக்குச் சாட்சியாக அந்த நிகண்டுக் காப்பை இதன் கீழ்த் தருகின்றேம் :
>
> 'சங்கரி மைந்தன் விநாயகன்
> சண்முகன் றன்முன் வந்தோன்
> ஐங்கர ஞானை முகத்தோன்
> கணபதி யாகுபரிப்
> புங்கவன் மான்மரு கனெரு
> கொம்பன் பொழிமதத்தோன்
> பங்கய மோதக பசாங்
> குசம்பயில் பாணியனே."

இவர் எழுதியது கொண்டே இந் நிகண்டு வரலாற்றைப் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் தமிழ்ப் பேரகராதியின் முன்னுரையில் எழுதியுள்ளார் (பக். xxviii). இந்நூலினை உவின்ஸ்லோ

தம் அகராதியில் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார் என்னும் விவ ரத்தையும் அவர்கள் சுட்டியுள்ளார்கள்.* இவற்ருல் இந்நூலின் பிரதிகள் இலங்கையில் கிடைத்தல் கூடும் என்றும் அவர்கள் சொல் வதுண்டு. தமிழகத்தில் இந் நூலின் சுவடிகள் பரவலாக இல்லை. இப் பதிப்பிற்குப் பயன்பட்ட சுவடி டாக்டர் உ. வே. சாமிநாதையர் தொகுப்பிலிருந்து கிடைத்த ஒரே சுவடி. இச் சுவடியினின்றும் சற்று மாறுபட்ட நிலையில் இலங்கைச் சுவடிகள் இருத்தல் கூடும் என்பதை மேலே சுட்டிய சதாசிவம் பிள்ளை தரும் குறிப்புக்கொண்டு தெளி யலாம். இவர் தம் உரையின் இறுதியில் எடுத்துக்காட்டிய காப்புச் செய்யுள் இப் பதிப்பிற்குப் பயன்பட்ட சுவடியில் முதலில் இல்லை. ஆனால் விநாயகன் பெயர் உரைக்கும் 15 ஆம் பாடலாகச் சிறிது பாடம் வேறுபட்டுக் காணப்படுகிறது. அன்றியும் பன்னிரண்டாம் தொகுதியின் ஈற்றுச் செய்யுள் என இவர் எடுத்துக் காட்டியதும் முற்றும் மாறுபட்டுள்ளது. இப்பொழுது கிட்டியுள்ள பாரதி தீப நிகண்டின் செய்யுள் தொகை 665. சதாசிவம்பிள்ளை 737 என்று குறிப்பிடுகின்ருர். இவற்றையெல்லாம் பார்க்கும் போது தமிழகத்தில் தோன்றிய இந் நிகண்டு நூல் ஈழநாட்டில் சிற்சில சேர்க்கைகள் மாற்றங்கள் பெற்றுக் காலஅடைவில் சற்று வேறுபட்டிருக்கலாம் என்று எண்ணத்தோன்றுகிறது. அங்குள்ள சுவடிகள் கிட்டினலன்றி வரையறுத்து உரைத்தல் இயலாததொன்ருகும்.

இனி, பாரதி தீபத்துள் நூல், நூலாசிரியர் பற்றிய வரலாறு தரும் தொகுதியிறுதிப் பாடல்களில் காணும் குறிப்புகளின்வழி நூலாசிரியா திருவேங்கட பாரதியின் வரலாற்றைக் காண்போம். இவருடைய ஊராகக் குறிக்கப்பட்டுள்ள கடம்பை என்பது திருக்கடம்பூர் என்னும் சிவதலமாகும். கடம்பை என்பது கடம்பூர் என்பதன் மரூஉ. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் தென்கடம்பைத் திருக்கரக்கோயிலில் விளங்கும் சிவபெருமானைப் போற்றிப் பதிகம் பாடியுள்ளனர். திருஞானசம்பந்தர் பாடியது இரண்டாம் திருமுறை யில் 68ஆம் பதிகமாய் உள்ளது. திருநாவுக்கரசர் பாடியவை ஐந்தாம் திருமுறையில் 19, 20ஆம் பதிகங்களாக உள்ளன. கடம் பூரில் உள்ள திருக்கோயில் ‘கரக்கோயில்’ என்னும் அமைப்புடை யது. ரதம், சக்கரம், குதிரை அமைந்துள்ள சிற்பமுறையில் கருப்பக் கிரகம் காணப்படுகிறது. இவ்வூர் சிதம்பரத்திலிருந்து 15 கல் தொலை விலும் காட்டுமன்ஞர்குடியிலிருந்து 3 கல் தொலைவிலும் உள்ளது. ‘கடம்பூர்க் கரக்கோயிலே’ எனப்போற்றும் திருநாவுக்கரசர்,

> ‘நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
> தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
> தன்க டன்னடி யேனையும் தாங்குதல்
> என்க டன்பணி செய்து கிடப்பதே’

---

*உவின்ஸ்லோ அகராதியில் மேற்கோள் காட்டிய இடங்கள்: அருப்பம் (பக். 38), உசு (122), உண்டி (127), உருப்பு (142), உழிதரல் (152), உளைக்கிறேன் (154), ஒப்பம் (200), ஒப்பு (201), ஒருக்கு (204); கணிச்சி (231), கத்தியம் (239), குதலை (321).

என்னும் திருப்பாடலில், 'தென்கடம்பை' என்று குறிப்பிட்டுள்ளார். எனவே, 'தென்கடம்பை' என்றும் இவ்வூர் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். இவ்வூரைச் சார்ந்தவராகிய திருவேங்கட பாரதியாரும் இந் நிகண்டில்

'திதமா வுறைநளி னத்தடஞ் சூழ் தென்கடம்பை (74)

'மீன்ருவு வாவிக் கடம்பை' (200)

என்று தென்கடம்பை, கடம்பை என்று தம் ஊரினைக் குறிப்பிட்டுள்ளார். 'கடம்பாடவி' என்றும் (590, 665) இரண்டிடங்களில் சுட்டியுள்ளார். கடம்பூர் என்பதுவே கடம்பை, தென்கடம்பை, கடம் பாடவி என வழங்கப்பட்டுவருதல் தெளிவாம். இவர் வாழ்ந்த இவ்வூர் தேவாரம் பெற்ற பெருமையுடையது என்பதும் கண்டோம்.

தென்கடம்பையில் திருவேங்கட பாரதி சிறந்த புலவராயும் பெரும்புகழ் வாய்ந்த தலைவராயும் திகழ்ந்தவர்.

'கடம்பைய ராதி' (473)

'கடம்பைமன் கஞ்சமலர்
மின்னுள வாகும்புய பாரதி திருவேங்கடவன்' (506)

'கடம்பா டவிவாழ் இந்திரன்' (665)

'செழியன் புகழண்ணல்' (423)

எனவரும் தொடர்கள் இவர் அரசறிய வீற்றிருந்த பெருவாழ்வுடையவர் என்பதனைத் தெளிவிக்கும்.

இவர் அந்தணர் குலத்தைச் சார்ந்தவர் என்பதனைப் பின்வரும் வாக்குகளால் அறியலாம்.

'விழியருள் பூண்ட நவதாரணை முகில் வேங்கடவன்
வழியினுள் வாழ்திரு வேங்கடவன்.' (243)

'மெய்ப்பூ சுரர்தம் விழிநெஞ்ச மென்ன
வரும் பாரதி.' (423)

'வெருவா துயரந் தமுமெய்
வீடுகண்டருள் வேங்கடவன்.' (590)

இவர் கொடையில் சிறந்த ஒருவள்ளலாயும் திகழ்ந்தவர்.

'மின்செயற் காரிற் றருபாரதி' (365)

'பொழிகொண்ட லென்ன
கரப்புண்டரிகன்' (423)

'பங்கயஞ்சே ரிருகைப் புயல்' (590)

'கந்தர மென்னக் கொடையுடையான்' (665)

மேகத்தைப்போலக் கைம்மாறு கருதாது பிறருக்குக் கொடுப்பவர் என்று இவர் போற்றப்படுகிருர்.

இவர் இந் நிகண்டு நூலைச் செய்கின்ற காலத்துத் தவத்தினை மேற்கொண்ட ஒரு துறவியராயும் திகழ்ந்தார் என்பது,

'சேருரளகப் புயன்செயங் கொண்டவன் சிந்தையன்பு
மாருது மாதவஞ் செய்தருள் பாரதி' (319)

என்பதனுல் தெரியவரும்.

திருவேங்கட பாரதியின் செந்தமிழ்ப் புலமைபற்றியும் புகழ்ச்சியான சில தொடர்கள் நிகண்டுப் பாடல்களில் உள்ளன.

'தொகு புலமை மிக்கவன் பாரதி' (146)

'ஏன்ருசு கூறுங் கவிவேந்தன்' (200)

'முந்துதமிழ்ப் பன்னிய பாரதி' (293)

'வாதுகவிக் கேருனவன்' (319)

'கைக்கார் நிகரு மியறங்கு செந்தமிழ்ப்பாரதி' (473)

'மேன்மலை வாழ்முனி போல விலக்கணத்தான்
செந்தமிழ் நூல்தெரி பாரதி.' (665)

இவற்ருல், செந்தமிழ் நூல் பல ஆராய்ந்து இலக்கிய இலக்கணப் புலமை மிக்காராய்ப் பொதியமலை அகத்திய முனிவனைப்போல இவர் சிறந்து விளங்கினுர் என்பது தெரியவரும்.

இத்தகைய பெரும்புலமையாளர் இயற்றிய நிகண்டும் புலவர் போற்றும் பெருமை வாய்ந்தது என்பது சொல்லவும் வேண்டுமோ ?

'வண்டமிழின் செழுமைய தாகு
மிலக்கிய பாரதி தீபம்' (243)

'இயல் தெரிந்தோன் தென்சிலைச் செந்தமிழ்ப்
பாரதி தீபம்' (365)

'பாவலர் ஏற்றரி தாமுயர்
செஞ்சொலாற் சொன்ன பாரதி தீபம்' (473)

என வருவனவற்ருல் பாவலர் புகழ் பெருமை வாய்ந்த சிறப்புடைய நிகண்டு இலக்கியமாக இவருடைய நூல் திகழ்கின்றது என்பது விளக்கமாம்.

இவர் பெரும்பான்மையும் அடைமொழி அதிகமின்றிப் பெயர்களைத் தொகுத்து அமைத்துச் செய்யுள்களை இயற்றியுள்ளார். சிற்சில இடங்களில் மகடூஉ முன்னிலைகளையும் தந்துள்ளார். நூலுள் இருபத்துமூன்று இடங்களில், 'ஆரணங்கே' என்பது முதல் 'விளங்

கிழையே' என்பது ஈருகப் பதினேழு வகையான முன்னிலைகளைப் பயன்படுத்தியுள்ளார்.*

நூற் பொருளை எடுத்துரைக்குமிடத்து முந்தையோர் கருத்தாகப் —பழைய மரபுகளாகப்—பலவற்றையும் சுட்டி உரைப்பது திவாகரம், பிங்கலம் முதலிய நிகண்டு நூலார் மேற்கொண்டுள்ள முறையாகும். பாரதிதீபம் இயற்றிய திருவேங்கட பாரதியார் முந்தையோர் கருத்தாக ஏறத்தாழ 470 இடங்களில் குறிப்பிடுகிறார். என்ப, என்பர், என்பர்களே, என்பரே என்பனவற்றைக் கிட்டத்தட்ட 350 இடங்களில் குறிப்பிட்டுள்ளார். 'நன்னூனெறி கற்றவரே' (84), 'நன்னூனெறி கற்றுயர்ந்தவரே' (498) 'பாடல் பயிலும் பனுவற்றமிழ் தெரி பார்த்திபரே' (472), 'செந்தமிழ் நூல் கற்றுயர்ந்தவரே' (491), 'இயற்றகு நாவலர்' (438) எனக் கற்ற புலவோர் போற்றிய மரபுகள் எனச் சுட்டிக்காட்டுவதும் கருதற்பாலது. 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என்றபடி இவரும், 'உலகே' (338, 530) 'எழுபுவியே' (212), 'நானிலமே' (507, 533, 541), 'பூதலமே' (224), 'மகிதலமே' (600), 'உலகோர்' (363) என்றெல்லாம் குறிப்பிட்டுள்ளார்.

பாரதி தீபத்தில் காணும் சிற்சில தனி ஆட்சிகளும் குறிப்பிடத்தக்கன. ரகரத்தை அடுத்து வல்லினம்வரும் வட சொற்களை எடுத்தாளும்போது வல்லினத்திற்கியைய றகரம் கொடுத்தே ஆளுகின்றனர். இரணியகெற்பன் (10), சற்பம் (180), கற்கடகம் (198). வட சொற்களிலுள்ள ரகரத்தைத் தமிழில் வல்லின றகரமாக வழங்குவதனைப் பசுந்தமிழ் என்பர் (தக்கயாகப். 35 உரை). எனவே, இவ்வாறு எழுதுதல் முற்காலத்து மரபு என்றே கொள்ளுதல்வேண்டும்.

சில சொற்களில் ககர தகரம் முதலிய வல்லினம் றகரமாக மாறி வழங்குதலும் காணலாம். தற்கோலம் (227), பற்பம் (237), பற்ப நிதி (297), பற்பநாபன் (6) என வருவனபோல்வன மேலே சுட்டிய வகையினவாம்.

வடமொழி ஒலிப்புமுறையில் பகரமிட்டுச் சில சொற்கள் எழுதப்பட்டுள்ளன. இரேபதி (63), வேட்கோபர் (92), தாபரம் (214) முதலியன காண்க.

சில சொற்களின் உண்மை வடிவம் எது என்பதை அறியவும் இந் நிகண்டு உதவுகிறது. நண்டின் பெயர்களுள் ஒன்று 'களவன்'

---

*1. ஆரணங்கே 103; 2. ஏந்திழையே 64, 420, 422, 529; 3. ஒளிவளையே 63; 4. கோமளமே 89, 626; 5. சிறுகொடிப் பூவையரே 363; 6. திருந்திழையே 32; 7. துடியிடையே 67; 8. தெரியிழையே 175; 9. தோகையரே 172; 10. நன்னுதலே 638; 11. நிரைவளையே 98; 12. நேரிழையே 23, 380; 13. பைந்தொடியே 526; 14. மதர்விழியே 545; 15. மொய்குழலே 207, 376; 16. வாணுதலே 100; 17. விளங்கிழையே 531.

என்பது. இச் சொல்லை எதுகையில் அமைத்துக் காட்டுதலால் (198) தெளிவாகும். முன்பு சிலர் இச் சொல்லைக் 'கள்வன்' என்று கொண்டது சரியன்று என்பதனை இது காட்டும். இது போன்றே கொளற்பொருட்டு என்பதனைத் தெரிவிக்கும் உரிச்சொல் தேவுதான்; தெவு (தெவ்வு) அன்று என்பதனைத் தெரிவிக்கும் வகையில், 'தேவு கொளற்பொருட்டே'(443) என மோனைத் தொடையில் இவர் அமைத் துள்ளமையால் தெளிவுபெறும்.

ஒருசில தமிழ்ச் சொற்கள் தமக்குரிய நேரிய வடிவத்திலன்றிச் சிறிது உருவம் பிறழ்ந்து காணப்படுகின்றன. மாதிரு (277), வல்லுழி யே (159), சிகாவலம் (153), திமிங்கிலகீலம் (195), கந்திருவர் (35), மாபெலன் (38), அணிகம் (130), துடை (133) மிதலை (134), குருக்கண் (135), இலோதம் (144) மேழகம் (157), இலாங்குலம் (175), இத்தீ (202), செண்பகம் (202, 214), மாரோட்டம் (207) ஆம்பிலம் (207), வில்லுவம் (208), கரிக்காடு (216), எலவு (218).

அகரம் ஐகாரமாகப் போலி வடிவுடன் வழங்குதலும் சிலவிடத் துக் காணலாம். பிரளையம் (44), சதையம் (62), சமையத்தவர் (77), அபையன் (86), சையிந்தவம் (152). ஒருசில இடங்களில் சில எழுத்துப் பேதமும் இடம்பெறக் காணலாம். திருவிக்கிரமன் (8), விரிச்சிகம் (52), உத்திரம் (58), ஒந்திய (165).

சிற்சில புதுவடிவ அமைப்புக்களும் காணப்படுகின்றன. தான வர் கோபன் (11), குணதிசைக் காவன் (11) போல்வன கருதற் பாலன. இதளியங்கன் (4), நீலகன் (83), விலவங்கம் (163) என்பன போல ஒருசில இடங்களில் பொருள் விளங்காத சொல்வடிவங்களும் தென்படுகின்றன.

'குலீனர் என்ப குல முள்ளோரே' என்னும் திவாகரத்திற்கு (மக்கட் பெயர்) நேர்மாருகக் 'குலீனர் குலமில்லவர்' எனப் பாரதி தீபமுடையார் (105) கூறுகிருர். இச் சொல்லைக் 'குல ஈனர்' என்று பிரித்துக்கொண்டு அதன் பொருளை இவர் பிறழ உணர்ந்தார்போலும். கயாதரரும் இவரைப் போன்றே 'குலீனன் குலமில்லவன்' (113) என்று உரைப்பர். இதனுலும் இவ்விரு நிகண்டிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு எனக் கருதலாம்.

இதுவரையிலும் அச்சிடப் பெருமல் மிகவும் அருகியுள்ள இந் நூலின் சுவடி ஒன்று டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத் தில் உள்ளமை தெரியவந்தது. இதற்கு மாற்றுச் சுவடி வேறு எதுவும் இங்குள்ள சுவடி நிலையங்களில் இருப்பதாகத் தெரியவில்லை. இலங் கையில் இந்நூலின் பிரதிகள் கிட்டுமா என்பது இந்நூல் வெளி வந்து உலாவுகின்ற காலத்து ஒருகால் தெரியவரலாம். இலங்கையில் வழங்கிய சுவடி இச் சுவடிக்குச் சற்று மாறுபட்டது என்பதனைச் சதாசிவம் பிள்ளை எழுதிய குறிப்பிலிருந்து மேலே கண்டோம். இதற்கு இன்னும் சுவடிகள் இனிக் கிட்டுமாஞல் இந்நூல் மேலும் செப்பமுற அமைதல்கூடும்.

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தைச் சார்ந்த உதவியாளர் திரு. சாயிராம் மூலப்பிரதியை எடுத்து எழுதத் தொடங்கிய நேரம் நல்ல நேரம். அச்சுருவம் பெறும் வாய்ப்பை இந்நூல் பெற்றது. இப்பொழுது நூல் நிலையக் காப்பாளராயிருக்கும் பாலகவி மு. கோ. இராமன் அவர்கள், நூற் சுவடிகள் கெட்டுப்போவதன் முன் விரைந்து அச்சிடப் பெற வேண்டும் என்பதில் பெரு விருப்பமுடையவர். அச்சேருத நூல்களை அறிமுகம் செய்து வைக்கும் பணியைத் திங்கள்தோறும் விடாது நூல் நிலையத்தில் நடத்திவருவது ஒன்றே அவருடைய ஆர்வத்திற்குத் தக்க சான்றும். அவர்கள் திரு. சாயிராம் பெயர்த்து எழுதிய பிரதியை நிலையப் பண்டிதருடன் கூடி ஒப்பு நோக்கிப் பிரதிசெய்து தந்து, சென்ற ஆண்டு நவம்பர்த் திங்களில் (25—11—'79) இதனை நூல் நிலையத்துக்காக அறிமுகம் செய்து வைக்கவும் வழிவகுத்துத் தந்தார்கள். அவர்கள் தந்த ஊக்கத்தால்தான் இந்நூலை அச்சிடும் பணியில் முனையலானேன். இதற்குக் காரணகர்த்தர்களான திரு. மு. கோ. இராமன் அவர்களுக்கும் முதலில் பிரதிசெய்த திரு. சாயிராம் அவர்களுக்கும், மற்றும் நூல் நிலைய அன்பர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்த ஏடு டாக்டர் உ. வே. சாமிநாதையர் தேடித் தொகுத்த எண்ணற்ற தமிழ்க் கருவூலங்களுள் ஒன்று. இதனைத் தேடி வைத்த ஐயர் அவர்களுக்கு முதல் வணக்கமும் நன்றியும் உரியவாம். அவர்கள் அந்நாளில் சுவடிகளைத் தொகுத்து வைக்காமல் போனல் இந்த ஓரேடு கூட இல்லாமல் போயிருக்குமே. இந் நிகண்டு நூல் வரலாற்றுக் கேள்வியளவில் நின்று விடாமல் முழுமையாய் வாசித்து அறியும் வாய்ப்பு ஐயர் அவர்களின் திருத்தொண்டினுல் நேர்ந்துள்ளது. தமிழ்த் தாத்தாவாய் இருந்து பெருந்தொண்டு செய்து மறைந்த தமிழ்த் தெய்வமாகிய ஐயர் அவர்கள் இப் பதிப்பினை வாழ்த்தி நல்லாசி வழங்குவார்கள் என்பது திண்ணம்.

இந் நிகண்டினைச் செப்பஞ் செய்வதற்கு நான் ஏற்கெனவே ஆராய்ந்து கொண்டிருந்த திவாகரமும் கைகொடுத்து உதவியது; கயாதர நிகண்டும் பயன்பட்டது. ஏடுகளில் சிற்சில இடங்களில் பூச்சிகளால் துளைபட்டும் பொடிந்தும் போயுள்ள பகுதிகளை ஊகித்துணர அவை துணைநின்றன. ஊகமாகத் தீர்மானித்தவற்றை எல்லாம் பிறைவளைவுக்குள் அமைத்துள்ளேன். முற்றும் சிதைந்த பகுதிகளில் புள்ளிகள் அமைத்துக் காட்டியுள்ளேன்.

பாரதி தீபத்தின் மூலச்சுவடி 37 செ. மீ. நீளமும் 2½ செ. மீ. அகலமும் உள்ளது; 70 இதழ்கள் கொண்டது. இருபுறமும் எழுதப்பட்டுள்ளது. பக்கத்திற்கு 6 அல்லது 7 வரிகள் எழுதப்பட்டுள்ளன. 70ஆம் ஏட்டின் முதற்பகுதியோடு நூல் முடிகிறது; கடைசி இதழின் பின்பக்கம் வெற்றிடம். நூற் பெயர் 'பாரதி தீபம்' என்பது தொடக்கத்தில் தனிப்பட தலைப்போரத்தில் எழுதப்பட்டுள்ளது. தொகுதிப் பெயர்களும் அவ்வாறே தலைப்பகுதியில்

தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு தொகுதியிலும் அமைந்த கலித்துறைகளுக்குத் தனித்தனித் தொடர் எண் தரப்பட்டுள்ளது. நூலின் இறுதியில் பின்வரும் குறிப்புக் காணப்படுகிறது.

> "ஆகத் தொகுதி பன்னிரண்டிற்குக் கலித்துறை
> 663 சிவமயம் பிரமாதூத ஷ்ரீ பங்குனி மீ 11 உ
> செவ்வாய்க்கிழமை திரிதிகை சித்திரை நட்சத்திரம்
> பெற்ற தினத்தில் பாரதிதீபம் எழுதி முற்றின.
> சிவமயம்."

நூல் முழுமையுமாக 665 பாடல்கள் உள. அங்ஙனமாகவும் இறுதிக் குறிப்பில் 663 என்பது பிழையாகும். பன்னிரண்டாம் தொகுதியில் 18, 19, 20 ஆம் பாடல்கள் எழுதப் படவில்லை; மூன்று பாடல்கள் எழுதத்தக்க அளவு ஏட்டில் வெற்றிடம் விடப் பட்டுள்ளது. இந்த ஏட்டிற்கு மூலமான ஏடும் இவ்வாறிருந்ததோ, அன்றி அவை எழுத இயலாத வகையில் பழுது பட்டிருந்ததோ — ஒன்றும் சொல்லக் கூடவில்லை. இந் நிகண்டிற்கு இன்னும் வேறு சுவடிகள் கிட்டினுல்தான் இத்தகைய பகுதிகளில் தெளிவு பிறக்கும்.

பாடல்களில் அமைந்துள்ள பொருள்கள் விளங்கும் வகையில் உரிய தலைப்புகள் தந்துள்ளேன். இவற்றின் துணையால் பாடலில் இடம் பெற்றுள்ள பொருளுக்குரிய பெயர்கள், பொருள்கள் முதலியன எளிதில் விளக்கமாகும். மூல ஏட்டில் கண்டவாறே சந்திகள் பிரிக்கப்படாமலேயே மூல பாடம் அமைக்கப்பட்டுள்ளது. உரிய பொருள் பெயர்களின் மூலங்களை சொற்பொருளாய்வாளர் பிரித்துக் காணுதல் வேண்டும். உரிய சொற்கோவையைப் பிரித்துத் தனியாக உரைபாடம் அமைத்தால்தான் எல்லாரும் எளிதில் அறிதல் கூடும். அதற்குரிய கால அவகாசம் இன்மையாலும், நூலின் அளவுமிகப் பெருகுமாதலாலும் தலைப்பு மட்டும் தந்து இப் பதிப்பினை அமைத்துள்ளேன். இனி, வருங்காலத்தில் உரை பாடத்துடன் கூடிய பதிப்பும் வெளியிடப்படுதல் வேண்டும்.

நூலின் இறுதியில் செய்யுள் முதற்குறிப்பகராதி சேர்த்துள்ளேன். அடுத்து முதற் பத்துத் தொகுதிகளின் பொருளடக்கம் தொடர் எண் குறிப்புடன் அகராதியாக அமைத்துத் தரப்பட்டுள்ளது. இறுதியில் பதினொராந்தொகுதியில் அமைந்த பல பொருள் ஒருசொல், பன்னிரண்டாம் தொகுதியில் இடம்பெற்ற பல்பொருட்கூட்டத்து ஒருபெயராகிய தொகைப் பெயர் முதலியனவும் கொண்ட தனி அகராதியும் தரப்பட்டுள்ளது. சொற்பொருள் விளக்கம் காண இந்த அகராதி பெரிதும் துணைசெய்வதாகும்.

ஓர் ஏட்டின் துணைகொண்டு ஒரு நூலினைப் பதிப்பிடுதல் எத்துணை இடர்ப்பாடுடையது என்பதனை இத்துறையில் வல்ல அறிஞர் நன்கு உணர்வர். வாசிப்பதில் ஒன்றிரண்டு பிழைகள் எங்கானும் நேர்ந்திருத்தல் கூடும். அவற்றை அறிஞர் பெருமக்கள் எடுத்துக் காட்டுவார்களானுல், இனிவரும் பதிப்பு நன்கு அமைய வழி

பிறக்கும்; அவர்கள் பெயர்களையும் நன்றியறிதலுடன் குறிப்பிடுவேன் என்பதனையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இதனைத் தமிழாய்வு இதழில் வெளியிட ஊக்கம் தந்த தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்களுக்கு நன்றி. இதனைத் தனி நூலாகவும் வெளியிட அனுமதி வழங்கிய துணை வேந்தர் பெருந்தகை திரு. ஜி. ஆர். தாமோதரன் அவர்களுக்கும் சென்னைப் பல்கலைக்கழக ஆட்சிக் குழுவினருக்கும் மிக்க நன்றி.

இதனைச் சீரிய முறையில் அமைத்து அச்சிட்டு உதவிய அவ்வை அச்சுக்கூட உரிமையாளர் திரு. வே. சேஷாசலம் அவர்களுக்கும் மற்றும் அன்பர்களுக்கும் என் நன்றி என்றும் உரியதாகும்.

தமிழகராதி திருத்தமுற அமைவதற்குத் தமிழில் உள்ள நிகண்டு நூல்கள் எல்லாம் வழிகாட்டி உதவுவனவாம். எனவே, தமிழில் தோன்றியுள்ள எல்லா நிகண்டுகளும் திருத்தமுறப் பதிப்பிக்கப் பெறுதல் மிகமிக இன்றியமையாதது. இதனைச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியின் பதிப்பாசிரியராகிய பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளையவர்கள் தாம் அப்பணியை ஏற்றுக் கொண்டதுமே உணர்ந்தார். அதனுல் முக்கியமாக நிகண்டுச் சுவடிகளைத் தொகுப்பதிலும் அவற்றை அச்சிடுவதிலும் அவர் முனையலானுர், 'தமிழகராதியின் ஆதார நூற்ருெகுதி' என்னும் பொது மகுடத்துடன் அவர்கள் பதிப்பித்த முதல் நிகண்டு 'நாம தீப நிகண்டு'. இதன் முன்னுரையில்,

> "சூடாமணி நிகண்டொன்று தவிர அச்சில் வந்துள்ள மற்றைய நிகண்டுகட்கு இதுவரை நல்ல பதிப்புக்களே கிடையா. பல நிகண்டுகள் அச்சியற்றப் பெறவேயில்லை. நிகண்டுகள் செவ்வையாய் அச்சிடப்பெருவிடின் தற்காலத்தே அத்தியாவசியமாக வேண்டப்படும் தமிழகராதி திருத்தமெய்திப் பெருநலம் பயப்பதாகாது. வடமொழி நிகண்டுகள் பல 'Sources of Sanskrit Lexicography' என்ற கிரந்த மாலையில் ஐரோப்பிய அறிஞரால் வெளியிடப்பட்டுள்ளமை இங்கே நினைப்பூட்டத் தக்கது, யான் பதிப்பிக்கும் தமிழ் நிகண்டுகளும் 'தமிழகராதியின் ஆதார நூற்ருெகுதி' என்ற மகுடத்துடன் வெளிவரும். இத் தொகுதியில் நாமதீப நிகண்டு முதலாவதாகும்." *

என்று எழுதியுள்ள செய்திகள் சிந்தித்தற்குரியன. இதனைத் தொடர்ந்து அரும்பொருள் விளக்க நிகண்டு, கயாதர நிகண்டு

* நாமதீப நிகண்டுப் பதிப்பு, 1930; முன்னுரை பக். viii.

என்பவற்றையும் செப்பமுறச் சீரிய முறையில் பதிப்பித்து அவர்கள் வெளியிட்டனர்.

பேராசிரியர் அவர்களுடனிருந்து பணியாற்றியபோது அவர்களுடைய விருப்பத்தினை நன்கு அறிய இயன்றது. அவர்கள் சென்ற வழியைப் பின்பற்றி நிகண்டு நூல் வெளியீட்டில் ஈடுபட வேண்டும் என்னும் அவா எனக்கு இயல்பாகவே ஏற்பட்டிருந்தது. தமிழ்க் கலைக்களஞ்சியம் ஆறுவது தொகுதியில் தமிழ் நிகண்டுகளின் வரலாற்றை விளக்கமுற எழுதும் வாய்ப்பும் (பக்கம் 437-440) எனக்குக் கிட்டியது. பேராசிரியரின் கொள்கை உந்துதலால் பல்கலைக் கழக மானியக் குழுவின் உதவியுடன் திவாகரத்திற்கு ஓர் ஆராய்ச்சிப் பதிப்புக்கான அடிப்படைப் பணி செய்ய இயன்றது.

திவாகரத்திற்குப் பின்னர் அதனை அடியொற்றிவந்த அது போன்ற தனிச் சிறப்புடைய நிகண்டு பாரதிதீபம் ஆகும் என்பதனை அவர்கள் சொல்ல அடிக்கடி கேட்டிருக்கிறேன். டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலைய அன்பர்களின் தூண்டுதலும் ஒத்துழைப்பும் இப் பாரதிதீப நிகண்டினை முறபடப் பதிப்பிக்கும் பேற்றினை நல்கியுள்ளன. பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் தொடங்கி வைத்த நிகண்டுப் பதிப்புப் பணி இன்றும் தொடர்கிறது. பக்கத்திலிருந்து அவர்கள் வழிகாட்டி உதவுவது போன்ற உணர்ச்சியுடன் இப் பணியைத் தொடர்ந்து ஆற்றி வந்துள்ளேன். என்றும் அவருடைய ஆசி இருந்து கொண்டிருக்கும் என்னும் துணிவுடையேன், அவருடைய திருவடிகளை வணங்கி வாழ்த்தி, இம் முகவுரையைத் தலைக்கட்டுகிறேன். இறைவன் திருவருளை எண்ணியெண்ணி மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகிறேன்.

சென்னை
30—6—80

*மு. சண்முகம் பிள்ளை*

# பொருளடக்கம்

# பாரதிதீபம்

முதலாவது

## தெய்வப் பெயர்த் தொகுதி

**சிவன் பெயர்***

1. அரனிறை வன்சிவன் சங்கரன் நித்தனம லன்கங்கா
தரனுமை பங்கன் மலைவில்லி தற்பரன் ருணுச்சம்பு
புரதக னன்புனி தன்பிறை சூடி புலியதளோன்
பரசு தரன்கயி லாயன் கபாலி பசுபதியே. 1

2. மழுவாளி யானையுரித் தோன்முக் கண்ணவன் மானிடத்தோன்
றழலார் கரன்பித்தன் பிஞ்ஞகன் சூலதரன் பெருமான்
கழையான் முத்தன் றிரியம்பகன் காளகண் டன்பணிலக்
குழையான் பிநாகியை யானன ஞதிசெங் கோலத்தனே. 2

3. விடையவன் காம தகனன்கங் காளன் விமலன்சித்தன்
சுடலையி லாடி கறைக்கண்டன் கூற்றுதைத் தோன்சடையோ
னடநவில் பாத னன்னுரி பாகத்த னுதன்விடைக்
கொடிய னுருத்திர னீறணிந் தோன்முடிக் கொன்றையனே. 3

---

* 1. இத்தலைப்பினைப் போலவே பின்வரும் தலைப்புகளிலும் திரு மால் பெயர், பிரமன் பெயர் என்றாற்போலப் 'பெயர்' என்பதனைச் சேர்த்துப் படித்துக்கொள்க.

2. ஒரு பொருளுக்கு உரிய பெயர்கள் பல பாடல்களில் தொடர்ந்து அமைவதும் உண்டு.

3. சில இடங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களும் ஒரு பாடலில் இடம் பெறுதல் காணலாம்.

4. இன்னும் சில இடங்களில் குறித்த ஒரு பொருளின் பெயர் அடுத்து வரும் பாடலின் முதற் பகுதியில் தொடர்ந்து வருதலும் உண்டு. அவ்வாறு பாடலின் பகுதி அளவில் தொடரும் இடங்களில் தொடர்ச்சிநிலை காட்ட அப் பொருள்-தலைப்பு மீண்டும் தரப்பட்டுள்ளது.

5. தொடர் எண்களும் பொருள்-தலைப்புகளும் பதிப்பாசிரியரால் சேர்க்கப்பட்டன ஆகும்.

4. பிறப்பிலி கண்ணுத லீசன்பெம் மான்பெண் ணிடத்தனத்தன்
மறைத்தவன் யோகி மதிசூடி யோனந்தி வண்ணனம்ப
னிறைப்பணி யாபர ணன்பாண் டரங்க னிதளியங்கன்
கறைக்கடு வுண்டவன் காமாரி காலனைக் காய்ந்தவனே. 4

### திருமால்

5. மாதவ னச்சுதன் வாமனன் கோவிந்தன் மாயன்மது
சூதனன் கண்ணன் முராரி முகுந்தன் றுளவணிந்தோன்
சீதரன் கேசவன் குனுந்தி பூத்தோன் றிருவின்பிரான்
பீதக வாடையன் சங்காழி யேந்தி பெரியவனே. 5

6. அரிநெடு மாலவன் றுமோ தரனர விற்றுயில்வோன்
கருட பதாகையன் காகுத்த னத்தன் கமலக்கண்ணன்
பரியுரு வானவன் பாற்கட லோன்பற்ப நாபன்பச்சை
மரகத மேனியன் பஞ்சா யுதன்கடல் வண்ணத்தனே. 6

7. விண்டு நராந்தகன் சாரங்க பாணியன் வெற்பெடுத்தோன்
கொண்ட னிறத்த னுலகளந் தோன்குஞ் சரமுதைத்தோன்
வண்டுரு வத்தன் கருணு கரனர வாளரிபா
ருண்டவன் கோவல னுரா யணன்புரு டோத்தமனே. 7

8. கடற்றுயில் வண்ணன் றிருவிக் கிரமன் கவிப்பின் சென்றோன்
படப்பணி யாடி பரந்தாம னித்தன் படியிடந்தோ
னிடைக்குல நாத னுபேந்திர மூர்த்தி யிறையவனேழ்
விடைக்கெதி ராமவன் காயா மலர்வண்ணன் விண்ணவனே. 8

### பிரமன்

9. போதக னுந்தியில் வந்தோன் படைத்தவன் பூமிசையோ
னோதிம வாகனன் வேதா விரிஞ்ச னுபநிடத்து
நாதன் பிதாமக னுன்முகன் மான்மக னுண்மலரோன்
வேதன் புனிதன் விதாதா முதுவன் விதியயனே. 9

10. இரணிய கெற்பன் பரமேட்டி மண்பொதுத் தந்தையிறை
குரவனெண் கண்ணினன் றுதா வெகினக் கொடியுடையோன்
பிரமன் வரன்புவி தந்தோன் மறையவன் பீதகஞ்சே
ருருவன் புராதன னம்போ ருகத்தி லுறைபவனே. 10

### இந்திரன்

11. வானவன் வேள்விப் பிரான்பாக சாதனன் மஞ்ஞையுரு
வானவன் கோகில வண்ணன் வலாரி யரியமரர்
கோனசு லத்தின் சிறகரிந் தோன்குலி சப்படையோன்
முனவர் கோபன் குணதிசைக் காவன் சசிபதியே. 11

12. புரந்தரன் வாசவன் விண்ணோ ரிறையவன் பொன்னகரிந்
திரன்புனி தன்வெள்ளை வாரணத் தோன்வச் சிரகரத்தோன்
றருந்தரு வாளி சதக்கிரு தாகண் டலன்மகவான்
கரும்புய லூர்தி சுரர்பதி யாயிரக் கண்ணினனே. 12

*முருகன்*

13. முருகன் கடம்பன் குமரன் சுவாமி முதலவன்சேய்
குருகின் பெயரிய குன்றெறிந் தோன்கொடிச் சேவலன்வேற்
கரன்கந்த ஞறுமு கன்வள்ளி நாயகன் கார்த்திகையன்
சுரர்தம் பதியளித் தோன்செட்டி வேலன் ஞெழுபவனே. 13

14. சூத குலாரி நகாரி சரவணத் தோனறுமீன்
காதலன் சூர்ப்பகை சேந்தன்செவ் வேள்பொழி கார்க்குறிஞ்சி
நாதன் சிகாவள வாகனன் சேய்வெட்சி நாண்மலரோன்
ருதவிழ் காந்தளந் தாரோன் விசாகன்சொற் சண்முகனே. 14

*விநாயகன்*

15. சங்கரன் மைந்தன் விநாயகன் சண்முகன் றன்முன்வந்தோ
னோங்கர ஞனை முகத்தோன் கணபதி யாகுபரிப்
புங்கவன் மால்மரு கன்ஞெற்றைக் கொம்பன் பொழி
[மதத்தோன்
பங்கய மோதகம் பாசாங் குசம்பயில் பாணியனே. 15

*மன்மதன்*

16. மார னனங்கன் மதன்சம்ப ராரி மதிக்குடையோன்
காரிருள் வாரணன் பூவாளி மன்மதன் கந்தர்ப் பன்வே
ளாரவில் லாளி குயிற்கா களத்தனைந் தம்புடைய
வீரன் வசந்தன் ரதிபதி மீனவன் வில்லவனே. 16

*மன்மதன், வயிரவன்*

17. காமன் மனேபவன் சித்தச னன்கரும் பாளிகடல்
மாமுர சன்றென்றற் றேரோன் மகரக் கொடியவனுஞ்
சாமளன் காரி வடுகன் வயிரவன் சாத்தனையன்
நீமையில் காரியன் சாத வாகனன் சிவன்மகனே. 17

*குபேரன்*

18. இருநிதி யாளி குபேரன் றனத னெரிவிழிசே
ரரனுயிர் நண்ப னிதிக்கோ னியக்க னளகைப்பிரான்
பொருளிறை பிங்கல னுத்தர திக்கனன் புட்பகன்மந்
திரிகன செல்வ னரவா கனன்வச் சிரவணனே. 18

### அருகன்

19. அருக னசல னறவாழி யந்தண ளுதியண்ணல்
வரதன் சினவரன் பொன்னெயில் நாதன் மலரின்வந்தோன்
பரமன் புனித னதிகுண னெண்குணத் தோன்பகவன்
விரதன் சினேந்திரன் புண்ணிய மூர்த்தி விளங்கொளியே. 19

20. பூரணன் பண்ணவன் வேலைவென் றோன்முக் குடைப்புங்கவன்
வீரன் றிகம்பரன் விண்ணவன் றேவன் விறன்முனிவன்
காரணன் சாந்த னருளாளி வேந்தன் கலையுணர்ந்தோன்
பேரறி யாசன னுசா னசோகின் பெருந்தகையே. 20

### புத்தன்

21. அண்ண லருங்கலை நாயகன் போதிய வன்பகவன்
புண்ணிய ளுதி முதல்வன் புனிதன்சொற் புங்கவன்மெய்த்
தண்ணளி யாளன் சிவன்வரன் புத்தன் றருமவருள்
நண்ணிய செல்வ னகளங்கன் பூவி னடந்தவனே. 21

22. சாந்தன்முக் குற்றங் கடிந்த பிரான் பஞ்ச தாரைவிட்டோன்
மாந்தர்க் கருளிடு வோனேக தேவன் மறைவயிரி
காந்த னனந்த விலோசன ளுதி கடவுளரி
யேந்திய நீழலன் வாமன்சிங் காதன மேற்றவனே. 22

### யமன், யமபடர்

23. சமனன் செங்கோ லிறைசண்டன் மறலி தருமன்றென்ன
னமனந் தகன்யமன் வெங்காலன் கூற்று நடுவனென்பர்
அமர்வெஞ் சமன்சண்டன் வெங்கூற்றுக் கால னடன்மறலி
நிமிர்தண் டதரன் யமன்படர் பேரென்பர் நேரிழையே. 23

### பார்வதி

24. ஆரியை சத்தி யயிராணி யம்பிகை யாளகண்ட
பூரணி வல்லி யுமைசங் கரிமுப் புவியளித்த
காரணி முக்க ணிமைய மடந்தை கவுரியரன்
பாரி புராதனி யெண்ணுன் கறஞ்செய்த பார்வதியே. 24

### கங்கை

25. சீநதி சிந்து நதிசுர ராறு திரிபதகை
வானதி யாபகை மந்தா கினிவி மலைதவள
மான பகீரதி யாகாச காமி யமரர்நதி
தீநெறி மேவிய பாவங்க டீர்க்குஞ் சிவகங்கையே. 25

*திருமகள்*

26. பானிற வாரி யமுதத்துள் வந்தவள் பைந்துளவோன்
மேனியில் வாழும் விபுத புராதனி வேண்டுமின்ப
மானவை நல்கு மபிராமி மாப்பொறி யாக்கஞ் செல்வி
பூநல னுற்றவள் செய்யவ ளிந்திரை பொன்றிருவே. 26

*காளி*

27. சண்டிமுக் கண்ணி பயிரவி தாருகற் காய்ந்தவள்சா
முண்டியெண் டோள்வல்லி யாமளி காளி முடிக்கவுரி
மண்டிய பேய்க்கொடி மாகாளி யோகினி மாரிவடக்
கொண்டொடி மாதிரு வேதாளி யாளியை யூர்பவளே. 27

*காளி, மூதேவி*

28. காரியைப் பெற்ற கொடிக்காடு காள்கொற்றி கார்வடுகி
சூரிசொன் மாரி சுடர்மூ தணங்கென்பர் தொன்முகடி
காரிருட் காக்கைக் கொடிச்சி கலதிதவ் வைகழுதை
யூரிதிரைச் சேட்டையள் மூதேவி கேட்டையென் ரேறுதுவரே. 28

*கலைமகள்*

29. நாமகள் பாரதி கீர்வாணி வெள்ளை நளினவல்லி
பாமகள் சொல்லின் கிழத்தி கலைமகள் பானிறத்தி
தாமரை யாசன நாரி பனுவற் றமிழ்மடந்தை
தேமல்கு சாவித் திரிவாணி காயத்திரி யென்பரே. 29

*கொற்றவை*

30. மாலுக் கிளையவள் நாரா யணிகு மரிகவுரி
பாலைக் கிழத்தி பகவதி பண்ணம் பணத்தியையை
நீலிச் சயத்தி மயிடனைக் காய்ந்தா ணெறிவிசையை
யோலப் பணிலத்தி கார்த்திகை கேசரி யூர்திருவே. 30

*கொற்றவை, இந்திரன் தேவி*

31. மேதித் தலையவ ளெண்டோளி விந்தை விறற்கொற்றவை
காதிப் பொருகன்னி யந்தரி பேரென்பர் கற்பகத்தின்
போதுற்ற வல்லி சசியயி ராணி புலோமிசைமெய்த்
தீதற்ற சுந்தரி யிந்திரன் றேவி செறிபெயரே. 31

*யோகினி, வானவர் மாதர், தெய்வப்பெண் பொது*

32. மாய மடந்தை வலவை யிடாகினி வஞ்சனிசூ
ராயவள் சண்பனி யோகினி தானென்ப ராலரம்பை
தூயர மாதென்பர் வானவர் மாதரைச் சூரணங்கு
சேயதெய் வப்பொதுப் பெண்பெய ராகுந் திருந்திழையே. 32

*தேவர்*

33. வானவர் தேவரிமை யோர்புத் தேளிர் வரர்விபுதர்
தானவர் மாற்றல ரண்டர்விண் ணோரமு தாசனர்மெய்ஞ்
ஞான விலேகர் புலவோ ரமரர் நலக்கடவு
ளானவ ராதித்த ரும்பர்பொன் னாட்டி லமர்ந்தவரே. 33

*கடவுட் பொது, அசுரர், இராக்கதர்*

34. பகவர்பட் டாரகர் புங்கவர் பண்ணவர் தீர்த்தரென்றே
புகலுங் கடவுட் பொதுப்பே ரவுணர் பொருமசுரர்
தகுவர் தயித்தியர் தானவர் நான்கும்நி சாசரரு
மிகலு மரக்கர் நிசிசர் நிசாச ரிராக்கதரே. 34

*அரக்கரினத்தவர், விஞ்சையர், கந்திருவர்*

35. கரையாது தானர் நிருதர்வெஞ் சால கடங்கடரு
முரைசா ரரக்க ரினத்தவர் விஞ்சைய ரோங்குவித்தியா
தரர்கே சரரென்பர் கின்னரர் வீணைத் தனுவினர்தந்
திரர்யா முடையவ ரென்னலு மாங்கந் திருவரையே. 35

*பசாசு*

36. கழுது பசாசு பிரேதகஞ் சோகு கடிகண் மணீ
யழலுமிழ் கூளியின் வேதாளஞ் சாவோ டணங்கலகை
பழிதரு கூளி கிருத்திமஞ் சாதகம் பாரிடமா
மொழிதரு பூதங் கணங்குற ளாக மொழிகுவரே. 36

*ஆகாயம், காற்று*

37. அம்பர மாசினி யாகாய மந்தர மண்டமங்குல்
உம்ப ரிடங்குடில் விண்வெளி மாக முயர்ககன
மம்பரம் வானம் விசும்பென்பர் வந்துப் பரிசனன்வா
தம்பவ னங்கொண்டல் கோடை சமீரணன் சதாகதியே. 37

*காற்று, தென்றல்*

38 ஊதை மருத்துவங் கூழ்கா லனில முலவைவளி
கூதை யுயிர்ப்பரி மாருத மாபெலன் கோதையொலி
சீதளவாடை வெங் காற்றென்பர் தென்றறென் காலிரத
வாதம் வசந்த மலையா னிலமந்த மாருதமே. 38

*மேல்காற்று, குளிர்காற்று, வடகாற்று, கீழ்காற்று, சுழல்காற்று, அங்காரகன்*

39. குடகாற்றுக் கோடை குளிர்காற்றுக் கூதையு மூதையுமாம்
வடகாற்று வாடை வடந்தை குணதிசை வந்துகொண்ட
லடர்காற்றுச் சூறை வளியே சுழலு மனிலமென்பர்
சுடர்தீக் கனலன லோன்சுசி யாரழல் தூமத்தனே. 39

*அங்காரகன், நெருப்பு*

40. அரிதக னன்றழல் பாவகன் வன்னியங் காரகன்பே
ரெரிபுவ மானன் ஞெகிழி யுதாசன னேகனலி
திரிகுணன் வாயு சகன்சித் திரபானுச் சிகிசுவலன்
நிரையெழு நாவன் றனஞ்செய னங்கி நெருப்பென்பரே. 40

*ஊழித்தீ, தீக்கடைகோல், விளக்கு, தீக்கடவுள்*

41. தாழும் வடவை கடையிற் கனலுத் தரமடங்கல்
ஊழியி னங்கி ஞெலிகோல்செந் தீக்கடை யுங்கொழுங்கோல்
சூழுஞ் சுடர்விளக் குந்தீப மென்பர் சுடர்க்கனலில்
வாழு மணங்குவெம் பாவக னாக வகுத்தனரே. 41

*நீர்*

42. வாரி சலஞ்சலி லந்தோய மம்பு வனம்புவன
நீருத கம்பயம் வார்பாணி யங்குசம் நீரமப்பு
நார மயஞ்சம் பாங்கங் கமலம்பு னல்லறலாஞ்
சேரம் புதமலர் கீலாலங் கோவுறை சீவனமே. 42

*மேகம்*

43. மேகம் வருணம் முகில்சீமு தம்விரி புட்கரமே
யாகுங் கவந்தங் கனரதஞ் சீவனி யாமமுதம்
பாகங்கொள் பரண்டம்நற் பானீய மாமள கம்பரதம்
போகங்கொள் காண்ட மமப்பெய ராகப் புகன்றனரே. 43

*பெருவெள்ளம், நீர்க்கடவுள், சூரியன்*

44. வாரி பிரளையம் நீத்தம் பெருவெள்ள மாம்வருணன்
நீரிறை பாச தரன்பாசி யென்று நிறைகிரணன்
சூரிய னுதவ னென்றூழ் கனலி சுடர்க்கதிரோன்
மேரு வலஞ்செய் யரியினன் பானு விருச்சிகனே. 44

*சூரியன்*

45. தரணி தினகரன் வெய்யோன் றபனன் சலசபதி
யிரவி திவாகரன் ஞாயிறு பாற்கர னெல்லைகதிர்
பருதி பகலவன் சான்றோ னருக்கன் பதங்கனெளி
யருண னிருள்வலி மார்த்தாண்டன் காலைய னுதித்தனே. 45

*சந்திரன்*

46. மதியம் புலிதிங்கள் மானிடத் தோன்மறு மண்டலத்தோன்
விதுவிந்து வேனின் குடையா முடுபதி வெண்பிறைய
முதகதி ரல்லவன் சோமன் சசிகு முதமலர்த்தும்
பதிசந் திரனிர வாளி குபேரன் பனிக்கதிரே. 46

*செவ்வாய், புதன்*

47. சேயரி வன்குசன் வக்கிரன் பூமகன் றீயுருவம்
ஆயவங் காரகன் செவ்வாய் நிலமக னரலென்பர்
தூய மதிமகன் பாக னருணன் மெய்த் தூதுவன்மால்
மேய கணக்க னனுவளி பண்டிதன் மேதையனே. 47

*புதன், வியாழன்*

48. புந்திதன் சாமன் றனவன் புலவன் புதன்றெளியுஞ்
சிந்தைய னென்பர் குருவிதி யந்தணன் றேவர்குரு
மந்திரி பீதக னண்டளப் பான்பொன் மதிமறையோன்
பைந்தரு வாளிதன் னசான் வியாழம் பகற்பதியே. 48

*வெள்ளி, சனி*

49. திங்கள் பிரசுரன் சல்லியன் வெள்ளி சிதன்பளிங்கே
சுங்கவன் மந்திரி மாமழைக் கோள்புகர் சுக்கிரன்பேர்
பங்கு சவுரி முடவன் க(ரியவன்) ........
(த)ங்கிய கீழ்மகன் மந்தன் சனிசந்திர சாவகனே. 49

*அனந்தன், இராகு, கேது, மேடராசி, இடபராசி*

50. சேட னனந்தன் கரியோ னிராகுச் சிவந்தவண்ணன்
கூடிய கேது (க் கொறி மையுதள) ... வருடை
மேட விராசி பசுமூரி யேறுவெம் பாறல்புல்ல
மாடர் பாண்டி லிடப விராசிக்கு வாய்த்ததுவே. 50

*மிதுனம், கர்க்கடகம், சிங்கம்*

51. இவரு மியாழ் மறிதண்டு பாடவை உவ ளெயிரமடை
சவைமக ளாகு மிதுன விராசி தயங்குகுளிர்
கவையடி ஞெண்ட லவன்கள வன்கற் கடகமென்பர்
திவளரி மாப்புலி யாளியை யானனஞ் சிங்கத்ததே. 51

*கன்னி, துலாம், விருச்சிகம், தனு*

52. நிலமிகு பெண்பெயர் கன்னி யிராசி நிறைக்கட்டளை
துலைகுல வாணிகன் கோனிறுப் பானுந் துலாத்ததென்பர்
நலமிகு தேள்தெறுக் கால்பறப் பானென நாட்டியபேர்
தலைமை விரிச்சிகங் காண்டீபஞ் சாபந் தனுவென்பரே. 52

*மகரம், கும்பம், மீனம், அசுபதி, பரணி*

53. குலமீன் சுறவு கலைமக ரங்குயஞ் சாடிகும்ப
மலைமீன் பலபெயர் மீனமென் றேதுவ ரைப்பசியே
தலைநா ளிரலை பரியே யசுபதி தாசிசுல்லி
பலகான மீன்தரு மன்னு ளடுப்புப் பரணியதே. 53

*கார்த்திகை, உரோகணி*

54. வானன ளக்க ரிருலாரல் நாவிதன் மன்னுமறு
மீனமு லங்கியென் ரேதுவர் கார்த்திகை வெல்சகட
மூனமில் வையம்வெஞ் சாகாடு பண்டி யுருள்பெருந்தே
ரானவை தன்னை யுரோகணி யாக வறைவர்களே. 54

*மிருகசீரிடம், திருவாதிரை, புனர்பூசம்*

55. மதிநாள் நரிப்புற மான்றலை மார்கழி மாழ்கிந்திரன்
முதுபாலை வெய்யவன் மும்மீன் மகசிர முதுரையே
யதிசா தனங்கை யரன்றின மாதிரை யாமதிதி
புதுநாள் புணர்தங் கரும்பா வணம்புனர் பூசத்ததே. 55

*புனர்பூசம், ஆயிலியம்*

56. புனிதமும் பாலையு மூங்கிலு முன்னைப் புணர்தமென்பர்
வனவண் டுடன்கொடி றேகுளந் தேவர் வரகுருநா
ளனையன பூசம் பெறும்பெய ராமென்ப ராயிலியந்
தனையர வின்றினங் கவ்வையென் றேமறை சாற்றியதே. 56

*மகம், பூரம்*

57. கொடுநுகம் வேட்டுவன் வாய்க்கா லெழுஞ்சனி கூறெழுவாய்
வடிவுறு மாசி பிதிர்தின மாமகம் வன்கணையே
யிடைய தெழுஞ்சனி நாவிதன் றுர்க்கை யெலிபகவ
னுடைய தினந்தனை யேபூர மாகவுரை செய்வரே. 57

*உத்திரம், அத்தம், சித்திரை*

58. பன்னு கடைய தெழுஞ்சனி பாற்குனி பங்குனிவா
னுன்னிய மாலி தினமுத் திரங்களி ரேங்குநவ்வி
கன்னி கைம்மீ னைவிரல் காமரங் கௌத்துவ முமத்தந்
தென்னெறி நெய்வான் மீன்றுவட் டாத்தினஞ் சித்திரையே. 58

*சோதி, விசாகம், அனுசம்*

59. வெறுநுகம் வீழ்க்கை வளிநாள் விளக்கு மிகுமரக்கால்
பெறுவது சோதி சுளகுவை காசி பெரிதனனுண்
முறமுற்றி லென்பர் விசாகம்புற் ருளி முடப்பனைதே
ளறிதரு போந்தை யதுவே யனுசத் தடைத்ததுவே. 59

*கேட்டை, மூலம், பூராடம்*

60. எரியழல் வேதிவல் லாரை விளங்கொளி யிந்திரைநாட்
டருவது கேட்டை யசுரர்தினங் கொக்குத் தாவிலன்றில்
குருகுசெந் தேட்கடை யாமானி மூலங் குறிமுற்குளம்
பொருவி லுடைகுளம் பூராடம் நீர்த்தினம் பொற்றுனமே. 60

*உத்திராடம், திருவோணம், அவிட்டம்*

61. ஆனி கடைக்குள மாடியுத் திராடம் விச்சுவநாள்
தானுறை நாளென்ப தாகுஞ் சிரவணஞ் தாவுலக்கை
சோணை வயிர மரிதின மோணஞ் சுடரவிட்ட
மீனது காக்கை வசுநாட்புள் ளாவணி மேவியதே. 61

*சதையம், பூரட்டாதி, உத்திரட்டாதி*

62. வருணன் றினங்குன்று போர்சுண்டன் செக்கு வருசதையங்
குரைபுரட் டாதியு நாழியு முற்கொழுங் கோலுமென்ன
வருபெய ராகி யதுபூரட் டாதி யறிவனன்று
ளுறைமுர சங்கொழுங் கோல் முற்றிலுத்திரட் டாதியதே. 62

*இரேவதி, அருந்ததி, நட்சத்திரம், காலநுட்பம்*

63. சுடரார் புருடன் றினந்தோணி சூலந் தொடர்ந்ததொழுக்
கடைநாள் பஃறிசொன் னுவா யிரேபதி சாலிகற்பின்
வடமீ னருந்ததி யாந்தாரை தாரகை வாள்கணம்நா
ளுடுமீன் கலைதுடி யோர்கால நுட்ப மொளிவளையே. 63

*நாழிகை, பொழுது, பின்னை, உச்சி, காலை, சந்தி*

64. கடிகை யிருத்தை விகலைபதங் கன்னல் நாழிகையாம்
படர்தரு காலம மையம்வெங் காலை பதம்பொழுதா
முடனுறை பிற்றையும் பின்றையும் பின்னை நலுச்சிபக
லடர்தரு காலை விடியலுட னந்தி சந்தியதே. 64

*பகல், யாமம், வெயில், இரவு*

65. எல்லை நெடும்பகல் யாமமுஞ் சாம மிலகுவெயில்
சொல்லிய வாதப மென்றா ழிரசுனி சூழுமிரு
ளல்லு நிசாநிசி யாமினி யாமமடர் திமிரம்
புல்லிய கங்குல் தமம்நத்தம் நீலம் பொருமிரவே. 65

*தினம், முனநாள், பக்கம், மதிமுதற் பக்கம், இரண்டாம் பக்கம்*

66. தினமா னியம்பகல் வைகல் திவசந் திவாவெனலாம்
முனநாள் நெருனலு நென்னலும் பக்கம் மொழிதிதியாம்
வனமேவு திங்கள் மதிமுதற் பக்கம் வகுத்தநந்தை
யினமேவு பத்திரை யாமிரண் டாம்பக்க மேந்திழையே. 66

*திரிதி, சதுர்த்தி, பூரணம், பானுள், கணம், ஊழி, வெப்பம், முதுவேனில்*

67. சயைபக்க மாகுந் திரிதி யிருத்தை சதுர்த்தியஞ்சா
கியபக்கம் பூரணம் பானு ளரையிருள் கேடில்கண
முயர்வுற்ற மாத்திரை யாமுழி கால முருப்பம்வெப்பந்
துயருற்ற கோடை முதுவேனி லென்பர் துடியிடையே. 67

*சிறுபொழுது*

68. சிறுவரை யொல்லே சிறுபொழு தாமும்பர் சேர்வலன்மேக்
கறிபவர் மேசென்பர் கார்கூதிர் முன்பனி யப்பின்பனி
விறலிள வேனில் முதுவேனி லாறு மிகுபருவ
முறையி லிரண்டிரண் டாந்திங்க ளாவணி முன்னெண்ணலே.68

*மழைபெய்காலம், பனிப்பருவம், பருவம், காலம், யுகம், நான்முகன் வாழ்நாள்*

69. மழைபொழி நாட்சரங் கூதிர் பனிப்பரு வஞ்சிரனுள்
பழைய பளங்கா னியமே யிருதுப் பருவமியாண்
டொழுகிய கால மடங்கலு மூழியு மோருகமாங்
கழிதரு நான்முகன் வாணுள் சொலிற்கற்ப மாமென்பரே. 69

*வாழ்நாள், வருடம், காலம்*

70. தெளியாயு ளாயுகம் வாணு ளுதகஞ் சிதறியுறை
துளியாலி சீகரந் தூவல் பெயல்மாரி தூறலுடன்
வளியார் பெயலே துவலேயு மாசில் வருடமதாங்
களியாரு மூழியு மூழ்முறையுஞ் சொல்லிற் காலமதே. 70

*மேகம், இடி*

71. மஞ்சே மழைமுகில் மால்கொண்டல் செல்கனம் வான்மைமே
கஞ்சீத மம்புதங் கார்குயிற் கந்தரம் விண்டுகொண்மூ
வுஞ்சீமூ தம்விண் ணெழிலி புயலென வோதுமுரு
முஞ்செல் லசனி யுருமே றிடியாய் மொழிகுவரே. 71

*துவலே, மழைவிடல், விடாமழை, துளி, பெருமழை, ஆலங்கட்டி*

72. சிகரஞ் சிதர்சொரி தூவல் பிதிர்சீ கரந்துவலே
பகருந் தலேயல் மழைவிடல் சோனே பனித்தல்விடா
துகவிண் சொரிதல் பெயல்துளி யாலி யுறைதுளியா
மகலிலா சாரம் பெருமழை யாலி யாலங்கட்டியே. 72

*மின்னல், இடி, பனி, பரிவேடம், கரும்புவில், வானவில்*

73. மிளிர் தடித்துச் சம்பை வித்துருச் சஞ்சலே மின்னுமிடி
யொளிபேரி குழிமநீர்து கினம்பனி யூர்கோள்வட்டம்
களிபரி வேடம் தரங்கரங் காண்டங் கருப்புவில்லா
மெளில்வான வில்லிந் திரவில்ல தென்ப ரிரட்டைவில்லே. 73

*பாரதிதீப வரலாறு*

74. திதமா வுறைநளி னத்தடஞ் சூழ்தென் கடம்பையின்சொல்
லிதமா னதுசெறி பாரதி யேத்தியென் னேதவிருள்
விதமே வருந்தல வேவைத்த பாரதி தீபந்தன்னில்
முதலாவது தெய்வப் பேராந் தொகுதி முடிந்ததுவே. 74

இரண்டாவது

## மக்கட் பெயர்த் தொகுதி

*பற்றற்ருேர்*

75. மாதவ ரையர் துறவோர் முனிவர் வரரவர்த-
போதனர் மெய்ய ரடிக ளிலிங்கிகள் பொய்யிகழ்ந்த
நாத ரியோகிகள் ஞானு திகரைம் புலன்வெல்லுஞ்
சாதகர் பண்ணவர் மிக்கோ ரறிவர் தவத்தவரே. 1

76. அறவ ரருந்தவர் குற்றங் கடியு மவர்பெரியோ
ருறுவர் கனிகிழங் குண்பவர் கோப மொழித்தவர்பூ
விறைவர் புலவ ரிருளற்ற சிந்தைய ரேற்றவருட்
செறிபவர் மோனிகள் பற்றற்ருேர் பேரெனச் செப்பினரே. 2

*சைவத்தவப்பாலினேர், நாராயணன் சமயத்தவர், சமணர்*

77. பாலாய காளா முகர்மா விரதியர் பாசுபதர்
மேலாய சைவத் தவப்பாலி னேர்மிகு பாகவதர்
மாலாய நாரா யணன்சமை யத்தர்வண் சாவகரோ
டாலா வருக ரெனுஞ்சம ணுசீ வகத்தவரே. 3

*புத்தர், சமண் முனிவர், சடைமுடியோர், பார்ப்பார்*

78. சீவகர் சாக்கியர் புத்தர் பவுத்தருந் தேரருமென்
ருவது மத்தவத்தோ ரமண் சாரணர்ச் சமண்முனிவ
ரோவறு தாபத ராகுஞ் சடைமுடி யோர்வேதியர்
வீவறு முப்புரி நூலர்பார்ப் பாரென்ப வேதியரே. 4

*பார்ப்பார், ஓத்துரைப்போர், கலைவல்லவர், மிக்கவர்*

79. அறுதொழி லாளர் மறையவர் பூசுரையர் மிக்கோ
ருறவுறு வேள்வியர் முற்குலத் தோரென்ப ரோத்துரைப்போ
ரறிகணக் காயர் கவிஞர் கலைவல் லவருயர்ந்தோர்
விறலறி வுற்றவர் சான்ருே ருலகுடன் மிக்கவரே. 5

*புலவர், மிகக்கற்றவர்*

80. கவிஞர் கலைஞ ரறிவோர் முதுவர்கற் ருேர்புதரே
யவையவர் மூத்தவ ரான்றவ ராய்ந்தவ ரானசங்கஞ்
சவைபுல வோரென்ப தாத்ம விபுதர் தனிநிபுணர்
கவலையில் லாத குசலரென் போர்மிகக் கற்றவரே. 6

*மூத்தவர், பெருமையின் மிக்கவர்*

81. சூரவோன் சுவாமிமன் கோமான் பதியத்தன் கோவையனும்
பெருமானு நாதனு மீசனு மூத்தவர் பேரதென்ப
ரருளாளர் குரிசிலு மேந்தலுஞ் செம்மலு மண்ணலுமாய்
வருபேர் பெருமையின் மிக்கவர் பேரென வாய்த்ததுவே. 7

*எப்பொருட்கும் இறைவன், உயர்ந்தோர்*

82. ஆதிபிரான் செம்மல் கேள்வனிறை வனர சன்மன்ன
ஞதன் றலைவன் கொழுந னதிபன்மன் ஞயகன்சேர்க்
காதல னீசன் பதிகாந்தன் காவலன் கோவெனலா
மோதெப் பொருட்கு மிறையுயர்ந் தோரை யுலகென்பரே. 8

*கோட்டி, அரசன்*

83. தொழுதி திரள்சங்கங் கூட்டங் குவிதல் தொகுதிகணங்
குழுநீல கஞ்சம வாயஞ் சவையவை கோட்டியென்பர்
மொழியு நிருப னரபதி வேந்தன் முதல்வன்கோ
வழுவில் புரவல னேந்தல்மண் காவலன் மன்னவனே. 9

*அரசன், குருகுலமன்னன்*

84. அரச னிறையவன் பூபாலன் பார்த்திப னண்ணல்பிரான்
குருசில் தலைவன் பதிபெரு மானென்பர் கொற்றவர்பேர்
பரவுங் குருகுல மன்னவர் நாமம் பரதவர்பார்
கருதுங் கவுரவ ரென்பர்நன் னூனெறி கற்றவரே. 10

*சேரன்*

85. வில்லவன் கேரளன் வானவன் வஞ்சிக்கு வேந்தன்குடக்
கொல்லியன் குன்றன் குடநாடன் குட்டுவன் கோதைகொங்கன்
மல்லுதியன் பொறை யன்போந்தின் மாலையன் வானவரம்
பெல்லையன் சேரலன் சேரன் பொருனைக் கிறையவனே. 11

*சோழன்*

86. பொன்னிநன் ஞடன் புகாரிறை கிள்ளி புலியுயர்த்த
மன்னவ னேரியன் வீர னிரவி குலன்வளவன்
சென்னி யிமையவன் செம்பியன் கண்டன் றிறலபையன்
நன்னெறி யாரத்தன் சோழ னுறந்தைக் குரியவனே. 12

*பாண்டியன்*

87. வழுதி கவுரியன் பஞ்சவன் மீனவன் மாறன்கொற்கைச்
செழியன் மதுரைமன் பூழியன் கைதவன் றென்னவன்சே
லெழுது புரவலன் வைகைத் துறையவ னிந்துகுலம்
பழகு மிறையவ னிம்பத் தொடையினன் பாண்டியனே. 13

*குறுநில மன்னவர், சளுக்கியரசன், மந்திரி*

88. வேளிர் புரோசர் குறுநில மன்னவர் வேள்புலக்கோ
வாளுஞ் சளுக்கி யரசன் குரவ ரமைச்சர் முன்னோர்
நாளுநுண் டேர்ச்சியர் மூத்தோ ருழையர்ந ஹூலிறைவர்
கேள்வியிற் சூழ்பவர் மந்திரி யானவர் கேளினமே. 14

*மந்திரிதந்திரி, அரசற்குளாங்கருமத்தர், போர்த்தலைவன்*

89. ஏனுதி காவிதி யின்சொ லமாத்திய னென்னுமவன்
ருனுகு மந்திரி தந்திரி வள்ளுவன் சாக்கையென
லானு வரசற் குளாங்கரு மத்த ரரும்பெரும்போர்க்
கோனு மவனைப் பொருநரென் றேதுவர் கோமளமே. 15

*வணிகர்*

90. எட்டி கவிப்பர் வயிச்சிய ரேயிளங் கோக்களிப்பர்
செட்டி சிலேட்டி யறுதொழில் நாயகர் திறல்வினைஞர்
மட்டவிழ் சீரகத் தாரார் பரதர் வணிகரயன்
கிட்டிய வூருவில் வந்தோ ரிறையவன் கீழினரே. 16

*காராளர்*

91. வேளிர் களமர் சதுர்த்த ருழவர் விளைப்பவர்வே
ளாளர் கொடையின (ரேர்வாழ்நர்) வார்த்தையா டலில் வல்
காள நெடுங்கடற் பார்மைந்தர் கங்கை குலத்தரயன் [லோர்
ருளினில் வந்தவர் காராளர் பேரெனச் சாற்றுவரே. 17

*மிலேச்சர், சோனகர், மருத்துவர், குயவர்*

92. ஆதி மிலேச்சரு மாரியர் சோனக ராம்யவனர்
வாதனை யாயுள் மருத்துவ நூலர்மா மாத்திரரே
கோதில் பிடகர் மருத்துவ ராகுங் குலாலர் மண்மேற்
காதுங் குயவரும் வேட்கோப ருங்கும்ப காரருமே. 18

*உப்பமைப்பவர், சித்திரகாரர், கண்ணுளர்*

93. அயரு முமண ரமைப்பா ளருமுப் பமைப்பவரோ
வியர்சித் திரகாரர் தபதியர் சிற்பியர் வித்தகர்கள
ளையரக்க சாலையர் கம்மியர் கொல்லர் நலனறிவர்
மயனுற்ற நூலர் யவனர்கண் ணுளர்க்கு மன்பெயரே. 19

*தச்சர், கன்னர், வண்ணர், உறைகாரர், ஊன்விலைஞர், தோல்விலைஞர்*

94. கருது மரவினைத் தச்சர் தபதியர் கன்னுவரே
யருள்கஞ்ச காரர்கன் னரவர் காழிய ராவர்வண்ணு
ருரவுறை காரருங் காரோடர் சூனரு மூன்விலைஞர்
பரவு பறம்பருந் தோல்விலை வாணர் பயில்பெயரே. 20

*நாவிதர், கள்விற்போர், சண்டாளர்*

95. நாமப் பெருமஞ் சிகரே மயிர்வினை நாவிதர்பே
ராமப் பழையர் படுவர் துவசரவர் கள்விற்போர்
காமக் குணுங்க ரிழிஞர் கொலைஞர் கவுண்டர்வங்கர்
தாமப் புலைஞர் கனகத ராவர்சண் டாளர்களே. 21

*பாணர், இயவர், பாடலில்தாழுமவர், நரம்புக்கருவி கொள்மாந்தர்*

96. சென்னியர் மாகதர் சூதர் வயிரியர் சேர்மதங்க
ரின்னிசைப் பாண ரியவர் கருவி யிசைக்குமவர்
பன்னிய வோவரும் பண்டரும் பாடலிற் ருழுமவர்
கொன்னி னரப்புக் கருவிகொண் மாந்தர் குயிலுவரே. 22

*தமிழ்க்கூத்தர், கழாய்க்கூத்தர், தொழில்காரர், புதியவர், அயலோர்*

97. குலவாயி லோர்தமிழ்க் கூத்தர் கழாயுற்ற கூத்தினரே
கலைமேவு வேழம்பர் கம்மியர் செய்தொழில் காரரென்பர்
புலமா ரதிதியர் வம்பல ரென்னிற் புதியவரா
மூலகார் நொதுமலர் வம்பலர் தாமய லோரென்பரே. 23

*ஆகாவழிச்செல்வோன், அடிமை, மடையர், மீகாமன்*

98. ஆகாவழிச்செல் பவன்பதி தன்ருெழும் பாளடிமை
சேகார் சிலதர் சிலதியர் சேடியர் சேடரென்பார்
மாகாய வாலுவர் கூவிய ராவார் மடையர்மற்று
நீகான் மரக்கலன் மீகாம னென்பர் நிரைவளையே. 24

*தூதர், ஏவல் வினைஞர், ஒற்று, தேவராளன், செவிடர், முடவர்*

99. வினையாறு பண்புரைப் போர்தூத ரேவல் வினைஞர்பரி
சனமா குலரென்பர் சார்வேயொற் ருமென்பர் சாரணனுஞ்
சினதேவ ராளன் வெறியாடும் வேலன் செவிடர்பெய
ரெனிலோ வெதிரா முடவர்பங் கென்ன வியம்புவரே. 25

*அலி, ஊமை, குறள், வறியோர்*

100. பேடியர் பெண்டக ரேபேடர் பெண்டலிப் பேரதென்பர்
கூடிய மூகையு மூங்கையு மூமையாங் கோணல்சிந்து
நீடிய குஞ்சங் குறளென்ப ராதுலர் நேர்வறியோர்
வாடிய வாரத் துயருறு வோரென்பர் வாணுதலே. 26

*கீழ்மக்கள்*

101. நெறியிலர் பேதையர் நீசர் சுமடர்க னிட்டர் புல்லர்
பொறியர் முசுடர் முசுண்டர்பொல் லாதவர் பூரியரே
சிறுமைய ராற்றலர் தேரலர் தீயவர் தீம்பர்கல
ரறிவிலர் மூர்க்க ரசடர்பொய்க் கீழ்மக்க ளானவரே. 27

*அறிவிலார், கள்வர், காதலித்தோர்*

102. முழுமக னேஞ்ஞை மடம்பேதை சேடஞர் மூடனண்ணை
யிழுதை குதலை யறிவிலர் சோர ரிகற்பகைவர்
கழிவில் கரவடர் கள்வர்தம் பேரென்பர் காதலித்தோர்
விளைவு நயத்த லார்வம்வேட்டல் வேட்கை விருப்பென்பரே.
[28

*மூதறிந்தோர், வல்லளான், விறலோன், பதிவாழ்சதுரர், தூர்த்தர்*

103. முதுவர் கிழவ ருரியவர் மூதறிந் தோர்வயவன்
விதமான மீளிவல் லாளன் பெயர்விற லோன்விடலை
பதிவாழ் சதுர ரெனுநா கரிகர் படிற்ருெழுக்க
ரதிகாம மிக்கவர் தூர்த்தரென் ரோதுவ ராரணங்கே. 29

*இளமையர், ஏவுவான், புகழ்விளைவீணன், கரியன், கணவற் பிழைத்தோள்மகன்*

104. வளமுரு கன்குமர ன்காளை சேடன் மழவனென்போ
ரிளமைய ரேவு மவனே வியவ னியவுள்புகழ்
விளைவீண ஞகுங் கரியனென் சோரன் மிகவுரைக்கிற்
களவன் கணவற் பிழைத்தோன் மகன்குண் டகனென்பரே. 30

*கன்னிமகன், கைம்மையள்மகன், குலமில்லவர், வல்லோர், வல்லவரல்லாதார், கூவல்நூலோர்*

105. கலனுறு கன்னி மகன்கா னீனன்கைம் மையின்புதல்வன்
குலவிய கோளக ஞகுங் குலீனர் குலமில்லவர்
வலவைவல் லோரென்பர் வல்லுனர் மாட்டாரவ
[லோரென்பரே
தலமிசை வல்லவர் சல்லியர் கூவல்சொல் சாற்றினரே. 31

*பாவலர், மங்கலப்பாடகர், நாடகர், கூத்தர்*

106. பரவிய நாவலர் கற்ருேர் கவிஞர்சொற் பாவலராங்
கருதிய மங்கலப் பாடக ரெட்டர் கடிகைகளாம்
பொருநர் நிருத்தர் வயிரியர் கண்ணுளர் போற்றுநடர்
குருவரு ஞடகர் கோடியர் தாமென்பர் கூத்தரையே. 32

*சூதர், பூகதர், தேர்ப்பாகர், யானைப்பாகர்*

107. மாகதர் வந்திகர் வேதாளி யரவர் சூதர்மன்னும்
பூகத ராவார் புகழ்பவர் சூதர் புனைவலவ
ராகிய பேரெனிற் றேர்ப்பாக ராவா ரவருமன்றிப்
பாக பல்வா துவராதோ ரணர்கரிப் பாகருமே. 33

*பரிமாவடிப்போர், இரவலர், வரையாமலீபவர், அரசர்பரிவாரம்*

108. பரிமா வடிப்பவர் வாதுவர் யாசக ரேபரிசிற்
குரியா ரிரப்பவ ரிரவலர் பேரென்ப ருற்றபொருள்
வரையாம லீபவ ரேவள்ளி யோரென்பர் மற்றரச
ருகா தரித்த பரியாள மும்பரி யாரத்ததே. 34

*படையாளர், அடுத்தோர்*

109. கூளியர் மானவர் வீரர் பொருநர் கொலைமறவர்
வாளுழவர் மண்டர் மள்ளர் விறலர் வயவர்படை
யாளர் துடர்ந்தவ ரொன்றுநர் துன்னின ரேயடுத்தோர்
நாளு மணுகுந ரொல்லுநர் நள்ளுநர் நண்ணுநரே. 35

*பகைவர்*

110. தரியலர் தெவ்வர் செருநரொன் னாரெதிர்ந் தாரரிகள்
கருதலர் செற்றவ ரொல்லார் நிகரலர் கண்டலரே
பரவல ரொட்டலர் போற்றலர் மாற்றலர் பற்றலர்போர்ச்
செருவினர் நேரலர் விண்டார் பகையவர் சேரலரே. 36

*மித்திரர்*

111. சுற்ற முறவு கிளைகேள் கடும்பொக்கல் சூழநட்போ
டுற்றவர் சார்ந்தவர் பந்தங் குடும்புநட் டோர்சிறந்தோர்
துற்ற பரிசனங் கூளி செறிவு துணைதமரே
பற்றினர் மேவினர் மித்திர ராகப் பகர்ந்தனரே. 37

*ஆண் பெயர், ஏழு பருவப் பெண்பால்*

112. ஆடவர் காளைய ராடூஉ மகன்மைந்த னளன்பூம
னீடு குமரனு மாண்பெயர் பேதை நிகர்பெதும்பை
தேடிய மங்கை மடந்தை யரிவை தெரிவையுடன்
கூடிய பேரிளம் பெண்ணேழ் பருவஞ்செய் கோதையரே. 38

*மடவார்*

113. அங்கனை பேதை வனிதை யிளம்பிடி யாயிழைபெண்
மங்கை மடந்தை தெரிவை பிணாமகள் மாதரிவை
பைங்கொடி வஞ்சனி காரிகை மானினி பாவைதைய
லிங்கிதை நாரி மடவலர் பேரென் றிசைத்தனரே. 39

*தலைவி, கலன்கழி மகளிர், மலடி*

114. அடிகள் குரத்தி பெருமாட்டி கோமக ளையை யத்தை
தடமலர் மாதிறை மையாட்டி சாமி தலைவியென்பர்
கடலுல கெண்ணிய கைம்மை (கயினி) கலன்கழிமான்
வடிவுறு வந்தியு மைம்மையு மாகு மலடிகளே. 40

*வரத்தெழு மகளிர், பொதுமகள், பாண்மகள்*

115. வரத்தெழு பைம்மை கவுந்தி கணிகைவண் தூவையுடன்
பரத்தை பொதுமகள் பாடினி பாட்டி பயில்மதங்கி
திருத்தகு பாடல் மகடூஉ நடத்திறற் கூத்தியிசை
விரித்தரு ணடக வானுதல் பாண்மகள் மேல்வருமே. 41

குறிஞ்சிக்கதிபர், குறிஞ்சி நிலப்பெண் குறிஞ்சித்திணைமகன்

116. குறவர் புனவ ரிறவுளர் கானவர் குன்றவரென்
றறைவர் குறிஞ்சிக் கதிபர் குறத்தி யடர்கொடிச்சி
மறுவி லுழத்தியர் வெற்பன் பொருநன் மலையனண்பன்
றிறல்புனை கானக நாடன் சிலம்பன் றிணைமகனே. 42

பாலை நிலமக்கள், பாலைநிலப்பெண், பாலைத்திணைமக்கள்

117. மறவ ரெயினர் வெம்பாலைக் கிழவர் மறத்தியரே
பிறைநுதன் மேவு மெயிற்றிய ரந்நிலப் பெண்பெயராம்
விறல்புனை காளையு மீளியும் வெய்ய விடலையுமென்
றுறைபவர் பாலைத்திணை மக்க ளாக வுரைசெய்வரே. 43

பாலை நிலமக்கள் பொதுப்பெயர், முல்லைநிலமக்கள்

118. கானவர் வேடர் மறவர் புளிஞர் கலைக்கொலைஞ
ரீனர் வனசரர் சிலவர் கிராத ரெயினரென்ன
லானவ ரப்பொதுப் பேரண்டர் கோபால ராயர்முல்லைத்
தானவர் விந்தர் பொதுவ ரிடையவர் தம்பெயரே. 44

முல்லைநிலமக்கள், முல்லைநிலப்பெண், முல்லைத்தலைமக்கள்

119. தொறுவர் குடவருங் கோவிந்த ராய்ச்சி தொறுத்தியுடன்
முறைசெய் குடத்தி பொதுவி யிடைச்சிமென் முல்லைமகள்
குறைவறு கானக நாடன் குறும்பொறை நாடனண்ணல்
நிறைபயில் தோன்ற லவராவர் முல்லை நிலமக்களே. 45

நெய்தல் நிலமக்கள், நெய்தல் நிலப்பெண், நெய்தல் தலைமகன்

120. கலவர் பரதர் நுளையர் திமிலர் கருங்கடலர்
வலையரந் நெய்தல் கிழவர் நுளைச்சி வளர்பரத்தி
தொலைவில் கடற்பிண வென்னிற் கிழத்தி துறைவன்
[கொண்கன்
சிலைபயில் மெல்லம் புலம்பன்றண் சேர்ப்பன் றிணைமகனே. 46

மருதநிலமக்கள், மருதநிலப்பெண், மருதநிலத் தலைவர், மருதத் தலைமகள்

121. தொழுவர் கடைய ருழவினர் கம்பளர் சூழ்களமர்
கழனியின் மள்ளர் கடைச்சி யுழத்தி கழனிமகள்
கிழவனு மூரனுங் கேடின் மகிணனுங் கேள்மருதந்
தழுவு தலைவர் மனைவி கிழத்தி தலைமகளே. 47

முல்லைத்தலைவி, தம்குடித்தமர், முறைப்பெயர், மூதாதை

122. ஆய மருதத் தலைவியம் முல்லை யணங்கிற்குமாந்
தாயமுஞ் சாதியுந் தங்குடி யிற்றமர் தந்தைதந்தை
தூய பிதாவைய னப்பனம் மானத்தன் றென்முறைப்பே
ரேய பிதாதந்தை மூதாதை யாமென் றிசைத்தனரே. 48

*தகுவர், மாதுலர், பெற்றதாய், செவிலி*

123. தாதையுந் தம்முனுந் தன்னையொத் தந்தத் தகுவரம்மான்
மாதுலன் பேரென்பர் மாதாப் பயந்தவள் வாய்த்ததவ்வை
யேதமி லீன்றவள் தாயன்னை யாய்பெற் றவளெனப்பே
ரோதிய தாதிகோ டாயே செவிலியென் றேதினரே. 49

*முன்பிறந்தாள், மணவாளன், மனைவி*

124. அன்னையு முன்பிறந் தாளுஞ் செவிலியு மாகுந்தவ்வை
மன்னிய கேள்வன் கணவன் கொழுனன் மணமகனே
சொன்னவில் காந்தன் மணவாள னென்பர் துணைவியில்லாள்
பன்னி யுரிமை மனைவி மணமகள் பாரியுமே. 50

*புதல்வன், மகள்*

125. புதல்வன் பிறங்கடை சேய்தோன்ற லெச்சம்புனை சிறுவன்
மதலை தனையன் மருமான் மருவு மகன்மைந்தனே
விதமிகு சந்ததி புத்திரன் செம்மல் மிகுபுதல்வி
யுதவி சிறுவி தனையை மகட்பெய ரோதினரே. 51

*மகன் மகள் பொது, முன்தோன்றல், பின்தோன்றல், வழித்தோன்றல், பிள்ளைப்பன்மை*

126. முறைமையி னெச்ச மிருபாற் குரியது முன்னைமுன்னே
யறிவின்முன் றோன்ற லிளவலும் பின்னையு மாவர்பின்னே
ருறுவழித் தோன்றல் மருமான் பிறங்கடை யும்பலென்பர்
செறியு மகார்செஞ் சிறார்பன்மை நாமஞ் சிறந்தவரே. 52

*இளமை, நண்பன், தோழன் முன்னிலை*

127. மழவுங் குழவியும் பிள்ளையுங் குட்டனு மாமகவும்
விழைகின்ற சேயு மிளமைப் பெயர்நண்பன் மெய்த்துணைவன்
கெழுதகு கேளொலு வன்பாங்கன் றேழன் கிளைஞனென்பர்
மொழிதரு தோழனை யேடாவென் றேதுவர் முன்னிலையே. 53

*பாங்கி, தோழியர் முன்னிலை, கணவன்*

128. அயரோரை பொய்த லிகுளை மெய்யாய மணுக்கிணங்கொ
டியல்சேடி தோழிமெய்ப் பாங்கியெல் லாவுட னேடியென்ப
பயினுமந் தோழியர் முன்னிலை நாமம் பதிகணவன்
மயல்தீர் தலைவ னிறைதோழன் காதலன் மன்பெயரே. 54

*காதலி, துணைவன், படைத்திரள்*

129. தோழி மனைவி புதல்வியுங் காதலி சொற்றுணைவன்
வாழிய தோழன் கணவன் வருதினி மன்பகுதி
தாழு நிதன மநிகம்ப தாதிமெய்த் தார்தண்டமே
பாழிய தானை பதாகினி சேனை படைத்திரளே. 55

*படைத்திரள், கொடிப்படை, படை வகுப்பு, மானிடர்*

130. ஆசி லணிகமும் யூபமு மப்படை யாம்நிரைதார்
தூசி கொடிப்படை யாக்கமு மாமென்பர் சூழ்ந்தவணி
காசறு யூப முடனுண்டை யோடிவை கைவகுத்தல்
மாசின் மனிதர் நரர்மக்கள் மானிடர் மண்ணவரே. 56

*மக்கள் பொது, மக்கள் கூட்டம், உடற்குறை*

131. மக்கள் பொதுப்பெயர் மாந்தர்கள் பைஞ்ஞீல் மன்பதையுந்
தொக்க நரர்திர ளோரையு மாயமுஞ் சூழ்குழுவுந்
தக்கதோர் பண்ணையு மக்களின் கூட்டந் தனையுரைப்பர்
மிக்க கவந்தமு மட்டையும் யூபமு மெய்க்குறையே. 57

*உறுப்பு, உடம்பு, பிணம்*

132. புரமுறுப் பங்கந் தனுவாக்கை காத்திரம் பூட்சிமெய்விக்
கிரகங் களேபரந் தேகம் படிவங் குகைகுடில
முருவ முடம்பு கனங்காய மென்ப ருயர்குணபங்
கருது மழன்பிண மேசவ மாகுங் களேபரமே. 58

*பாதம், காலடி, துடை, அல்குல்*

133. பாதஞ் சரணங் கழல்கா லடிபதந் தாள்பரடு
மோதுங் கரடு மிசைத்திரள் காலடி யூருக்கவான்
றீதொன் றிலவாங் குறங்கே துடையென்ப சேர்நிதம்பங்
காதுங் கடிதட மல்குலென் றேதுவர் கற்றவரே. 59

*இடை, மருங்குல், வயிறு, கொப்பூழ்*

134. மருங்குல் நுசுப்பு நடுவிடை யொக்கலை யாமருங்குல்
வரும் புறங் குக்கி சடர முதரம் வயினகடாந்
திருந்துவயி றுந்தி நாபி மிதலை திகழிலஞ்சி
தரும்ஒப்பிய ரேயெனி லானகொப் பூழென்று சாதிப்பரே. 60

*ஆண்குறி, மாதர்குறி, மார்பு, முலை*

135. ஓது மிலிங்கமுங் கோசமு மாண்குறி யோனிபகம்
மாதர் பெருங்குறி மார்ப மகல மருமமுரந்
தாதவி ழாகங் குயஞ் சொர்க்கங் கொங்கை தனநகிலே
மீது குருக்க ணம்மம் பயோதர மென்முலையே. 61

*சுணங்கு, கைத்தலம், அகங்கை, விரல், நகம், புயம்*

136. துத்தி திதலை பொறிவந் திகையுத்தி சூழ்சுணங்கா
மத்த முடன்கரந் தோள்பாணி கைத்தலம் அங்கையென்னி
லொத்த குடங்கை யகங்கை விரலங் குலியுகிராம்
பத்திநகம் புயந் தோள்வாகு மொய்ம்பெனப் பாவிப்பரே. 62

*முதுகு, தோள்மேல், கழுத்து, பிடரி*

137. நிகரில் வெரிந் புறம் வெந்முது கென்பர் நிகலமுடன்
செகிலஞ் சுவலெனிற் றேண்மேல் கழுத்துச் சிறந்தகண்டம்
புகலுங் கிரீப மிடறு களங்கந் தரம்பொருந்து
மகலுங் கயிலெருத் தஞ்சுவ லேபிட ரானதுவே. 63

*பிறக்கு, முகம், உதடு, பல், சிரிப்பு*

138. பிறக்கும் பிறக பரம்முக மானனம் பேர்வதனஞ்
சிறக்கின்ற வோட்ட முதடே யதரந் திகழிதழாம்
நிறக்கின்ற தட்ட மெயிறுபற் றந்தம் நிலாமுறுவல்
முறைத்தங்கு மூரல் நகைசிரிப் பாக மொழிகுவரே. 64

*மேல்வாய், கீழ்வாய், உள்நா, நா, மூக்கு, கவுள்*

139. அணரியு மண்ணமு மேல்வாய்கீழ் வாயணு ராமதன்பேர்
தணிவரு மண்ணமுண் ணுவாகுந் தாலமுந் தாலுவுநாத்
துணைபெறு நாசியுந் துண்டமு மூக்கென்பர் தொல்வுகளே
நணுகு கபோலங் கொடிறென்று கூறுவர் நற்றவரே. 65

*கண், நெற்றி, புருவம்*

140. பழுதறு நாட்டம் நயனம் விலோசனம் பார்வை கண்கோ
விழிதிருக் கம்மக்கம் நேத்திரம் நோக்கமம் பகம்வின்னுதல்
எழின்மத் தகங்குளம் முண்டக நெற்றி யிலாடமென்பு
ரழிவில் புரூரம் புருவம் பிருகுடி யாமென்பரே. 66

*காது, தலை, முடி, மயிர்ப்பரப்பு*

141. கன்ன முடன்செவி காதாஞ் சிரமுச்சி கந்தலையே
சென்னி யுவ்வி நவிர்சேக ரந்தரஞ் சீரிபமா
மூன்னிய சேகரஞ் சென்னி சிரமுச்சி யேமுடியே
மன்னு சிரோம முரோமஞ் செறிந்த மயிர்ப்பரப்பே, 67

*ஆண்மயிர், பெண்மயிர்*

142. தொங்க னவிர்குஞ்சி யோரி குடுமி சுருளுழையே
பங்கி சிகைபித்தை யாண்மயிர் கூழையைம் பால்சுரிய
லங்குழல் கேசங் கதுப்பு மராட்ட மளகங்குரல்
தங்கிய வோதி சுருள்கூந்தல் கோதைபெண் தன்மயிரே. 68

*ஆண்மயிர், பிறமயிர், சடை*

143. கேசஞ் சுரியல் கதுப்பாண் மயிர்க்குக் கிளக்கும்பங்கி
வாசஞ் செறியுளை யோரி யுரோம மராட்டமிவை
பேசும் பிறமயிர் கோடீரம் பின்னல் பின்னுஞ் சடிலந்
தேசொன்றும் வேணிச் சடைசூட மென்னச் சிறந்ததுவே. 69

*குழன்றமயிர், மயிர்முடி, அவயவம்*

144. கொந்தள மாலை யளக மிலோதங் குழன்ற மயிர்
பந்தமுடிபின் னகங் கொண்டை முச்சி பயில்சுடிகை
யுந்துஞ் சிகழிகை யாகு மயிர்முடி யோருறுப்புச்
சந்த மவையவ மேசினை காத்திரந் தானங்கமே. 70

*உடல் தழும்பு, கழலை, நரம்பு, தலையோடு, எலும்பு, கழியெலும்பு*

145. பிறங்கங் சிதஞ்செது கைமெய்த் தழும்பு பெருங்கழலை
செறிந்த வரலை நரம்புட ஞடி சிரையெனலா
மிறஞ்சிய வெண்டலை யோடே கபால மெலும்பென்பதாங்
குறைந்து கழியென்பு கங்காள மாகமுற் கூறினரே. 71

*குடுமி, உச்சி, பாரதிதீப வரலாறு*

146. சிக்கங் குடுமி சிமையஞ் சிகையுச்சி சேர்நவிரந்
தொக்கசெஞ் சூடி சுடிகையுஞ் சூளி தொகுபுலமை
மிக்கவன் பாரதி பாரதி தீபத்தின் மெய்தெரிந்த
மக்கட் டொகுதி யிரண்டா வதுமுற்றி வந்ததுவே. 72

மூன்றாவது

## விலங்கின் பெயர்த் தொகுதி

***சிங்கம்***

147. அரியாளி சீயம் வயப்போத்துச் சிங்கம்பஞ் சானனங்கே
சரியா மடங்கல் முடங்குளை கோளரி தாம்வயமா
மிருகா பதியரி மாவே வயப்புலி வேங்கையிபம்
பொருகா னகாயுதங் கண்டீ ரவமெனப் போற்றினமே. 1

***புலி***

148. குயவரி வல்லியஞ் சித்திர காயங் கொலைவயமா
வயவரி வேங்கை தரக்கு வியாக்கிரம் வல்லுழுவை
சயமிகு தீவியஞ் சார்த்தூலம் புண்டரி கஞ்சமரம்
பயில்மிரு காதிபுல் லெனப்பேர் புலிக்குப் பகர்ந்ததுவே. 2

***யானையாளி, யானை***

149. அறுகு புழைக்கை யடலியானை யாளிகை யத்தியுவா
மற (மலி) தும்பி புகர்முகந் தோலிபம் வாரணமாக்
கறையடி போதகம் மாதங்க நாகங் கரிகளிறு
திறல்மிகு நால்வா யொருத்தல் மதகயஞ் சிந்துரமே. 3

150. கயமே கருணி கடுவை பகடு களபந்தந்தி
வயமா வழுவை யிருண்மா வெறும்பி மதவனமே
சயவேழந் தூங்கல்கைம் மாவும்பல் கும்பிந் தாவளமே
குயமேவு மாதிரம் வல்விலங் காமென்பர் குஞ்சரமே. 4

***யானைக்கன்று, கிளர்ச்சியானை, யானை பிறந்த நிலப்பெயர்***

151. களபந் துடியடி போதகம் வெய்ய கயமுனியே
தளருங் கரிக்கன்று தந்தி மதகரி தானுரைக்கிற்
கிளர்வன் கையானை வனசர மோங்கு கிரிசரமே
தெளியு நதிசரம் யானை பிறந்த திணைப்பெயரே. 5

***குதிரை***

152. துரகங் குதிரை யரிவாசி கிள்ளை துரங்கங்கற்கி
குரகத மண்டில மத்திரி மாப்பரி கொக்கிவுளி
புரவிகுந் தங்கொய் யுளைகோணங் கோடகம் போற்றியகந்
திருவஞ்சை யிந்தவ மச்சுவ மாமெனச் செப்பினரே. 6

*குதிரைப் பண்பு, குதிரை மார்க்கம், குதிரைக் குளம்பு, பசுப் பொது*

153. பாடலங் கந்துகங் கோரங் கனவட்டம் பண்பெனலாங்
கூடிய மாதிக மார்க்கங் குரங்குளம் பாகும்பெற்ற
மாடு குடஞ்சுட்டுக் கோவான் பசுவினம் வாலியவா
னீடிய சாதிப் பொதுப்பெய ராக நிலைபெறுமே. 7

*பசுப்பெண்பால், ஏறு*

154. தேனுச் சுரபி சுரையே கபிலை செழுங்குரமே
கோனுற்ற கோமளஞ் சேதாப்பெண் பாலென்பர் கோவிடப
மானுற்ற பாறலி ருஷ்மரி பாண்டி லடல்விடைசே
வானத் தெருதுபெற் றம்புல்ல மேறதற் பேரென்பரே. 8

*எருமைச்சாதி, எருமை, எருமையாண், மலட்டெருமை*

155. எருமையின் சாதி யிருபாற் குரிய திகன்மயிடங்
கருதிய காரசங் காரான்மை மேதி கவரியென்பர்
பொருளில் பகடுங் கடாவு மவற்றினிற் போத்துமைமை
தெரியி னவற்றின் மலட்டின் பெயரெனச் செப்பினரே. 9

*காட்டு ஆ, ஆடு*

156. அறிவில் கவையமு மாமாவுங் காட்டினி லாவெனலா
மறியுதள் மேழக மோத்தை கிடாய்தகர் மைவருடை
கொறிதுரு வைசெம் மறிபள்ளை வெள்ளைகொச் சைபுருவை
செறிதரு மேடம்வற் காலியு மாடெனச் செப்பினரே. 10

*துருவாடு, வெள்ளாடு, துருவாட்டேறு*

157. துள்ளு துருவை கொறிமை யிவைதுரு வாடதென்பர்
வெள்ளைவற் காலிவெங் கொச்சைவெள் ளாடுமிகுதகரே
தெள்ளிய மேழக மோங்குங் கிடாய்திண் ணகமுடனே
யெள்ளிய செய்ய துருவாட்டி னேறென் றிசைத்தனரே. 11

*வெள்ளாட்டேறு, ஆட்டுக்குட்டி, வரையாடு, கவரிமா*

158. உதள்கொச்சை மோத்தைவெள் ளாட்டினி லேறென்ப
[ரோங்குமணங்
கெதிர்குட்ட மென்பறழ் சேர்மறியே குட்டி யோர்வருடை
மதுகைச் சரபம் வரையா டெகினம் வளர்சவரங்
கதமுற்ற மான மிருகங் கவரிக்குக் கற்பித்ததே. 12

*கழுதை, பன்றி*

159. கத்தபம் வேசரி வாலேயங் கோகு கரங்கழுதை
யத்திரி யென்ப கருமா விருளி யருங்கனலி
குத்திரஞ் சூகரங் கேழல் வராகங் குரோட்டம்பன்றி
மைத்திக ழேன மரிகோலம் போத்திரி வல்லுழியே. 13

*முட்பன்றி, மான், புல்வாய், கரடி*

160. எழில்புனை சல்லிய முள்ளார் மிருகமெய் யேபன்றியா
முழைமறி நவ்வி யருணமா னம்பிணை யோங்கிரலை
விழைகலை யென்ப ரிரலைபுல் வாயென்பர் வெல்லுளியங்
கழிதரு பல்லங் கரடியெண் காமென்பர் கற்றவரே. 14

*நரி, ஓரி, பூனை, ஆண்பூனை*

161. இகல னரிசம்புக் கோமாயு வென்க விகலனெனப்
பகர்வது மோரி விலாளம் விடருகம் பாக்கன்வெ
ருகப்பவ ணந்திறற் பூசையும் பூனையதாங் கடுவன்
மிகைசெய் விராளம் வெருகென வாண்பெயர் மேவியதே. 15

*கீரி, முயல், கத்தூரி, நாய்*

162. கீரி நகுலஞ் சசமுயல் நாவி கிளர்மறிகத்
தூரிமை மான்மதம் நான மறிவன் றுருக்கமென்பர்
மூரி யெகினஞ் சுணகன் ஞமலி முடுவல்சுவாக்
கூரிய நாய்சுணங் கன்ஞாளி சூரன்வெங் குத்திரனே. 16

*பெண்நாய், குரங்கு*

163. முடுவல்பெண் ணுயென்பர் கானவன் மற்கட மூரியரி
கடுவன் வலிமுகஞ் சாகா மிருகங் கவிகுரங்கு
திடகோ குலம்ப விலவங்கம் வானரஞ் சீறுமந்தி
யுடலிய கோடர மேயூக மாமென் றுரைத்தனரே. 17

*கருங்குரங்கு, பெண்குரங்கு, முசு, உடும்பு, கோம்பி*

164. கானவல் யூகங் கருங்குரங் கூகங் கருதுமந்தி
யானது பெண்பெய ரோரியக் கள்வ னடந்ததலை
தானு முசுவென்பர் கோதா முசலி தருமுடும்பு
கூனு மெழில்திண் டுடன்காம ரூபியுங் கோம்பியதே. 18

*மூஞ்சூறு, எலி, அணில், விலங்கினில் ஏற்றை*

165. சுந்தரி யேசுண்டன் மூஞ்சுறு சூர னெனச்சொல்லுவர்
முந்து சிகரி கருப்பை யிரும்பன் மொழியிலெலி
வந்த வணில்வெளில் போத்தே யொருத்தல் வயக்களிறே
டொந்திய வும்பல் விலங்கினி லேற்றைக் குரியனவே. 19

*களிறு, ஒருத்தல், ஏறு*

166. கரிகேழ லென்னிற் களிறுங் கவரி கரடி பன்றி
மரையானை மான்புலி புல்வா யெருமை வருமொருத்த
லிருளார் கவரி மரைமா னெறுளிபுல் வாயெருமை
நிரையாரும் பெற்றஞ் சுறுவிலை யேறென நேர்படுமே. 20

*போத்து, பகடு, தகர்*

167. பெற்ற மெருமை மரையேபுல் வாய்புலி யேற்றமரி
யுற்ற பயத்தி லுறைவன போத்தென்ப ரோங்கெருமை
மற்றிபம் பெற்றம் பகடாஞ் சுறவு வயக்களிறு
தற்றிற லாளி துருவாட்டி னேற்றைத் தகரென்பரே. 21

*உம்பல், சேவல், கடுவன், பெண்பெயர்*

168. உழையே முசுக்கலை யாட்டினி லேற்றே யுலாவுமும்ப
லெழிலார் மயூரமுங் கோழியுஞ் சேவ லிகற்குரங்கு
விழைவார் கடுவ னெனப்பெறும் பாட்டி மிகுபிணாவுங்
கொழுநாகு பெட்டை பிணையென்று பெண்பெயர் கூறினரே.22

*பெட்டை, பிணை, நாகு*

169. ஒட்டகம் வாசி கழுதை மரையென வோங்கியபேர்
பெட்டை புலியுழை புல்வாய் கவரி பிணையெனலாம்
வட்டிய பன்றிபுல் வாய்நாய் பிணையென்பர் வாமரையுங்
கிட்டிய வாவு மெருமையு நாகெனுங் கேண்மையதே. 23

*நாகு, பாட்டி, மந்தி, பிணா, ஆண், பெண்*

170. பசுவே யெருமை மரைநாகு நாய்பன்றி பாட்டிகலி
முசுவே யெனின்மந்தி யொட்டகம் வாசி முழங்குகரி
திசையார் கழுதை பிணாநரி பாட்டி யெனத்திகழு
மிசைவான வாண்பெண் ணவையவை யாக விளம்பினரே. 24

*பிணவு, போதகம், பார்ப்பினம், குருளை, பறழ்*

171. புலிபெண் பிணவு புலியரி மாக்கரி போதகமாம்
வனவெங் குருளை பறழே குழவி மறிகன்றுபார்ப்
பினமேவு குட்டி விலங்கின் பறளை யிகல்முயல்நாய்
பனியார் நரிபுலி யேனங் குருளை பறழென்பரே. 25

*பிள்ளை, பிணை, மறி, ஊகம், குட்டி*

172. பிள்ளை யெனும்பெயர் நாயன்றி யெய்தும் பிணையழுங்கு
வள்ளிய வாடு மறியென்பர் கோடுற வாழ்விலங்கு
முள்ளெயி றுற்ற குரங்கென்ப ரூக முசுவெருகு
துள்ளு மணிபறழ் குட்டியின் பேர்பெறுந் தோகையரே. 26

*குழவி, பார்ப்பு*

173. வாசி கடமை மரையானை யொட்டகம் மான்கவரி
காசறு மோட்டு கழுதை கராங்கன்று கார்க்கடமை
யோசை யிபமரை மான்மேதி யொட்டக மாங்குழவி
பேசிய பார்ப்புத் தவழ்சாதி யெய்தப் பெறுமென்பரே. 27

குருளை, கன்று, விலங்கு, தொறு, வாற்கீழிடம்

174. குருளைகன் றென்ப ருழையை முசுவைக் குருளையென்பர்
சுரிமுக நந்தினி னேறுடன் மாவுஞ் சொலிற்குருளை
மருவுறு மானுடன் மாவும் விலங்கென்பர் வற்காலியி
னிரைதொறு வென்பர் வெருகமும் வாற்கீழ் நிலையிடமே. 28

விலங்கின் கூட்டம், வாலுறுப்பு, முதுகு

175. சாலவ நீலங் கணப்பூகங் கூட்டந் தருவிருந்த
மேலவை யென்னிற் பிறப்பாற்கு மெய்துமென் ரேகையுடன்
வாலதி கூல மிலாங்குல மாமென்பர் வாலுறுப்பே
சீலமுடன் மஞ்சு நீண்முது கென்பர் தெரியிழையே. 29

யானைச் செவி, மதம், மதம்பாய் சுவடு, கால், விலாழி, வால்

176. கரிச்செவி யாங்கன்னந் தாலமதங் கடந்தானங் கடா
மருக் கடம்பாயுஞ் சுவடாங் கரடமங் காத்திரமே
வெருச்செயு மங்கிதங் காலாம் விலாழியும் வேட்கையுறு
தரத்தகு நீரதின் வால்தால வட்டந் தகுமென்பரே. 30

காளை முரிப்பு, கொம்பு, தோல்

177. விடைபயின் மூரிமுரிப்பே யிமிலென்பர் வெண்மருப்பும்
வடிவுறு கோடு முலவையுங் கொம்பு வடகம் பச்சை
யுடலு கிருத்திமம் தொக்குச் சரும முரிவையதள்
துடரும் புறணி துருத்தி துவக்கிவை தோலென்பரே. 31

ஊன், பெற்றத்தின் ஊன், இரத்தம்

178. தசைதடி தூவு புலாலே புறணி சடம்விடக்குப்
பிசிதம் வள்ளூரம் புலவேமெய் யூனென்ப பெற்றத்திலூன்
றசையும்வள் ளூரம் பெருகுசெந் நீரிரத் தங்குருதி
கசிதரு சோரி யுதிரநெய்த் தோர்செங் கறையென்பரே. 32

நிணம், முடை, சூல், பாம்பின் படம்

179. இழுது விழுக்கு நிணமேநெய் யாகு மெனவுரைப்பர்
புழுவே ரழுகுந் தசைபூழ்தியொ டூழ்த்தல் புலவுமுடை
தொழில்புனை பீள்வெஞ் சினையே கருவிவை சூலதென்பர்
பழகிய பையும் பணமும்வெம் பாம்பின் படமென்பரே. 33

பாம்பு, பெரும்பாம்பு

180. அரவு புயங்கம் பணிமா சுணஞ்சர்ப்ப மங்கதமே
யுரகம் வியாள மகிபாந்தள் நாக முரவரியே
கரள தரம்பன் னகந்தந்த சூகம்வெங் கட்செவியாம்
பரவிய மாசுணம் பாந்தளெல் லாம்பெரும் பாம்பென்பரே. 34

*பாம்பின் படப்பொறி, கருடன், கழுகு*

181. உரகன் படப்பொறி யுத்தியுந் துத்தியு மோங்குவணன்
கருடன் கலுழ னரவா சனத்தன் ககபதிபுள்
ளரசன் திறல்வயிந தேயன்விந தாசுத னுகுமென்ப
ரிரையுங் கழுகென்ப தாமுவ ணப்புள் ளெருவையுமே. 35

*வன்சிறைப்புள், பருந்து, சாதகம், குயில்*

182. மாறெதிர் சிம்புள்ளு வாருண் டகமுயர் வன்சிறைப்புட்
பாறுடன் சேனமுங் கங்கமு மாகும் பருந்தகல்வான்
கூறுபுட் சாதகங் கூட்டிசைப் பிள்ளை குணங்குயிற்கு
வேறுள கோகில மேகாள கண்டம் விதித்ததுவே. 36

*செம்போத்து, கோழி, கூகை, மயில்*

183. குக்கில்செம் போத்துச் சகோரமு மாங்குக் குடங்கொடுமை
மிக்க பதாயுதம் வாரணங் கோழி விறற்குடிஞை
மைக்கட் குராலுடன் கோட்டானுங் கூகை மயூரமஞ்ஞை
தொக்க சிகண்டி சிகாவலங் கேகயந் தோகையதே. 37

*மயில், மயிற்பீலி, சிறகின் முதல் முள், காக்கை*

184. சிகியே பிணிமுக மும்மயி லாந்தொங்கல் திண்கலப
மிகல் பீலி கூழை யிறகென் றுரைப்ப ரெழுமுருந்து
தகுமே யிறகின் முதன்முளென் றேதுந் தயங்குகொடி
ககமேவு காரியல் வாயசங் காக்கை கரும்பிள்ளையே. 38

*வலியான், கருங்குருவி, கிளி, கவுதாரி*

185. வயவன் வயானன் வலியான் பெயர்பெறு மாவலியன்
கயவா யிரண்டும் கருங்குரு விப்பெயர் காமர்கிள்ளை
நயவன்னி தத்தை சுகங்கிளி யாமென்பர் நாடுமிகற்
சயமேவு பூழ்சிதல் தான்கவு தாரிக்குத் தக்கதுவே. 39

*புறு, அன்றில், ஊர்க்குருவி, பகண்டை*

186. கணம்பயில் மென்பறைப் பாரா வதமுங் கபோதமுந்தூ
துணும்புற வும்புறு வாகுந் தரிஞ்சமுஞ் சொல்லிலன்றில்
குணங்கொள் சகட மெனிலூர்க் குருவி குலப்பகண்டை
யிணங்குமிதலி குறும்பூழ் சிவலென் றியம்புவரே. 40

*நாகணவாய், குறும்பூழ், மீனெறியும் சிறுபறவை, பறவைப் பொது, கொக்கு*

187. பூவைமென் சாரிகை நாகண வாய்குறும் பூழுரைக்கிற்
சேவலங் காடை சிரல்மீ னெறியுஞ் சிறுபறவை
போவிச் சகுனம் போகிலே பிணிமுகம் புட்பறவைக்
காவும் பொதுப்பெயர் கொக்குக் குரண்ட மடற்பகமே. 41

***ககம், அன்னம், அன்னத்திறகு, சகோரம்***

188. ககமேவி கங்கம் பதங்கமு மாகுஞ்செங் காலெகினம்
வகைமேவு மன்னம் பிணிமுக மோதிம மஞ்சமதி
நிகர்தூவி யன்னத் திறகே சகோரநன் னேமிப்புள்ளுப்
புகழ்மேவு சக்கர வாகப்புள் ளென்னப் புகன்றனரே. 42

***பெருங்குருகு, நாரை, குருகு, சம்பங்கோழி, நீர்க்காக்கை***

189. பேரானை யுண்குரு கென்னிற் பெருங்குரு கென்னப்பெறும்
போரார் பிதாவுமப் போதாவும் நாரை புனைகுருகு
சீரார்வண் டானந் திகழ்சம்பங் கோழி சிறந்தகம்புள்
காராருங் காரண்டம் நீர்க்காக்கை யாமென்பர் கற்றவரே. 43

***வண்டு***

190. அரிசஞ்ச ரீகம் ஞிமிறு மதுக மறுபதமாம்
வரியளி தும்பி சுரும்பு கழுது மதுகரமே
பிரமரந் தேன்வண்டு சாரங்கங் கோரமிசை பிரசம்
விரைமலர்த் தாழுய ராற்பத மாக விளம்பினரே. 44

***ஆண் வண்டு, இந்திரகோபம், விட்டில், சிள்வீடு, நுளம்பு***

191. தூய சுரும்பவற் றுணே மதுகரந் தும்பியென்ப
ரீய லியங்கிய மூதாய்செங் கோப மிகற்பதங்க
மேய கலப மெனில்விட்டில் சில்லி விறற்சிகடி
யாயசிள் வீடு நுளம்பாகு நுள்ளல் நுளுவலுமே. 45

***கொசு, சேவல், எழால், பறவைப்பெண், அளகு***

192. கொசுகேம சகமுங் கோமயி லன்றில் குலப்பறவைக்
கிசைவாகுஞ் சேவ லிகற்போத்து மஞ்ஞை யெழாலென்னலாந்
திசைமேவு பேடையும் பெட்டையும் புள்ளிற் றிகழ்
[பெண்ணென்ப
ரசைகோழி கூகைபெண் பேரா மவற்றை யளகென்பரே. 46

***பறவையின் இளமை, முட்டை, வாயலகு, இறகு***

193. பறவை யவற்றி னிளமையும் பிள்ளையும் பார்ப்புமென்பர்
முறைசினை யண்டங் குடம்பையு முட்டைமெய் மூக்குத்துண்ட
மறைகுவர் வாயல காகப் பறையோ டரந்தபிச்சஞ்
சிறுதூவி கூழை சிறையிற கென்னவுஞ் செப்பினரே. 47

***தொழுதி, முதலை, ஆண்முதலை, சுறுமீன், கெளிறு***

194. துடர்ந்தெழு புள்ளொலிக் கூட்டந் தொழுதி துயர்வெங்கரா
விடங்கர்கிஞ் சும்மாரம் வன்மீன் முதலை யிகலுங்கரா
மடங்கவற் றுணென்ப ராடன் மகர மடற்சுறவாங்
கிடங்கினி லாலிற லாகுங் கெளிறு கெடிற்றென்பரே. 48

*மீன், திமிங்கிலம், திமிங்கிலகீலம், மலங்கு*

195. மச்சஞ் சலசர மீனதை நுங்கிய மச்சமெனின்
மெச்சுந் திமிங்கில மாமந்த மீனை விழுங்கியமீ
னிச்சிய மான திமிங்கில கீல நெடுமலங்கு
நச்சிய நூறையெனவே யுரைக்குமிந் நானிலமே. 49

*சங்கு, வலம்புரி, சலஞ்சலம், வாரணம்*

196. நந்து பணிலஞ் சுரிமுகங் கோடே நாகுநத்து
வந்தெழு கம்பு வளைசங்க மாகும் வலம்புரியின்
சந்த முரைத்திடின் மிக்க கதிலுஞ் சலஞ்சலமே
சுந்தர மிக்கதச் சங்குக்கு வாரணஞ் சொல்லுவரே. 50

*நத்தை, இருல், தவளை, ஆமை*

197. நாகு சுரிமுக மேகரு நந்தெனி னத்தையிற
வாகு மிருலெதி ருந்தோல தேரை யரிமரையே
நீகமண் டூகந் தவளை கமடநன் னீர்க்கச்சப
மோகர கூரும மாமையி னும மொழிகுவரே. 51

*நண்டு, நண்டின் ஆண், தேள், சிலம்பி, எறும்பு*

198. அளைபயி னள்ளி குளிர்கற் கடக மலவனண்டு
களவ னவற்றினி லாணென வோதுங் கருந்தெறுக்கால்
தெளியில் விருச்சிகந் தேளாமு லூதை சிலம்பியென்ப
ருளுவு சுவாகு முறவியுந் தானென்ப ரூரெறும்பே. 52

*நாகரவண்டு, சிதலை, புழு, தேன்கூடு, கோற்புழு*

199. சிறுநாகர வண்டு நொள்ளைசெல் லாழல் சிதலையென்ப
கறையான் கிருமிவெங் கீடம் புழுவென்ப கற்பிரசங்
குறையாத தென்றுந்தேன் கூடிரு லென்பர் கோற்புழுவு
முறையான கீட முடனே வுலண்டென வோதுவரே. 53

*பாரதிதீப வரலாறு*

200. மீன்ருவு வாவிக் கடம்பையில் வாழ்திரு வேங்கடவன்
ஏன்ருசு கூறுங் கவிவேந்தன் பாரதி யேற்றமலர்த்
தேன்ரும் தொடைப்புயன் செப்பிய பாரதி தீபந்தன்னில்
மூன்ருவது விலங் கின்பேர்த் தொகுதி முடிந்ததுவே. 54

நாலாவது

## மரப்பெயர்த் தொகுதி

**தருவின் வகை, சந்தனம், அகில்**

201. சந்தானந் தேவ தருப்பாரி சாதந் தடக்கற்பக
மந்தார மென்பர் சந்திர திலக மலையசமே
கொந்தாரஞ் சந்திவை சந்தன மாமென்பர் கூரகரு
நந்தாத காகதுண் டம்பூழி லேயகி ஞமங்களே. 1

**ஆச்சா, இத்தி, மகிழ்மரம், தேக்கு, சண்பகம், அசோகு**

202. ஆவென வோதுவ ராச்சா மராமர மானமர
மேவிய சால மிறலியித் தீயென்பர் மெய்வகுளந்
தாவி லிலஞ்சி மகிழ்சாதி தேக்கென்பர் சண்பகமே
தூவலர்ச் செண்பகம் பிண்டி செயலையசோகென்பரே. 2

**ஆல், அரசு, மருதம், கொன்றை**

203. குலவு வடந்தொன் மரமாம் பழுமரங் கோழியுமா
விலையில் கணவம் பணையே மராமர மச்சுவத்த
மலிதரு போதி யரசா மருச்சுன மாமருத
மிலகு மிதழி கடுக்கை மதலை யெனுங் கொன்றையே. 3

**குடவு, நாவல், வேம்பு, காஞ்சிரை, அத்தி, கோங்கு**

204. கொட்டங் குடிலங் குடவென் றுரைப்பர் குலவுசம்பு
மட்டவிழ் நாவல் மலிநிம்பம் வேம்புவன் காஞ்சிரையா
மெட்டி யதவு முதும்பர மும்மத்தி யென்பர்கயா
கட்டவிழ் தூட்டிணர் மென்கோங்க தாங்கன்னி காரமுமே. 4

**புளிமா, மாமரம், செருந்தி, புன்னாகம், மஞ்சாடி**

205. போதவி ழாம்பிர மேசூத மாழை புகழ்புளிமாச்
சூதமென் சேகர மாமர மேகொக்குத் தூயநன்மாச்
சீதள பஞ்சரஞ் செங்கோ டுரைக்கிற் செருந்திபுன்னை
யோதுபுன் னாகந் திலகமஞ் சாடியென் றோதுவரே. 5

*வன்னி, கடுக்காய், பச்சிலைமரம், கருங்காலி, ஆத்தி, குருந்தம், நெல்லி*

206. சமியே கலீகமும் வன்னி யரிதகி தான்கடுக்காய்
கமழுந் தமாலம் பசும்பிடி பச்சிலை காறகத்திர
மமர்கருங் காலியார் தாதகி யாரமு மாத்திகுந்தம்
நிமிர்குருந் தென்பர் நிரையா மலகமும் நெல்லியுமே. 6

*செங்கருங்காலி, புளி, இல்லம், வெட்பாலை, விளா*

207. கந்த மிகுஞ்சிறு மாரோட்டஞ் செங்கருங் காலிசிந்த ஞ்
சிந்துர மாம்பில மேயெகி னஞ்திந் துருணிபுளி
கொந்தில்லம் பொங்கா லம்வெட் பாலை (வற்சம்) குடசமென்பர்
முந்திய வெள்ளில் விளாவில்வ மாமென்பர் மொய்குழலே. 7

*குமிழ், முருக்கு, குடைவேல், பாதிரி, சேமரம், ஈரப்பலா, வில்லுவம்*

208. கடம்பல்மென் கூம்பல் குமிழ்கிஞ் சுகங்கவி ரேமுருக்காம்
உடைகுடை வேலென்பர் பாடலம் பாதிரி யோங்கழிஞ்சி
லடர்தருஞ் சேமர மங்கோல மாசினி யீரப்பலா
மிடைதரு கூவிள மாலூரங் கூவிளை வில்லுவமே. 8

*கடம்பு, வேங்கை, வருக்கைப்பலா, தாதுமாதுளை, மாதுளை, எலுமிச்சை*

209. கடம்பு விசால முடனீப மேகதம் பந்திமிசு
படுந்தி மிலேகணி வேங்கை வருக்கைப் பலாப்பனசம்
மடங்கிய தாதிம முந்தாது மாதளை மாதுளங்க
மிடந்தெழு மாதுளை சம்பு முருக்கெலு மிச்சமுமே. 9

*குருக்கத்தி, நாரத்தம், அகத்தி, களா, காயா, இலந்தை, நறவம், ஞாழல் மரம்*

210. குருகு குருக்கத்தி மாதவி யாகுங் குலநரந்தை
கருதிய நாரத்த மச்ச மகத்தி களங்களாவா
மிருள்காசை பூவைமென் காயா விரத்தி யிலந்தைதள்ளி
மருவு நறவ மதுநாகம் ஞாழல் மரமென்பரே. 10

*குஞ்குமம், உலவை, ஒடு, உன்னம், கமுகு, தணக்கு*

211. மலிமா தவந்துருக் கங்குங் குமமா மரமுழுஞ்சி
லுலவை யொடுவை யொடுப்பையோ டாண்மர முன்னமென்பர்
கலிகெழு பூகமும் பூக்கமுங் கந்தி கமுகதென்பர்
தலமிசை மேவு நுணவை தணக்கெனச் சாற்றுவரே. 11

*பனை, இளம்பனை, வாழை, தெங்கு, கரும்பு*

212. புனைதாலம் நீலம் பொருபெண்ணை போந்தைபுற் [ருளியென்னிற்
பனையாகும் போந்தை யிளம்பனை வாழை பயிலரம்பை
கனிநாளி கேரமுந் தாழையுந் தெங்கென்ப கன்னல்கழை
யினவேழ மிக்குக் கரும்பென வோது மெழுபுவியே. 12

*மூங்கில்*

213. வரைவேழங் காம்பு திகிரிமுந் தூழ்தட்டை வாங்கியபா
திரிகீ சகம்வெதி ரேபணை வேணுச் சிறந்தகழை
நிரைவேரல் விண்டுவேய் கண்பாண்டி லோங்கல் நெடுங் [கிளையே
யரிமேவு தூம்புடன் சந்திவை மூங்கி லமையென்பரே. 13

*தாழை, பூவாது காய்க்குமரம், வண்டுணுமலர்மரம், மரப்பொது*

214. கேதகை தாழை முடங்கல் மடிகைதை கேள்கண்டலாம்
போதணு காத குணமரங் கோளி புனைசெண்பகந்
தாதவிழ் வேங்கை யளிபயி லாமரந் தாபரமே
பாதவந் தாருத் தருமரப் பேர்பொதுப் பாசென்பரே. 14

*மரச்செறிவு, பொதும்பு, நந்தவனம்* r. 5726

215. கோல மரச்செறி வாகும் பொதும்பருங் கோடரமுஞ்
சாலும் பொதும்புத்தி யானமுய் யானமென் றண்டலையே
சோலைத்ண் காவல் பொழில்நந்த வானமந் துடவைநருக்
காலு முபவனந் தோட்ட மிளமரக் காவென்பரே. 15

*இலையுதிர்காடு, கரிகாடு, காவற்காடு, தூறு, இண்டை, முள், முள்ளுடை மூலம்*

216. இலையுதிர் காடு முதைசுரம் பொச்சை யெனிற்கரிக்கா
டலகி லரண்மிளை காவற்கா டென்ப ரரளிறும்பு
கலிகெழு தூறிண்டை யீங்கை கடுக்கண்டகமும் முள்ளும்
மலிதரு முண்டக மூள்ளுடை மூல வகைபெறுமே. 16

*காடு, பிரம்பு*

217. அடவி முளரி வனங்கான மாரணி யங்களரி
கடறு குறும்பொறை காந்தாரம் கட்சிவெங் காண்டமத்தம்
படர்தரஞ் சீரணி பொச்சை கவனம் பழுவந்தில்லம்
விடரிவை காடென்பர் வேத்திரஞ் சாதி விறற்பிரம்பே. 17

*மரக்காழ், வெளிற்றுமரம், புறக்காழ்மரம்*

218. அரிகலை யாசினி சேகே வயிர மவைமரக்கா
ழுரலன மாமர மகக்கா ழெலவே யுயர்முருக்கு
மருவிய பான்மர மெல்லாம் வெளிற்று மரமதென்பர்
கருதிய நற்புறக் காழ்பனை யேதெங்கு காற்கமுகே. 18

**சிறுதூறு, மருந்து, சல்லியகரணி**

219. திரண்ட பதுக்கை யரில்சிறு தூறு செழும்புதலே
பொருந்திய வல்லி மரம்பூடு புல்லுப் புகழ்ந்துரைக்கில்
மருந்தென லாஞ்சத் திரமே யுருவகை மாற்றுவதே
யிருந்திறற் சல்லிய கரணி யாக வறைந்தனரே. 19

**சந்தானகரணி, சமனகரணி, உயிர் தரு மருந்து**

220. சிந்து முடற்றுணி யெல்லா மொருவகை சேரும்வண்ணஞ்
சந்துசெய் விப்பது சந்தா னகரணி சார்தழும்பு
வந்த விரணமும் போக்கி விடுஞ்ச மனகரணி
யுந்திய மாமிருதஞ்சீ வனியு முயிர்தருமே. 20

**மரத்தின் இளமை, இளமைப்பெயர் பெருதவை, மரக்கொம்பு**

221. குழவிகன் றேபிள்ளை போத்தென் கிளவியுங் கூறினமாத்
தெழிலிள மைப்பெயர் நெல்லுடன் புல்லெனி லெய்தலுரு
வொழுகிய பொங்கர் சினைபணை சாய்கை யுறுப்புலவை
கொழுவிய கோடரங் கோடு பிறக்கமென் கொம்பென்பரே. 21

**தழை, இளங்கொம்பு, இலை, தளிர்**

222. தழையே யுலவை வளரிளங் கொம்பென்பர் தண்ணடையே
யெழிலோலை பாசடை பத்திரஞ் சாய்கை யிலகு பன்னம்
விழைவார் தமால மிலைவல் லரிமுரி மென்கிளையே •
குழைவார் கிசலைய மஞ்சரி பல்லவங் கொய்தளிரே. 22

**தளிர்த்தல், குருந்து, இணர், பழம், பரலினுட்படு குருத்து**

223. குழைத்த லிலிர்த்தல் தளிர்த்தல் முருந்து குருந்தெனலா
மெழிற்றகை மஞ்சரி கொத்துத் துணருடன் றெுத்திணராம்
பழப்பெய ரென்னிற் பசுங்கனி யாம்பலம் பரலினுட்பட்
டொழுக்கிய மென்குருத் துப் பயி னுகை வுரைத்தனரே. 23

**நந்தியாவத்தம், கஞ்சா, நொச்சி, கார்த்திகை நாண்மலர், காந்தள்**

224. மல்லல் வலம்புரி தானந்தி யாவத்த மன்னுகஞ்சங்
குல்லைகஞ் சாநொச்சி யேசிந்து வாரமென் கோடலுடன்
நல்லசெங் காந்தளுஞ் தோன்றியுங் கார்த்திகை நாண்மலராம்
புல்லும்வெங் காந்தளுங் கோடலென் றேசொல்லும்
[பூதலமே. 24

**ஊமத்தை, ஆமணக்கு, குறிஞ்சி, அலரி, வெட்சி**

225. இலகிய பூமத் தகமெனி லூமத்தை யேரண்டமே
குலவிய வாமணக் காகுங் குறிஞ்சியுங் கோரண்டமா
மலரி கணவரி மென்கர வீர மணுகுஞ் செச்சை
யுலைவில்செந் தூர மவைவெட்சி யாக வுரைசெய்வரே. 25

***சிறுமூலகம், பருத்தி, துழாய், மிளகு, கடுகு***

226. திப்பிலி காமஞ் சிறுமூ லகஞ்சிறு பூளை செப்பில்
ஒப்பி லுழிஞைவெங் காற்பாசம் பன்ன லொளிர்பருத்தி
கப்படர் குல்லை துளபந் துழாய்மரி சங்கறியாய்
வைப்பர் மிளகு கடிப்பகை யையவி வண்கடுகே. 26

***மஞ்சள், கருணை, வாசப்பண்டம்***

227. அரிசனம் பொன்மை யரித்திர மஞ்சளென் ருகுங்கந்தங்
கருணைதற் கோல மிலவங்க மேநற் றகரங்கோட்ட
மருவிய வேலம் வளர்சாதிக் காயுடன் மாஞ்சிமற்றும்
பரவுகைச் சோல மிவைவாச மேவிய பண்டங்களே. 27

***கொத்தமூரி, கழங்கு, கழல், கிலுகிலுப்பை, சேம்பு, சிறுகீரை, கற்ருழை***

228. உலகினு ளஞ்சிப் பெயர்கொத்த மூரிக் குரைப்பர்மண்மேற்
குலவிய மூழல் கழங்கோ கொடிக்கழல் கொய்பகன்றை
கிலுகிலுப் பைசகு டஞ்சேம்பு கேள்சிறுக் கீரையென்னிற்
குலைபெறு சாகினி சில்லி குமரிகற் ருழையதே. 28

***வழுதுணை, சாரல்விளையும் நெல், செந்நெல், குளநெல், தோரை, இறுங்கு***

229. ஆரும் பிரகதிர் வங்கம் வழுதுணை யையவனமே
சாரம் விளையுநெற் சாலியுஞ் செந்நெற் றயங்கியநீர்
வாரங் குளநெல்லி யவையுந் தோரை மலியுணவாம்
ஏருறு சொன்னலுஞ் சோளமுங் கூறி லிறுங்கென்பரே. 29

***கருந்தினை, செந்தினை, முதிரை, எள், எள்ளிளங்காய், கதிர், தினைத்தாள்***

230. இறடி கருந்தினை செந்தினை யேன லெழுமுதிரை
செறியு மவரை துவரைக ளென்னுந் திலமுமெள்ளுக்
கறைபயி லெள்ளிளங் காயென்பர் கௌவை கதிர்குரலாந்
திறியு மருவி யிருவியெல் லாந்தினைத் தாளென்பரே. 30

***பதர், வைக்கோல், போற்ருப்பொலி, பயிர், புல்பிறப்பு***

231. பதடி யெனிற்பத ராகும்வைக் கோல்வை பலாலமென்ப
ரதுவு முரைக்கி லழியென்ன லாம்பொங் கழியுரைக்கிற்
புதிய களந்தனிற் போற்ருப் பொலிபயிர் போற்றுபைங்கூ
மூதவி பசும்புற்கு மாம்புதற் புல்லென் ருெருபிறப்பே. 31

***கோற்கொடி, கற்பகம்சேர்கொடி, கொடி, மென்கொடி, நாரரி***

232. இலதை யெனும்பெயர் கோற்கொடி கற்பக மெய்துகொடிக்
குலம துரைத்திடில் மென்காமர் வல்லிவெங் கோற்கொடியாம்
நலமிகு மென்கொடிச் சாதிப் பிறப்புக்கள் நாரரியே
நிலைபெறு நெய்யரி தெங்குநார்ப் பாளைக்கு நேர்ந்ததுவே. 32

*வன்கொடி, கிழங்கு, இருவாச்சி, மல்லிகை, முல்லை*

233. வந்தெழு வல்லியும் வள்ளிலும் நூழிலும் வன்கொடியாங்
கந்தமு மூலமு மாகுங் கிழங்கு கமழ்மயிலை
முந்திரு வாச்சி முழுமௌவல் மல்லிகை மொய்த்தளவு
கொந்தணி மௌவலு முல்லையின் பேரென்று கூறுவரே. 33

*சிறுசண்பகம், பிச்சி, கொவ்வை, அடம்பு, சிறுதூறு, பீர்க்கு*

234. கருமுகை பித்தி சிறுசெண் பகங்கமழ் சாதியென்பர்
விரைமௌவல் மாலதி யேபிச்சி தொண்டையும் விம்பமுமே
யருகடர் கொவ்வை யடம்புசேர் பாலிகை யாமதிரல்
பிதிர்சிறு தூறென்பர் பீரமும் பீர்க்கென்று பேசினரே. 34

*கூதாளி, சிவதை, சீந்தில், காஞ்சொறி, ஏதாளி, தருப்பை*

235. கூதாள மேதுடி கூதாளி யென்பர் கொடிச்சிவதை
தீதார் பகன்றை யமுதவல் லிப்பெயர் சீந்திலென்பர்
மீதாரங் கண்டுரங் காஞ்சொறி பஞ்சிக மேயுரைக்கி
லேதாளி யாகுங் குசையே தருப்பை யிசைவுறுமே. 35

*நாணல், பஞ்சாய்க்கோரை, வாட்கோரை, முள்ளி, பாசி, குளிரி*

236. காசையு நாணல் எருவைபஞ் சாய்கழிக் கோரையகம்
வீசு செருந்தியும் வாட்கோரை முண்டக மேவுமுள்ளி
மூசிய சைவலஞ் சேயீர நார முழுப்பதியம்
பாசி குளிரி யெனிற்கல்ல காரம் பயின்றிடுமே. 36

*தாமரை*

237. வாரிசம் பங்கய முண்டகங் கோகன கம்வனசம்
வேரிய கஞ்ச முளரி சரோருகம் மென்மலரம்
போருகம் பற்ப மரவிந்தம் புண்டரி கங்கதிரோன்
றூரகம் போதம் புயஞ்சத பத்திரந் தாமரையே. 37

*கருங்குவளை, செங்குவளை*

238. சலசம் பதுமங் குசேசயம் என்பர்தண் காவிதடங்
குலவுமிந் தீவர நீலோற் பலமென் குவலையமே
யலர்தரு பானல் கருங்குவ ளைப்பெய ராமரத்தம்
பலசெங் குவளை கழுநீரும் பன்னுற் பலமென்பரே. 38

*நெய்தல், செவ்வாம்பல், வெள்ளாம்பல், அகவிதழ், புறவிதழ், பூவினுட்கொட்டை*

239. கருகிய நெய்தல் குவலைய மாகுங் கயிரவமே
யரிபயி லல்லி குமுதம்வெள் ளாம்ப லகவிதழே
பொருவரு மல்லி புறவிதழ் புல்லித ழாம்பொகுட்டுக்
குருகெழு பூவினுட் கொட்டையின் பேரென்று கூறினரே. 39

*நால்வகைப் பூ, மொட்டு, மலர்*

240. நீர்கொடி கோடு நிலமெனும் நால்வகை நீடியபூச்
சேர்கலி கைமுகி ழேநனை கோரகஞ் செவ்வரும்பு
வார்கணி கைநகை யேமுகி ழுஞ்சினை மாமலர்மொட்
டேர்கமழ் போது துணர்வீ யலரி யிணர்மலரே. 40

*வாகை, பழம்பூ, பூந்தாது, இதழ், மாலை*

241. வென்று புனைதரு பூவாகை செம்மல் மிகுபழம்பூ
மன்றலந் தாதென்னிற் கேசரங் கொங்கு மகரந்தமாந்
துன்றிய ஏடுடன் றேடு மலரிதழ் தொங்கல்கண்ணி
யொன்றிய கோதை தெரியல் அலங்க லொலியலுமே. 41

*மாலை, பிணையல், நுதல்மேலணி, வாசிகை*

242. தொடலை யிலம்பகந் தார்மாலை தாமஞ்செஞ் சூட்டணிபல்
படலை சிகழிகை வாசிகை கத்திகை பைம்பிணையல்
மிடல்தருஞ் சூட்டு மிலம்பக மும்நுதல் மேலணியாம்
அடர்முடி வாசச் சிகழிகை வாசிகை யாமென்பரே. 42

*பாரதிதீப வரலாறு*

243. விழியருள் பூண்ட நவதா ரணைமுகில் வேங்கடவன்
வழியினுள் வாழ்திரு வேங்கட பாரதி வண்டமிழின்
செழுமைய தாகு மிலக்கிய பாரதி தீபந்தன்னின்
மொழியொரு நான்கில் மரப்பேர்த்தொகுதி முடிந்ததுவே. 43

ஐந்தாவது

## இடப்பெயர்த் தொகுதி

*துறக்கத்தின்பெயர்*

244. வானகம் நாகம் பவன முயர்நிலை மாசுவர்க்கம்
தானம ராபதி யும் பரிடமைந் தருவுலக
மேனிலை பொன்னுல கம்விண் ணுலகம் விசும்பிடமே
கோனக ரிந்திர பதியே துறக்கங் குலவியதே. 1

*விஞ்சையர் சேர்விடம், வடக்கு, தெற்கு, மேற்கு, கிழக்கு*

245. தீதகல் சேணியுஞ் சேடியும் விஞ்சையர் சேர்விடமா
மாதுறு போக நிலம துவாகும் வடக்குத்தரங்
கோதறு தென்றிசை தெக்கணம் பச்சிம மேகுடக்குப்
போதுறு மேக்குக் கிழக்குக் குணதிசை பூருவமே. 2

*தேவகுருவம், உத்தரகுருவம், திக்கு*

246. தாதுறு தேவ குருவ முடனுத் தரகுருவ
மீதது வெள்ளி மலைபொன் மலைப்புற மேலரிதம்
மாதிரங் காட்டைக் ககுப மிசைபுல வம்பல்திசை
தீதக லாசை யுடன்கோ வெனலிவை திக்கென்பரே. 3

*பூமி*

247. அசலை யளக்கர் தரையே குவலைய மம்புவன
வசுமதி தாத்திரி சாந்தை விபுலை வசுந்தரைகூத்
திசைபயில் பூதலம் வேலா வலையஞ் செகம் பொறைமண்
இசைதரு பூமி மகிதலம் மேதினி யென்பர்களே. 4

248. தாரணி காசினி தாலந் தரணி தலம்புடவி
பாரக நேமி தராதலம் ஞாலம் படியவனி
பேருல கம்புவி பூதலம் வையம் பிருதுவிபூ
வாரி நிலம்பொழி லேகோ வகலிட மண்டிலமே. 5

*நரகம்*

249. இருநிலம் பாவம் வினைநில மள்ள லிருஞ்சிறையே
துரகதி கொல்கதி பாதகங் கும்பி சுடரெரியே
யருவினை சூழ்மடல் பாதாளம் பாதலத்(துடன) ளறு
நிரைய நிகோதம் நரகமென் றேசொல்லு நீணிலமே. 6

*உலகின் பொதுபெயர், நாடு*

250. நாகதலமுட ஞடும் பவனநன் ஞடுபொழில்
போக புடவி நிலமே யுலகின் பொதுப்பெயரே
யாகிய பைதிர மண்டிலம் பாண்டி லகலுள்கண்ட
மோகமென் றண்ணடை தெய்வநன் ஞடென் றுரைசெய்வரே. 7

*மலை*

251. வரைகுன்று நாகந் திகிரி யடுக்கல் மலைபொச்சைபூ
தரம்விண்டு சாரல்கல் வெற்புப் பிறங்கல் சயிலநகங்
கிரிதண் சிலம்பு குறும்பொறை வேதண்டங் கேள்பெருஞ்சி
கரிவெஞ் சிலைபறம் போங்கல் பொருப்பகங் கல்லகமே. 8

*மலை, மேருமலை, பொதியமலை*

252. இரவி குவடு நவிரம் பருப்பத மேயிறும்பத்
திரியச லங்குத் திரங்கோடு பொற்றை சிலோச்சயமே
தரமா திரமென்பர் பொன்மலை மேருத் தயங்குவட
வரையாகு மென்பர் பொதியல்தென் குன்ற மலையமதே. 9

*குன்று, மலையுச்சி, மலைப்பக்கம்*

253. குவடு பிறங்கல் பதலை குறும்பொறை குன்றிறும்பு
நவிலுவர் பொற்றை கொடுமுடி கோடு நலக்குவடு
தவசிக ரங்கிரி மேலுச்சி வாரம் தடஞ்சாரல்கான்
கவர்கட மென்னில் மலைப்பக்க மாகக் கருதுவரே. 10

*பாறை, துறுகல், மலைமுழை, பிலம், மலைப்பிளப்பு, கற்புழை, சிறுதிட்டை*

254. புலமிகு பாறை யறையே துறுகல் பொறைமுடுக்கர்
மலைமுழை கந்தர மாம்பிலங் கீழறை மன்றிரலுல
மலையின் பிளப் பேவிட ராகு முயர்கற்றிரட்
சிலைகற் புழையுங் கரணம் பதுக்கை சிறுதிட்டையே. 11

*விடர், திட்டை, உயர்நிலம், பரலடுத்துயர்நிலம், பாதலம்*

255. விடருங் கமருமவிப் பும்விட ரென்பர்கள் மேடுதிட்டை
திடவசு வல்வன் பால்கங்கர் குவால்குப்பை சேர்ந்தகுவை
யுடனுரை செய்யி லுயர்நில மாம்பர லுற்றுயர்ந்த
படர்நில மாகு முரம்பே யரம்பிலம் பாதலமே. 12

*கடல்*

256. பரவை யளக்கர் மகரா லையமத்தி பௌவமுந்நீர்
நரலை சமுத்திரம் வேலா வலையம் நதிபதியே
திரையிற வாலையங் கார்கோள் சவருப்புச் சிந்தலையு
வரிகூல ராசி கடல்வேலை யார்கலி வாருதியே. 13

*கடல், கடற்றிரை*

257. மாவாரி வீரை யுததி சலதி மகோததிபா
ராவார நேமி பெருநீர் புணரிமை யம்பரமே
பூவாடை சாகரஞ் சக்கர மாழி புணரியுட
னேவாத வோதங் கடற்றிரை யாக வுரைசெய்வரே. 14

*நீர்த்திரை, கடற்கரை, நீர்க்கரை*

258. தரங்கங்கல் லோலம் விசிகர மேயறல் தத்துமலை
விரிந்தநன் னீர்த்திரை யாமென்பர் பாரமல் வேலையுட
னருங்கரை கோடணை கூலமந் தீர மடர்வரைபார்
பொருந்திய வாசப் புனலின் கரைக்குப் பொதுப்பெயரே. 15

*செய்கரை, மலைச்சாரல் வரும் ஆறு, முல்லைநிலக் கான்யாறு, ஆறு*

259. செங்குலை சேதுக் குரம்பிவை செய்கரை தெள்ளருவி
யங்கிரிச் சாரல் வருமா றுயவை யருங்கலுழி
தங்கிய முல்லை நிலக்கானி யாறுந்தி தன்குடிஞை
பொங்கிய சிந்து நதியா றெனவும் புகன்றனரே. 16

*கழிமுகம், உப்பளம், காவிரி, பொருனை, ஆன்பொருனை*

260. புகல்புகா ரோடை யதோமுக மென்னிற் பொருந்துகழி
முகமது வாகு முகங்காய லாங்கழி மொய்யுப்பளந்
தகுகானல் காவிரி பொன்னி பொருனையந் தண்பொருந்த
மகவானி யானி யிவையான் பொருனைக் கடைத்ததுவே. 17

*வாவி*

261. அலந்தை கிடங்கு சுனையோடை கோட்டக மாவிமடு
விலஞ்சி படுக்கயங் கேணியுவளக மேரிபொய்கை
சலந்தரம் பட்டங் குளமே தடாகந் தடம்வலைய
மலங்கல்குட் டங்குண்ட மேவாவி சூழி யகண்டனையே. 18

*ஆற்றிடைக்குறை, கிணறு, ஊறல், நீர்க்குமிழி, ஆழம்*

262. அறியி லிலங்கை துருத்திய ரங்கமவ் வாற்றிடையிற்
குறை கிணரு மென்பர்கூவ லசும்புடன் கூபமிவை
யுறவியு மூறல் குமிழியும் புற்புத மோங்குபௌவம்
நிறைநுரை யாழ மழுந்தயங் குண்டு நெடுங்கயமே. 19

*நிறைபுனல், சேறு*

263. வாரி நிறையும் புனலே பிராறு வழாறு மென்பர்
நீருறு பள்ளம்வெங் காலாழந் தொள்ளி நிலையளக்கர்
காரகற் பூமிகுழை சேத கம்பங் கமானதொய்யல்
சீரில் செறும்புடன் செய்யலென் ரேதுவர் சேற்றினையே. 20

*பொல்லாநிலம், வெள்ளைமணல், மணற்குன்று, நுண்மணல், புழுதி*

264. சாலு மசுத்தம்பொல் லாத்தல மேயங் கணஞ்சகதி
வாலுகம் வெள்ளை மணலே புளின மணற்குன்றென்பர்
மேலற லாகுங் கருமணல் நுண்மணல் மேவியதாம்
பாலயிர் பூழி புழுதி பொடிக்குப் பகர்ந்ததுவே. 21

*குறிஞ்சி, நெய்தல், முல்லை, பாலை, மருதம்*

265. குலமலைச் சார்பிட மாகுங் குறிஞ்சி மகோததிசூழ்
நிலமெனில் நெய்தல் வனஞ்சார் நிலமுல்லை நீரின்றியே
யுலர்நிலம் பாலை பணையே கழனி யுயர்பழன
மலிதரு பானல் வயல்சூழ் நிலமு மருதமதே. 22

*முல்லை, குறிஞ்சி, பாலை, வன்பால், மென்பால், சமப்பால், கருநிலம்*

266. பேராப் புறவம் பணைமுல்லை யாகும் பெயர்குறிஞ்சி
பாராரும் பாலை குறிஞ்சிவன் பாலை பகுத்தமென்பாலை
நீரார் மருதஞ் சமபடர் முல்லையு நெய்தல்வனங்
காரார் மலைப்புனல் தன்னில் மிகுஞ்சொற் கருநிலமே. 23

*ஊர்*

267. சிறுகுடி பாக்கம் பதிநக ரேநொச்சி சேரிபுரங்
குறிபயில் பாடி யகலுழ் குறும்பு குறிச்சிமுட்ட
மிறையக ரம்பட்டி னம்பாழி பூக்க மிருக்கைகுப்ப
முறையுளங் கோசர மேபூண்டி வேலிதொல் லூரென்பரே. 24

*குறிஞ்சி நிலத்தூர், முல்லை நிலத்தூர், நெய்தல் நிலத்தூர், பாலை நிலத்தூர், மருதநிலத்தூர்*

268. குறிஞ்சி நிலத்த சீறூர் குறிச்சி குலவுமுல்லை
செறிந்தது பாடியும் பட்டின நெய்தலைச் சேர்ந்ததென்பர்
மறந்தரு பாலை குறும்பு முனையிடம் வாட்கையுட
னுறைந்தது தண்ணடை யாகு மருதத்தி லூர்ப்பெயரே. 25

*பதி, நகரப்பதி, பகைநிலத்துறைபதி, சூழ்கழி*

269. பூரியம் பூக்கங் குடிக்கா டுறையுள் புனையருப்பம்
பாருறை செய்(யினி) லுழர்பதி யென்பர் பாடிபதி
சேரி புரநக ரப்பதி பாசறை தெ(ம்)முனைசேர் .
சூரிடந் தோணு முகமே யிருக்கைமுன் சூழ்கழியே. 26

*மலை ஆறு சார்ந்த ஊர், ஊர்சூழ் பதி, அரணிருக்கை, புகார், கருவூர், மதுரை*

270. கிரியா றிரண்டு மகலாத வூரெனிற் கேடகமா
மருகூ ருறைபதி கூறில் மடப்ப மரணிருக்கை
பொருகோ டெனிற்குறும் பாமென்பர் காகந்தி போற்றும்புகார்
கருவூரணி வஞ்சி கூடல் மதுரைக்குக் கற்பித்ததே. 27

*உறையூர், பாடி, தெரு, அங்காடி*

271\. பயில்தரு கோழி யுறையூரச் சேரியும் பாடியென்பர்
நியமமன் னுவண மேவீதி கோசுடன் னெள்ளல்மறு
குயர்தெரு மார்க்க மெனலா நியமமொண் கூலமுடன்
வியலுறு மாவண மங்காடி யாக விளம்புவரே. 28

*கோயில், மாதவர் வாழிடம்*

272\. குலவு சினகரஞ் சேதியந் தேவர்தங் கோயிலென்ப
நிலைய நிகேதன மாதிர மாலைய நீடுபள்ளி
மலிதரு கோட்டங் குலமே யுறையுள்வன் பாழிமன்னும்
நலமிகு மாதவர் வாழிட மாக நவிலுவரே. 29

*விடு, இல், சிற்றில்*

273\. மாடம் வசதி பதிபாத்தில் சேர்வு வயினுறையுள்
வீடகம் புக்கில் லிடமே யிடவகை மேவுநகர்
கூடு மனை பவ னங்குல மாளிகை கூறிலில்லா
நீடிய சிற்றில் குரம்பையுங் கூரையு நேர்படுமே. 30

*இறப்பு, முகடு, தாழ்வாரம், அடுக்களை, சாளரம்*

274\. மூரி யிறையிறப் பாகும் விடங்க முகடென்பதாழ்
வார மெனத்தகுஞ் சோபான மட்டில் மடப்பளியுங்
சாரு மடுக்களை சாலேகஞ் சாலகஞ் சாளரமே
சீரிய நூழைதொல் வாதா யனமெனச் செப்பினரே. 31

*கல்லூரி, வேயுள், பீடம், சுவர்த்தலை, திண்ணை*

275\. மிகுகல்வி யூவியுங் கல்லூரி வேயுளும் வேய்தலென்ருகும்
சொகுதகு பீடமும் பீடிகை யாகுஞ் சுவர்த்தலையும்
புகலுவர் வித்தகர் பித்திகை யாகப் புனையுந்தெற்றி
திகழ்தரு வேதிகை திட்டை மண்ணீ டென்பர் திண்ணையையே. [32

*நிலாமுன்றில், சித்திரகூடம், மன்றம், கழகம்*

276\. நிலமுன்றி லங்கண முற்ற மரமிய நீடுநிலாக்
குலாமுன்றி லாந்தெற்றி யம்பலஞ் சித்திர கூடமென்பர்
மலியும் பொதுவில் பொதுவம் பலமிவை மன்றமென்பர்
கலைதரு கல்வி பயில்கள மாகுஞ் கழகமுமே. 33

*கழகம், அரசர்கள் இருக்கை, அரங்கு*

277\. வல்லும் படையுநற் சூதுடன் மாறு மகிழ்ந்த கல்வி
சொல்லுங் களமுங் கழக மரசர்கள் சூழ்ந்திருக்கை
புல்லும் பெயரி னிலத்தாணி யாடிடம் போரிடமே
வெல்லும்வட் டாடிட மேயரங் காக விதித்தனரே. 34

*ஒருசிறை, அணியவிடம், உறைவிடம், மக்கள் உறங்கிடம்*

278. அறியி லொருசிறை யேதுச்சில் கொட்டி லணியவிட
முறைவிட மேபிறப் பாகரம் பாழி யுறையுள் பள்ளி
செறிசய னங்கட்சி பாய லமளிமெய் சேர்விடமே
யுறைவரு சட்டகஞ் சேக்கையு மக்க ளுறங்கிடமே. 35

*குதிரைப் பந்தி, யானை மேவிடம், யானை செல்வழி, கூடு, வேள்விக் குண்டம்*

279. செயமாவின் பந்தி பணைமந் திரந்தண்டஞ் சேவகமே
கயமே விடங்கயஞ் செல்வழி தண்டங் கருதுங்கட்சி
வியலார் குடம்பைவெம் பஞ்சரங் கூடென்பர் வேள்விக்குண்ட
முயர்வான தீத்தமும் வேதியு மாக வுரைசெய்வரே. 36

*மட்கலம் வேமிடம், சுடுகாடு, தொழு*

280. மருவிய மண்கலம் வேமிடஞ் சூளை மயானமுடன்
கரிபுறங் காடு சுடுநில மீமம்வெங் காளவனம்
பெரும்பிணக் காடு சுடுகாடு வெய்ய பிதிர்வனமாம்
நிரைதொழுத் தோழ மான்வேலி தொறுவா னிலையென்பரே. 37

*போர்க்களம்*

281. செருநில மாகவ பூமி யமர்க்களஞ் செம்புலமே
பொருகள மேயுத்த பூமிசங்கி ராமமண் போர்க்களமே
வெருவு பறந்தலை யாயோ தனதலம் வெங்களமே
பரிய பிணக்களம் வெஞ்சம தேசம் படுகளமே. 38

*வழுக்குநிலம், மதில், சிறை*

282. ஆரிடை தீய வருட மருப்ப மவைவழுக்குப்
பாரி கலிஞ்சி யெயில் சுற்றுக் காவல் பயில்வரைப்புப்
பேரரண் காப்புப் புரிசை புகன்மதிற் பேரெனலாம்
சேருமு வளகம் வன்சிறை யாகவுஞ் செப்பினரே. 39

*மதிற்சுற்று, மதிலுறுப்பு, அகழி*

283. வாரி தகைப்புத் தொடையெனிற் சுற்று மதிலுறுப்புச்
சேரும் விதப்புப் பதப்பாடு ஞாயில் திறவெந்திரம்
போருறு நாஞ்சி லுடன்ரேணி கோசம் பொருந்துமென்ப
ராரகழ் கூறி லகப்பாப் பவிக மகன்கிடங்கே. 40

*வாய்தல், பெருவாயில், பெருவாயிலில் புகும் பூழை, வயல்*

284. வரவியல் தோட்டி துவாரமும் வாரியும் வாய்தல் வண்கோ
புரமது சொல்லிற் பெருவாயி லென்பர் புதவுரைக்கிற்
பெருகிய வாயிலிற் போம்பெரும் பூழை பெருவிளையுள்
கருதிய செய்யும் வயலே விளையுங் கழனியுமே. 41

*குறிஞ்சி சாருநிலம், பழங்கொல்லை, புதுக்கொல்லை, தினைப்புனம்*

285. சேரும் வரவை தடிபாத்தியோடு செறிகுறிஞ்சி
சாரு நிலங்கொல்லை தண்புன மாம்பழை தானகொல்லைப்
பேரு முதைப்புன மாம்புதுக் கொல்லையின் பேரிதையாம்
காருறு மேனல் தினைப்புன மாகக் கருதுவரே. 42

*தோட்டம், உழவு, உழவோர் வளைப்பு, புதுவரம்பு, வரம்பருகு, புற்று*

286. துடவை படப்பை யெனுமிவை தோட்டந் துடவைதொய்ய
லுடனுழ வின்பெய ரோதுந் தொடுப்புழ வோர்வளைப்பு
வடிவமில் மாசி முதுவரம் பாகும் வரம்பருகா
மடர்தரு கங்குவன் மீகமும் புற்றென் றறைகுவரே. 43

*சூழ்வழி, அருநெறி, கவர்த்த நெறி, இழிவேற்ற வழி*

287. நடவை செலவு சுரஞ்செப்ப மாரிடை நாடுமத்தந்
தொடரு மொழுக்குச் சிறுபத மேயிவை சூழ்வழியாங்
கடறு சுரமத்தந் தூம்பா மருநெறி கார்க்கவலை
படருங் கவர்த்த நெறியிழி வேற்ற படுகருமே. 44

*புற்றம்பழஞ்சோறு, முதுநிலம், வழி*

288. குளிர்தரு புற்றம் பழஞ்சோ றுரைக்கிற் குரும்பியென்பர்
களரி கரம்பை பெரும்பாழ் முதுநிலங் கான்கடறு
வளர்நெறி யாறு பதமார்க்கந் தாரி வழிவருந்து
தளர்தரும் வட்டை பதவை யிகவு சரியென்பரே. 45

*இடம், பள்ளம்*

289. புலங்களம் பாங்கர் வயின்வாய் வழியுழி போற்றுதிணை
நிலந்தலம் வைப்பு மருங்கு வளாகம் நிகிலம்பட்டி
யிலங்கிய தான முடன்சூழல் பாலிட மென்பர்பள்ள
முலர்ந்த கிழக்கவல் கீழே படுக ருவளகமே. 46

*பக்கம், நடு, மேல்*

290. பக்கம் மருங்குமுன் பால்பாங்க ரேபுழை பாடுசிறை
மிக்க புடையிடம் ஞாங்கரென் றேதுவர் மேவுமிடை
யொக்கு நனந்தலை மத்திமம் நாப்ப ணுடனுெத்தல்நள்
மிக்க நடுவும்பர் மீமிசை தானிவை மேலென்பரே. 47

*உயர்ச்சி, முன்னே, வந்துறல், முன்னர்*

291. உந்தி நிவப்பு வணந்துங்க மோக்க முடன்வலனே
முந்திய மோடிவை யாக்கு முயர்ச்சி மொழியின்முன்னே
வந்துறல் மேல்மருங் கர்ஞாங்க ரென்பர் மலிதலைத்தாள்
நந்துமுதன் முன்னர்த் தானுகுமென்று நவிலுவரே. 48

*இம்பர், உம்பர், ஈண்டு, ஆண்டு, கூப்பிடுதூரம், கோழிப்பறவை, காதம்*

292. இலகிய விம்ப ரிவணே யவணும்ப ரீண்டிவ்விட
மலேவறு மவ்விட மேயெனி லாண்டென்ப ரானவெல்லே
குலவு குரோசமுன் கூப்பிடுங் கோழிப் பறவையென்னிற்
கலிகிர வுஞ்சமக் காவதந் தானென்பர் காதமுமே. 49

*இடவகை, பாரதிதீப வரலாறு*

293. பின்னுழை கால்புறங் கீழ்மேல் கடைதலே பேணியசார்
முன்னிடந் தேவகை பால்வல மாமிட முந்துதமிழ்ப்
பண்ணிய பாரதி பாரதி தீபம் பயில்தொகுதி
யன்ன விடப்பெய ரஞ்சா வதுமுடி வான்துவே. 50

ஆறுவது

# பல்பொருட் பெயர்த் தொகுதி

*பொன்*

294. கனக மிரணிய மாடக மாழை கருந்தனங்காஞ்
சனநிதி பீதகஞ் சாமீ கரம்பூரி சந்திரந்த
மனியம் வெறுக்கை நிதானம்பு வஞ்சுவனந் தொடுக்கம்
புனைதன மேயரி சாம்பு னதஞ்சொன்னம் பொன்னென்பரே. 1

***பொன், ஐந்துலோகம், உலோகப்பொது, நவமணி, கடவுள்மணி***

295. இரணிய மீழம் பொருள்காண மீகையே மம்மிரும்போ
டுரைதரும் வெள்ளிபோன் னீயஞ்செம் பாமைந் துலோகமெல்
[லாங்
கருதுபொன் னென்பர் நவமணி மற்றக் கடவுள்மணிக்
கருள்பெய ரேதொன் னிதியே நிதான மணுகியதே. 2

*மாணிக்கம், மணிப் பொதுப்பெயர், கனமணி, முத்து*

296. மாமணி யும்பற்ம ராகமு மாணிக்க மாமனவுந்
தேமணி காசு மணிபேர்ப் பொதுப்பேர்ச் சிலாகையென்னு
நாம மரதன மாகுங் கனமணி நற்றரளங்
கோமலி நித்தில முத்தார மாகவும் கூறினரே. 3

***பவளம், சங்கநிதி, பற்மநிதி, பண்டாரம், வெண்கலம்***

297. துகிர்வித் துரும மரத்தந் துவர்பிர வாளந்துப்புத்
தகுசொற் பவளஞ்சங் கின்வடி வாமென்பர் சங்கநிதி
பகர்பற்ம மேய்தரும் பற்ம நிதியும்பண் டாரமென்பர்
மிகைவுற்ற கோசந்தண் டங்கஞ்ச மாமென்பர் வெண்கலமே. 4

***வெள்ளி, செம்பு, பித்தளை, ஈயம், இரும்பு***

298. இரசதந் தாரங் களதபு தம்வெள்ளி யென்பர்சுற்பம்
பெருகிய சீருணந் தாம்பிரஞ் செம்பென்பர் பித்தளையாய்
வருமார கூடமு மாயா புரியுமன சீருள்வங்கங்
கருதிய வீயங் கருந்தா தயமென்பர் காரிரும்பே. 5

*காந்தமணி, சந்திரனொளியில் புனல் காலு மணி, சூரியனொளியில் கனல் காலுமணி, படிகம்*

299. இரும்பை வலிப்பது காந்த மணியிந் திரேகை கண்டால்
தரும்புனல் கால்வது சந்திர காந்தந் தரணியொளி
கருங்கனல் கால்வது சூரிய காந்த மணிபளிங்கு
திருந்து பருக்கைவெண் காழே படிகஞ் சிறந்ததுவே. 6

*சங்குமணி, பலகறை, பலபண்டம், அரும்பண்டம்*

300. கண்ணிய சங்கு மணியக்கு வட்டி கவடியல
கெண்ணிய சோகி பலகறை வெள்வா கெழில்வளமே
பண்ணிய கூல முடன்பண் ணிகாரம் பலபண்டமாம்
நண்ணிய தார மரும்பண்ட மென்று நவிலுவரே. 7

*கருப்பூரம், கத்தூரி, மெய்ப்பூசு சாந்து, சாந்தின் பொதுப்பெயர்*

301. மலிகருப் பூரம் பளிதங்கத் தூரியும் மான்மதமாம்
புலியொடு வட்டிகை காலேகம் பீதமெய்ப் பூசியசாந்
திலகிய பேர்த கரங்கல வைச்சே றினியதளம்
புலர்விரை காலேக வண்ணமச் சாந்தின் பொதுப்பெயரே. 8

*பூசுவன, செந்தாது, மயிர்ச்சாந்து, செறிகுழம்பு, அப்பல், பூசுதல்*

302. குளிரங் கராகமும் பூசு வனகுங் குமமுஞ்செந்தா
திளகுந் தகர முடனேலங் காசறை யேமயிர்ச்சாந்
தளவில் செறிகுழம் பாஞ்செச்சை தேய்வைகொட் டலப்பலாம்
புளக மிகுக்க வரித்தல் புலர்த்தல்மெய் பூசுதலே. 9

*தொய்யில், திலகம், நுதல் எழுதுகுறி, அரத்தம், குங்கிலியம்*

303. மானுர் முலேயிற் றெழிலுற் றெழுதி வரித்தல் தொய்யில்
தானுந் திலகஞ் சுடிகைபொற் சுட்டி தயங்குநுத
லானு தெழுது குறிப்புண் டரந்துப் பரத்தமாகக்
கேனுடுங் குங்குலுக்குற் குலுக்குங் கிலியமென்பரே. 10

*பெருங்காயம், சாதிலிங்கம், சாமரம், அச்சுதம்*

304. இங்கென லாகும் பெருங்கா யமுமிங் குலிகமுடன்
றங்குசிந் தூர மிவைசாதி லிங்கஞ் சவரியுடன்
றுங்கவெண் சாய்மரஞ் சாமர மென்பர் துணர்க்கவரி
யங்க வரிசி யறுகைமெய் கூட்டி யதச்சுதமே. 11

*அதிமதுரம், பிரப்பு, ஓம விறகு, நெருப்புமலி விறகு*

305. கூறுமதிங்க மென்னட்டி மதுரமுங் கொள்கலமென்
றேறிய பல்லுண வெல்லாங் குறுணிகொண் டேயளந்து
வேறுறப் பாலிப் பதுபிரப் போமவிற கென்னலா
மாறில் சமிதை ஞெகிழி நெருப்பு மலிவிறகே. 12

**கடைக்கொள்ளி, கரி, சாம்பல், சாந்து, புகை**

306. எரிகடைக் கொள்ளி முளரி யலாத மிராதமென்பர்
கரிகந் துளேயிருந் தாமென்பர் வெண்பலி சாரடலே
சொரிகின்ற சாம்பல் சுதைகள பஞ்சுடு சுண்ணமுஞ்சாந்
தரிபுகை தூபமுடன் றூம மாமென் றறைகுவரே. 13

**நறைப்புகை, பொடி, இலவம்பஞ்சு**

307. புதிய நறைப்புகை யென்னிற் குருப்புகைப் பொற்பிதிரே
சிதர்ப் பராகந்ததர் சின்ன பின்னந் திகழ்துகள்நீ
றுதவிய சுண்ண முடன்றுதுப் பூதி யொருபொடியா
முதிரில வம்பஞ்சு பூளையென் றேசொல்லு மூவுலகே. 14

**பருத்தி, பஞ்சுநுனி, சோறு**

308. பரிபன்னல் பஞ்சுகாற் பாசம் பருத்திதுய் பஞ்சினுனி
மிரலன்ன மோதனம் போனகம் பொம்மல் மிசைப்புத்துப்பு
வருகவ ளஞ்சொன்றி கூழ்மூரல் புன்க மடைமிதவை
சொரியுண வேபதம் பாளித மேவல்சி சோறென்பரே. 15

**உண்டி, உணவு நுகர்தல்**

309. அயினி யசன மமலை புழுக்க லடிசில்புகாப்
பயில்தரு முண்டி மிசைத லயிறல் பரிகரித்தல்
மயமோ டருந்த லுணுவார்த லேநுங்கல் மாந்தல்துய்த்த
லியல்போடு மேவல் பொசித்த னுகருதற் கேற்றனவே. 16

**அடிசில், புழுக்கல், தேவருணவு, பொரிக்குங்கறி, பிட்டு**

310. அடுப வடிசில் புழுக்கல் புழுக்குவ வாமமுதே
யிடுபலி யேசரு வேயவி தேவ ரெழிலுணவா
முடலுப தானமைத் துப்பொரிக் குங்கறி யுங்கருனை
யிடிதரு வோதையு மாவியு மாகும்பிட் டென்பதுவே. 17

**அடை, அப்பம், பிண்டி, புளிங்கறி, குழம்பு**

311. அடைமோ தகமயில் சஷ்குல்லி பூரிகை யானகஞ்ச
முடனெலே யல்தோசை தானப்ப மாகு மொருநுவணை
யிடியாகு நுண்பிண்டி கூட்டமைத் தேயினி தேற்றதுவை
படுமே புளிங்கறி பாகே குழம்பு பயின்றதுவே. 18

**கஞ்சி, தயிர், பால், நெய், மோர்**

312. வடிகஞ்சி காடி மலிகாடி மேழை மருவுததி
யுடனளை யேதயிர் கீர மமுத முதவுபயந்
தொடர்வுறு பாலிழு தேகிரு தாச்சியந் துப்புநெய்யா
முடைமு சரேதக் கிரம்பிரை மச்சிகை மோரென்பரே. 19

**தேன், சர்க்கரை, கண்டுசர்க்கரை**

313. குலவு பிரச மதுத்தேன் விசையங் குளங்கன்னலே
யிலகிய பாகுடன் கட்டியக் கார மிவைசர்க்கரை
தலமிகு கண்ட முடன்பாளி தங்கண்டு சர்க்கரையே
நலமிகு புல்லகண் டம்மதிற் பேதம் நணுகியதே. 20

**கள், பருகுமவையின் பொதுப்பெயர்**

314. சுரைநனை யிக்கு நறவு வடிமட்டுத் தோப்பிதொண்டி
பிரசம் வழிமதுச் சாறே தணியல் பிழிபடுதேன்
முருகுபைந் தேறலுடன் பானஞ் சாதி மொழியிற் கள்ளாம்
புரைதபு பானம் பருகு மவையின் பொதுப்பெயரே. 21

**கள்ளின் பேதம்**

315. பாலி சுமாலி மதுகரஞ் சூழிகை பாடலியே
மாலி சுலோகி யுடனும்பல் மாதுவ மேமருட்டஞ்
சாலி விசுணி யுணுமுண்ட கந்தமஞ் சக்கரமே
வேலிவெங் கஞ்சாவு நள்ளிகட் பேத மிகுபெயரே. 22

**அமுது, நஞ்சு, உண்பன, தின்பன, விலங்கினுணவு**

316. வாரி யமுதின் பெயர்மருந் தாகும் வளர்கரளங்
காரி கடுவிட மேயாலம் நீலம்வெங் காளநஞ்சாம்
சீருறு துற்றியு முண்பன திற்றியுந் தின்பனவாங்
கூரிலை தின்னும் விலங்கி னுணவு குளகென்பரே. 23

**விலங்கு பறவை உணவு, ஒழிபொருள், பேய்த்தேர்**

317. விலங்கு பறவையெனு மிரண் டிற்கு மிகுமுணவை
யிலங்கு மிரையுண்டி யாமென்பர் மிச்சிலு மெச்சிலுமே
துலங்கு மொழிபொரு ளெச்சிலு முச்சிட்டஞ் சொல்லுபவை
மலிந்த வுகளம் வெண்டேர்கானல் பேய்த்தேர் மசரதமே. 24

**உபகரணம், நிரை, அலகு**

318. துப்பே சாதனந் துணைக்கா ரணத்தைத் தொடர்ந்துரைக்கு
மொப்பி லுபகரணப்பெய ராமென்ப ரோளிபந்தி
தப்பி லொழுங்கு நிரைமகி ழின்பரற் றன்னுடனே
செப்பு மணியிவை யெல்லா மலகெனச் சேர்ந்ததுவே. 25

**பாரதிதீப வரலாறு**

319. சேருரகளப் புயன்செயங் கொண்டவன் சிந்தையன்பு
மாறுது மாதவஞ் செய்தருள் பாரதி வாதுகவிக்
கேறுன வன்சொன்ன பாரதி தீபத்தி லெண்ணுகின்ற
வாறு வதுபல் பொருட்பேர்த் தொகுதிமுற் றுனதுவே. 26

ஏழாவது

# செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி

**செயற்கையது, சூலப்படை**

320. தோலினில் மண்ணி லெழுவகை லோகத்திற் றென்மரத்தில்
நூலினிற் செய்தல் செயற்கை யதாங்கண் ணுதல்படைக்கு
மூல மெனிற்கழு முள்முத் தலைக்கழு மூவிலைய
வேலிவை சூலப் படைவடி வாக விளம்புவரே. 1

**மழு, சக்கிரம், அரியின் வில், அரன்வில்**

321. பரசு கணிச்சி நவியமு மேமழு வாம்படைதி
கிரிவளை யெஃகஞ் சுதரி சனஞ்சக் கிரம்பருதி
தருகதிர் நேமி யழலாழி யாமென்பர் சாரங்கவில்
லரிதன தாகும் பினாகவில் லான தரன்றனதே. 2

**வில், வேல்**

322. குனிதரு சாபஞ் சராசனங் கார்முகங் கோதண்டமே
தனுக்கொடு மரஞ்சா ரங்கம்பினா கந்தவர் வில்லென்பர்
நனிதரு குந்தமுடம்பிடி யெஃகமும் ஞாங்கரரண்
வினைதரு சத்திவிட் டேறோ டயிலிவை வேலென்பரே. 3

**அம்பு**

323. வரி வாளி வண்டு பகழிபல் லம்புங்கம் வன்கணைகோல்
தெரிபாண மாற்கணந் தொடை விசிகஞ் சிலீமுகங்கோச்
சரமா சுகம்பத் திரங்கொத்தி ரங்கங்கந் தாரையம்போ
டரிகாண்ட மத்திர மொட்டு தண்டமு மம்பென்பரே. 4

**கைவேல், வச்சிரப்படை, வாள்**

324. மெச்சிய கப்பணந் தோமரங் கைவேல் விகற்பமென்பர்
வச்சிர மென்னிற் குலிச மசனி வயிரப்படை
நச்சு கட்கம் வசிகண்ட மெந்திர நாந்தகங்(கைவ)ா
ளச்சுறு மேதி கரவாளங் கோண மவையென்பரே. 5

**ஈர்வாள், உடைவாள், கழுக்கடை, பிண்டிபாலம், கொடுவாள்**

325. வரைவேதி னங்கர பத்திர மீர்தரு வாளதென்பர்
சுரிகை கழுமு ளுடைவாள் கழுக்கடையா (கச் சொல்லும்)
பரவிய பீலித்தண் டெஃக மெனிற்பிண்டி பாலமென்ப
ரரிதரு புள்ளங் குயங்கொடு வாளென் றறைகுவரே. 6

***தண்டாயுதம், இரும்புலக்கை, உளிக்கருவி இலைமுக்கரிகத்தி, நாராசம், இருப்புமுள்***

326. தடிதண்டா முசல மிருப்புலக் கையதென்பர்
விதியி லுளிக்கரு விப்போ தரிவிக் கருவியென்பர்
முதுதழல் தண்ணங் குளிரிலை முக்கரி கத்தியென்பர்
எதிர்பொரு சலாகையு நாராசந் தாறென் றிருப்புமுள்ளே. 7

***ஆயுதப்பொது, ஆயுதக்கூர்மை, கவண்***

327. படையே திதுப்புக் கழுமுட் கடுமுட் படைக்கலமே
யடர்சா தனம்பொது வாயுதப் பேர்வள் ளயிலிங்கிதம்
வடிவார் நுதிநுனை வையே பூவசி வயிர்மழுவாங்
கடைசாமை கல்லெறி யுங்கவ ணுகுங் கவணையதே. 8

***நுனை, படையுறை, அம்புபெய்கூடு, மெய்யுறை***

328. தடநுதி நுங்கி நுனைக்கரு விப்புட்டில தானதென்ப
படையுறை யாவமுந் தூணியு மம்புபெய் பாத்திரமா
மடரிர ணங்கவ சங்கண்ட மெய்புக வாங்கருவி
தொடர்தரு பாலிகை மெய்யுறை யாகவுஞ் சொல்லுவரே. 9

***தலைக்கீடு, பரிசை, பலகை, தோற்பலகை***

329. கீசகஞ் சிக்கந் தலைக்கீடு சேடகங் கேடகந்தோல்.
வீசுற்ற வீதிகைப் பட்டம் பரிசை மிகுபெயரா
மாசுற்ற கட்டினந் தட்டு மாவட் டணம்பலகை
சோதித்த தோற்பல கைப்பெயர் தோற்பரந் தோலென்பரே. 10

***கைக்கட்டி, குதிரைக்கலணை, குதிரைவாய்புகுகருவி, குசைக்கயிறு, குதிரைச்சம்மட்டி***

330. அருள்கைப் படையுடன் கோதையுங் கைக்கட்டி
[யாகுமென்பர்
பருமம் படை பல்லணம் பண்கல ணைபரி பகுவாய்க்
கருவியின் பேருங் கரிளே கலினம்வற் கங்குசையாந்
தரிவெறு மத்திகை கோலெனிறி சம்மட்டி தானென்பரே. 11

***யானைக் கழுத்திடு கயிறு, தளை, பற்றிரும்பு, பாடகம்***

331. கலந்தபு ரோசை கவடுங் கரிக்கழுத் திற்கயிறும்
விலங்கு நிகளந் தொடர்தளை வல்லி மிகுபறளை
பலங்கொள் பறலிகை யள்ளு வலியெனிற் பற்றிரும்பா
மலங்கிய பாத கடகமும் பாடக மாமென்பரே. 12

***பதகிண்கிணி, அரக்குடைச்சிலம்பு, காலிலங்கு மணிவடம்***

332. பதகிண் கிணிமணி யாகும் பரிபுர நூபுரத்தோ
டுதவும் பரியக மென்ப ரிரத முடன்ஞெகிழி
யதுவு மரக்குடைச் சூலச் சிலம்பணி யாகுமக்கா
லிலகு மணிவடம் பாதசா லம்மென் றியம்புவரே. 13

*காலணிவடம், மேகலை, அரைப்பட்டிகை, சதங்கை*

333. விதமார் கொடையினில் வீரத்தில் வீக்கிய மெய்க்கழலே
யதுகான் மிசையி லணிவடங் காஞ்சி கலாபமனு
வெதிர்மே கலைகலை (யென்னி) லரைப் பட்டி கையின்பெயர்
பதமார் சதங்கையுங் கிண்கிணி யாகப் பகருவரே. 14

*பதக்கம், மாதர்முலையணிவடம், பூணின் புணர்வு*

334. அருள்பதக் கங்கண்டி கையார மாரம் பதக்க(மதா)ங்
கருதுமக் கோவையுங் காசுட னரமுங் கண்டிகையு
மருவிய மாலையு மானுர் முலையின் மணிவடமாம்
பொருவில் கயிலுங் கடையுமெய்ப் பூணின் புணர்வென்பரே. 15

*தொங்கல், துடக்குவடிவு, தோளணி, கங்கணம், கைவளை*

335. தொங்கல் நிதிவடந் தூக மதிலிகைத் தூக்கந்துடக்
கங்கதந் தோளணி கேயூர மாகு மணிகடகந்
தங்கிய கங்கண மும்மாகுஞ் சூடகஞ் சங்குதொடி
பைங்குரு கேவண் டுசரிகன்று கைவளைப் பாற்படுமே. 16

*குண்டலம், காதணி நுதற்சுடிகை, பட்டம், சிரமாலை*

336. கோடு மிருசிகைக் காதணி செம்பொற் குழைகுண்டலம்
வேடகம் புல்லிகை மேவுங் கடிப்பிணை வீசியபொற்
றேடவை காதுக் கணிப்பெயர் சுட்டி நுதற்சுடிகை
யோடைபொற் பட்டமன் காரோடி தான்சிரத் தோடொடையே.
[17

*நுதலணிபூண், கிரீடம், ஆபரணப்பொது, பேரணிகலம்*

337. (வடிநுதற்) பூணும் இலம்பகம் புல்லக மாஞ்சுடிகை
முடியே மௌலி மகுடங் கிரீடமொய் சேகரமாம்
படரிழை நாண்கலம் பூணணி தானு பரணமதாம்
அடருரு பூணு மதாணியு மாம்பே ரணிகலமே. 18

*வட்டில், நாழிகை வட்டில், சட்டுவம், கண்ணடி*

338. தட்டகை யுண்கலந் தாலங்கிண் ணங்கோரந் தாரைவள்ளம்
வட்டில தாங்கன்ன ஞழி கைவட் டில்சிர கந்தவ்வி
சட்டுவ மாடி படிமக் கலந்தர்ப் பணங்கஞ்சனை
யிட்டிய வாதரி சனங்கண் ணடி யெனுமுலகே. 19

*கண்டைமணி, எறிமணி, சிறுசின்னம், காளம், குறிஞ்சிப்பறை*

339. எண்டிசை யேண மிபமணி கண்டை யெறிமணிசே
கண்டிபொற் பீலி சிறுசின்னங் காகளங் காளமதாம்
தொண்டக மோடு துடியே முருகியந் துங்கவென்றி
கொண்ட குறிஞ்சிப் பறையென யாவருங் கூறுவரே. 20

*வேடர் பறை, முல்லையார் பறை, மருதப் பறை, ஒருகண் பறை, உடுக்கை*

340. விறல்பயி லுந்துடி வேடர்தந் தொல்பறை மென்முல்லையார்
பறையே கோட்பறை பம்பையு மாகும் பணைகிணையே
நிறைமரு தப்பறை சாப்பறை நெய்தற் பறையொருகண்
ணுறுபறை மொந்தை யுடுக்கை யொடுந்தண் ணுமை
[யென்பரே. 21

*இடைசுருங்கு பறை, சிறியபறை, பரந்தபறை, முழவம், குடமுழவம், படகம்*

341. துடியே யிடைசுருங் குஞ்சிறு தொல்பறை யாகுளியே
படைசேர் சிறிய பறைவாய் பரந்த பறைபதலை
முடஞ்சேர் முரவங் குளிரே முழாமண் சிலைமுழவங்
குடமா முழவம் படகமு மானகங் கூறுவரே. 22

*பணைப்பொது, பேரிகை*

342. புணர்தரு பீலி முருடு முரசு பொருமுழவு
பணைதரு கோடணை தூரிய மாகும் பணைப்பொதுப்பேர்
துணைதரு சண்டை முரசம்ப ணைதுந் துமிசகடை
தணிதரு பேரிகைக் கூட்டமென் றேதமிழ் சாற்றியதே. 23

*பல்வகைப் பறை, கொம்பு, யாழ் நரம்பு*

343. அம்பணந் திண்டிகை யான கஞ்சல் லரியாம்படகம்
பம்பை தடாரி தக்கையே பல்வகைப் பறைப்பேர்
கொம்பெனி லாம்ப லிரலை வயிரொடு கோடெனலாம்
நம்பிய கோல்தந் திரிகுரல் யாழி னரம்பெனரே. 24

*யாழ், வார்க்கட்டு, முறுக்காணி, நால்வகையாழ்*

344. தந்திரி கின்னரம் வீணை விபஞ்சிதந் தாழ்கருவி
யுந்திய வல்லதி பேரிகை நல்லியாழ்ப் பெயரேர்திவவு
முந்திய வார்க்கட்டு மாடக மும்முறுக் காணியென்ப
கொந்தி பேரியாழ் மகரஞ் சகோடஞ்செங் கோடென்பரே. 25

*தேர், தேர்க்கால், உருளியகக்கதிர்*

345. இரதந் திகிரி சயந்தன மெந்திர மேகவரி
யுரவங் கொடுஞ்சிவை யந்தேர் திகிரி யுருளியுந்தி
தெரியும் பருதி யுடனேமி யாழிபொற் சில்லியத்தே
ரருகொன்று காலென்ப ராரே யுருளி யகக்கதிரே. 26

*பாண்டில் பூண்ட ஊர்தி, பண்டி, தேர்மேலிடு பரம்பு*

346. உகையுஞ் சிவிகை யுடன்பாண்டில் பூண்டரு ளூர்தியுடன்
சகடம்பெறும் வையஞ் சாகாடு சாடு சகடொழுகை
பகர்கின்ற வைய முருள்பண்டி யாகும் பலவகையி
லிகல்தட்டுப் பாவென்பர் தேர்மே லடர விடுபரம்பே. 27

*திடர், தேர்ப்புடைசூழ் மரச்சுற்று, கலப்பை, பலவுறுப்பாகிய வோருறுப்பு*

347. திடரே யெழுவுங் கணையமு மாங்கிடு கேதிகழ்தேர்ப்
புடைசூழ் மரச்சுற்று நாஞ்சி லலம்படை பொற்கலனை
யடைவான நான்குங் கலப்பைய தாமக் கலப்பையத
னுடனுர் கலனை பலவுறுப் பாகிய வோருறுப்பே. 28

*தேர்மொட்டு, தூண், யானையணைதறி, வேள்வித்தறி*

348. சிந்தைசெய் கூவிரங் கூம்பு கொடிஞ்சியுந் தேர்மொட்டதாந்
கந்தெழு வேவெளி லாளனங் கம்பங் கருந்தறியோ
டந்தி மதலையுந் தூணும் வெளிலுட ளுளானமுந்
தந்தி யணைதறி யூபமும் வேள்வித் தறியென்பரே. 29

*குறுந்தறி, கதவு, தாழ், உரல், ஊஞ்சல், உறி*

349. போதிகை யென்பர் குறுந்தறி வாரி புதவுடனே
தீதில் கபாடங் கதவென்பர் தாழெனிற் சீப்பெனலாம்
மோதுங் கறையு முலூ கமு மாமுர லூசலுமே
மேதகு மூஞ்சல் சிமிலி சிரஞ்சிக்க மேலுறியே. 30

*கட்டில், பரண், இறைவை (ஏணி), கண்ணேணி, கிளிகடிகருவி, குறுந்தடி*

350. பதியும் பரியங்கம் பாரிமஞ் (சங்) கட்டிலாம்பணவை
யிதணங் கழுது பரணே கடவை யிறைவை யெம்மா
லுதவுங்கண் ணேணி குளிர்தழ லேதட்டை யோதிற்கிள்ளை
யதுகடி யுங்கரு விப்பேர் குறுந்தடி யாங்குணிலே. 31

*துடுப்பு, அடைகுறடு, பெருங்குறடு, மரக்கலம்*

351. அறில்துடு வைதுடுப் பாகும் பட்டடை யாகுமடை
குறடு முருடு பெருங்குற டாகுங் குலமதலை
துறைதரு வாதைவங் கந்தோணி பாறம்பி தொள்ளு நவ்வே
மறிதரு நாவாய் சதாவே ப∴றி மரக்கலமே. 32

*மரக்கலப்பாய், ஓடம், தோணி, தெப்பம், கமண்டலம்*

352. பாடின் மரக்கலப் பாயிதை யாகும் பகறிபக
டோடம தாகுந் திமில்தோணி யென்ப ருயர்பகடு
தேடரு மம்பி மிதவை புணையெனிற் றெப்பமதாங்
கூடுங் கமண்டல மாகுங் கரண்டகங் குண்டிகையே. 33

*பேழை, கெண்டிகை, பீடிகை, கொள்கலம்*

353. எண்டரு மிஞ்சிகை மஞ்சகம் பேழை யெனவறைவர்
கண்டங் கரண்டகங் கோடீ ரத்தொடு கடிப்பமதாங்
கெண்டிகை பீடிகை யாகுந் துமானங் கிளரலங்கல்
கொண்டணி சாந்து மடியிலை சேர்கலங் கொள்கலமே. 34

**உடை, பொதி, திடமிகு கொள்கலம், கொல்லன் சின்னத்தட்டு, பீலியிற் கட்டும் கவிகை**

354. உடைகலை யாகும் பொதிமூடை யாகு முயர்பகுவாய்
திடமிகு கொள்கல மாகும் பிழாக் கொல்லஞ் சின்னந்தட்டா
மடர்தரு கன்னங் கலாபத் தழைதொங்க லானவிவை
தொடைதரு பீலியிற் கட்டுங் கவிகை யெனச்சொல்வரே. 35

**வெண்குடை, ஆலவட்டம், சிற்ருல வட்டம்**

355. தொங்க லுடன்சத் திரமே கவிகை தொடர்ந்த பிச்ச
மிங்கிவை வெண்குடை காலசெய் வட்டமுக மேவிசிறி
யங்கவை வீசத் தகுமால வட்ட மதுவொழிந்து
தங்கிய பீலிசெய் சிற்ருல வட்டமுஞ் சாற்றினரே. 36

**மயிர்வாரும் சீப்பு, சூதாடுகருவி, பந்து, சும்மாடு, துண்டம்**

356. கருதிய சிக்க மயிர்வாருஞ் சீப்பின்பேர் காசும்வல்லும்
பரவிய சூதுட ளுடுதல் கந்துகம் பந்தென்பதாம்
மருவு சுமடு சுமையடை யாகுஞ்சும் மாடதென்பர்
முரிசெய் கடிகை யெனிற்றுண்டங் கண்ட மொழிகுவரே. 37

**வார், கயிற்றுவலை, கயிறு, செருப்பு, அடிதொடுவது, துருத்தி**

357. காசறு வள்வகிர் வாராகுஞ் சாலங் கயிற்றுவலை
பாசமு நாணுங் கயிறது வாகும் பதந்தொடுதோ
லாசில் கழலிவை தோற்செருப் பாகு மடிதொடுவ
தோசமில் பாதுகை நீர்தூஞ் சிவிறி துருத்தியதே. 38

**குடம், கரகம், பானை, மிடா, தாழி**

358. கடமே யிடங்கர் தசும்பிரும் பைகும்பங் கன்னலிவை
குடமாகுங் கன்னல் சிரகங் கரகங் குழிசிமிடாத்
தடவாகும் பானை யகளமும் வம்புந் தடாவுமிடா
வடர்சாடி தாழி யகளம் பதலை யவையென்பரே. 39

**நீர்நிறைசால், அகல், இரப்போர்கலன், குயவன் மண்ணரிநார், நூல், துன்னம்**

359. தொகுமிடங் கர்வட்டம் நீர்நிறை சால்சார்வஞ் சுத்தியுமே
யகலிரப் போர்க லனையங் கடிகை யவையென்பர்மட்
பகைகுய வன்மண் ணரிநா ரதென்பர் பனுவல்தந்துப்
புகல்நூல தேயென்பர் துன்னமும் பொல்லம் பொருந்துமதே. 40

**கூறை, பட்டாடை**

360. மடிதுகில் தானை கலிங்க முடைதூசு வாதனமே
படமாடை காழக மம்பரம் புட்டம்பட் டங்கலையாம்
புடவை யறுவை படாஞ்சம் பஞ்சேலை போற்றிலிவை
யடர்கூறை பாளிதங் கோசிக மாகும்பட் டாடையதே. 41

*நல்லாடை, மரவுரி, சம்படாம்*

361. திகழே டகம்புகழ் வேதிகை சில்லிகை சித்திலிகை
யகல்தூரி யங்கத்தி யங்கருள் பாரிநல் லாடையென்பர்
மகிழ்சீரை வற்கலை தன்னே டிறைஞ்சி மரவுரியாம்
பகர்வாகுங் கம்பளஞ் சிம்புளி யேசம் படாமென்பரே. 42

*கச்சு, அத்தவாளம், மேற்கட்டி, உத்திரிகம், சட்டை*

362. வம்புறு வார்கச்சு வடகமு மாமத்த வாளமென்பர்
கம்பல மோடு விதானமேற் கட்டி யேகாசமெனி
னம்புத் திரிக மெனலாகு மங்கி நயந்த மெய்ப்பை
தம்பமெய்க் கஞ்சுகங் குப்பாயம் வாரணஞ் சட்டையதே. 43

*இடுதிரை, கொடி, சிறுகொடி*

363. இகலி னெழினி படங்கண்ட மாகு மிடுதிரையே
துகிலிகை கேதனம் வானி பதாகை துவசமுட
னிகரில் படாகை விலோதன மேகொடி நீளுலகோர்
புகலுங் கதலிகை யாகுஞ் சிறுகொடிப் பூவையரே. 44

*சீரை, மெத்தை, சித்திரப்படம், தீட்டுதல்*

364. அத்தகு சீரை சிதவல் சிதாரென் னணைதளிமம்
மெத்தை யெனச்சித் திரபடம் பொத்தக மேவியபேர்
சுத்தத் துகிலிகை வட்டிகை யோவியஞ் சொல்லிலிவை
சித்திரம் ரேகை யெழுதல் பொறிவரி தீட்டுதலே. 45

*பாரதிதீப வரலாறு*

365. மின்செயற் காரிற் றருபா ரதிதிரு வேங்கடவ
னின்செயற் சீருற்ற வேழாவ தென்ன வியல்தெரிந்தோன்
றென்சிலைச் செந்தமிழ்ப் பாரதி பாரதி தீபந்தன்னின்
முன்செயற் கைவடி வப்போர்த் தொகுதி முடிந்ததுவே. 46

எட்டாவது

## பண்புபற்றிய பெயர்த் தொகுதி

*பண்பின் இயல்பு*

366. கருது வடிவி னளவில்வண் ணத்தினிற் காண்டலுற்ற
பொருளி னுணர்விற் புலப்படு முண்மைப் பொருவுதனப்
பரவு குணத்தொடு பண்ணவை பண்பென லாமவற்றைத்
தெரிய வுரைக்கி னவைபல வாகுந் திறத்தனவே. 1

*வட்டம், வளைவு*

367. பருதி விருத்த முடன்கோ ளகைதட்டுப் பாலிகைசக்
கரம்வலை யங்கொம்மை மண்டல மாழி கடகஞ்சில்லி
தருபாண் டிலேதி கிரிநேமி வட்டந் தரங்குடிலம்
வரவாங்கல் கோட்டம் வணரே குலாவல் வளைவென்பரே. 2

*திரள் வடிவு, குவிதல் வடிவு*

368. செற்றிய பந்தங் குலம்புஞ் சயங்கொம்மை சேடுகணை
துற்றே செறியுந் துறுமல் குவிதல் தொகுதியுண்டை
மற்றுரை மாழைபிண் டந்திரள் வாகும் வடிவுகுவால்
குற்ற விராசி குவைகுப்பை யாகுங் குவிதலுமே. 3

*தொகுதி, ஐம்மை வடிவு, பரந்த வடிவு, குமிழ்ப்பு வடிவு, மொக்குள் வடிவு*

369. தொடருமொய் தோடு குழுமல் திரளுந் தொகுதியென்ப
ரடர்தொறு துற்றுத் துறுகு வரிமுத லைம்மையதாம்
படலை படர்ச்சி பரந்த வடிவினம் பைங்குமிழ்ப்பு
வடிவு புளகமக் கொப்புள மொக்குள் வடிவென்பரே. 4

*உட்டுளை வடிவு, உண்டை, துளைப்பொருள், கற்றை, சற்சரை வடிவு*

370. புழையுட் டுளையது தூம்புட ஞுழி சுரைபூண்டுளை
குழியந் திரளுண்டை யாகுங் குழியம் புழல்குழலுங்
கழல்துளை கற்றை மயிரின் றெகுதி கதிர்த்தொகுதி
விழைபிண ரேசற் சரைவடி வாக விளம்புவரே. 5

*பெருமை*

371. பாடு தடவு தடம்விபு லம்வியல் பாழிகண் மால்
மோடு பிறங்கல் நளியே யியக்க முடலைபணை
யீடு கயவு பரிமுரி நன்று வியத்தகைமாப்
பீடோ டகலுள்முன் பின் செம்ம லண்ணல் பெருமையதே. 6

*மிகுதி, சிறுமை*

372. உறுதவ மாற்ற லறிவே விதப்பிறப் போடுறுப்புச்
செறிநளி யேநனி யான்றல் பிறங்கல் சிறப்படலை
யறிகய வேபொம்மல் பொக்கம் அதிக மதுமிகுதி
சிறுமை யணுவஞ்சந் தன்றுசின் னம்வறி தாசென்பரே. 7

***உயர்ச்சி, தூரம், சிறிது, விரிவாமிடம்***

373. உரைநிவப் பேந்தல் பிறங்கல் நிமிர்த லுகப்புன்னதம்
புரைதுங்க மோங்க லுடன்சே ணுயர்ச்சி யெனப்புகல்வர்
(தெரி) சேணு நீளிடை யுஞ்சேயுந் தூரந் திலஞ்சிறிதாம்
விரிவா மிடம்பரப் பாகும் விசாலம் விபுலமுமே. 8

***பரவுதல், நீளம், கூடுவது***

374. பரவை ஞெமிர்தல் பரப்புடன் பாய்தல் (பரவு)தலாம்
விரிவாதல் போக லொழுக நெடுமை வடிதநெடில்
நிரைசே ணுடனீக்கல் தீர்தல்நேர் பாடிவை நீளமதாங்
குரையார் குவிதல் பயனியுங் கூடலுங் கூடுவதே. 9

***நுண்மை, அகலம்***

375. நுணுகு நுணுக்கு நுணுக்கம் நிழற்றல் நுவணைநொசி
வணுவு நுழைநுனை சாய்வோய்த லாய்தலவை நுண்மையா
முணரி லகறல் வியலிடம் பாழி யுடனகலுள்
நணுகு நளிகண் ணறையே யகலத்தி னுமங்களே. 10

***குன்றல், உள்ள நெறியில் சிறத்தல், பருமை, முழுவது***

376. அறவு மருகுதல் வீய்தல் சுருங்குத லஃகுதலே
குறைதல் சிறுகுதல் குன்றல் கழிவுடன் கூர்ப்புமுள்ள
நெறியிற் சிறக்கும் பருஉம்பீன மென்னவென் னிற்பருமை
முறையி லகில முழுவது மாமென்பர் மொய்குழலே. 11

***மென்மை, செறிவு, மிடைதல்***

377. தாங்கு கயவுமொய் மேம்பாடு சால்புடன் சாயல்மென்மை
வீங்கல் பொதுளல் விறைப்போ டுறைப்பு வெறுப்புநளி
தீங்கல துற்றுடன் றேற்றுக் குடிலஞ் செறிவதென்பர்
ஓங்கு ததைதல் துதைதல் மிடைதலென் றேதுவரே. 12

*நிறைவு, அளவின்மை, வண்ணம்*

378. மலிர்தல் மலிதல் நெகிழ்தல் தெவிழ்தல்மல் கல்துவன்றல்
நிலைபெற வார்தல் கழிதல் நிறைவென்பர் நீடனந்த
மலைவி லபார மபருமித மும்மவ் வளவின்மையாம்
பொலிவெண்மை செம்மை கருமை பசுமைசெம் பொன்
[வண்ணமே. 13

*சிவப்பு, பொன்னிறம்*

379. தொக்க வரத்தந் துவரரக்குச் செம்மை சோணந்துப்புச்
செக்க ருடன்பாட லங்குலி கமத்துச் சிந்துரமே
தக்க விராக மருணஞ் சிவப்பென்பர் பீதகமே
புற்கலம் பிங்கல மாகிய மூன்றும் பொன்னிறமே. 14

*குரானிறம், புன்மை, வெண்மை, பச்சை நிறம்*

380. போற்றுங் கபிலம் குரானிற மாகும் புகர்புன்மைவால்
தோற்றுஞ் சுவேத முடன்பால் தவளந் துலங்குவெண்மை
சாற்றிய பாசும் பசுமையும் பைத்துடன் சாமளமும்
நேற்றிசெய் பச்சை நிறமென வேசொல்வர் நேரிழையே. 15

*கருமை நிறம், நிறப்பொது, மலினம்*

381. கருமை களங்கங் கறைநீலங் காளகங் காளிமமாம்
பொருவரு மஞ்சனங் காரென்பர் மாமை புகர்கெழுவே
யுருவொடு கேழ்சந்தம் வண்ணங் குருவு மொளிநிறமா
(ம)ருகறை (மா)சு கசடு களிங்க மலினமதே. 16

*ஒளி, ஒளிவிடல்*

382. விரிய விலக்கஞ் சுடர்கதிர் வாள்வில் வெயில்நிலவு
கிரணமெல் லேதெளிர் தேசு துலக்கங் கெழுதகையே
மருவொளி யாகு மிலங்கல் சுடர்தல் வயங்கலவிர்
உருவு தயங்க லொளிர்தல் நகுத லொளிவிடலே. 17

*கட்டழகு, அழகு, பேரழகு*

383. ஏரணி யாணர்க் கவினே விடங்க மெழில்வனப்புக்
காரிகை வாம முடன்பொற்புக் காமருங் கட்டழகாம்
ஆரழ கென்பர் பொலஞ் செவ்வி மாண்புபை யையணிசேர்
சீரழ கென்சித் திரம்பே ரழகுவி சித்திரமே. 18

*வலி, வடிவு, வண்ணம்*

384. உரமிட லாற்றன் முடலை மதுகை யுடன்மல்லலே
முரணெறும் கொற்றம் வயம்பாழி மூரிமுடுகல்மைந்து
வரு (மாண்மை) திண்மைதுப் பூக்கமுன் பேவல மானம்வலி
தருமோர் வடிவெனிற் செண்ணம்வண் ணஞ்சந்தந் தானதுவே.
19

*மதர்த்தல், நொய்தாதல், எளிமை, தண்மை, அழல், மானம்*

385. ஒண்மை மதர்வு மதர்த்தனெய் தாத லுரைக்கினெய்வா
மெண்மையுந் தண்மையுந் தஞ்சமு மாகு மெளிமை யென்பர்
வெண்மை வெளிறிவை தண்மை யழலுருப் பம்வெப்பமாம்
மண்மிகு மானம் பெரிதன்மை குற்றமு மன்னுமதே. 20

*இழித்தகுவு, சீதளம், வீரம், வரையறை, எல்லை, அளவை*

386. இளிவே பரிபவ மென்னி விழித்தகு வாகுமென்பர்
நளிசீதஞ் சீதளம் வீரம் விறல்வெற்றி நல்குமென்ப
ரளவே நிரையெண் வரையறை யேணி யதுவரைப்போ
டுளவாம் வரம்பெல்லை கச்ச மளவை யுறுகடனே. 21

*அளவு, விசையம், வெற்றி, கூறுபாடு*

387. காறு துணைவரை நேர்பிர மாணமக் காலமுடன்
தாறே யவதி யளவாம் வலங்கொற்றந் தான்விசையங்
கூறிய வாகை யுடனுட லாடிவை கூடும்வெற்றி
வேறு வகையுந் திறங்கூறு பாடதன் மேல்வருமே. 22

*அறிவு, தொலைவு, கருத்து*

388. உணர்வே புலனெண்மை காட்சிமெஞ் ஞான முரனறிவாந்
துணையி னிலைகெடல் தோற்றல் தொலைவென்பர் சூழல்செத்துப்
புணர்குறிப பிங்கிதஞ் சிந்தை நினைவுன்னல் போதமுள்ளல்
கணமொடு கண்ணல் விரும்பல் கவைஞர் கருத்தென்பரே. 23

*விருப்பு, உள்ளுணர்வு*

389. மாதர் விழைவுபற் றேவெம்மை காமமெய் வாஞ்சைநசை
யாதர வார்வ முடன் பெட்டல் வெஃக லவாவிராவே
காத லிவர லுடன்வீழ்தல் தாழ்தல்வெங் காமர்பெட்பும்
ஓதில் விருப்பென்பர் ஞானமுஞ் சீலமு முள்ளுணர்வே. 24

*அன்பு, அருள், கைக்கிளை, பெருந்திணை, காமக்கவலை*

390. பரிவீர மார்வ மளிநார் புரியுடன் பற்றுமன்பே
யருளே கருணை யிரக்கம தாங்கைக் கிளையதுவே
யொருதலை மால்பொருந் தாமற் பெருந்திணை யோரமதன்
விரகவெங் காமக் கவலையென் றேசொல்லு மேதினியே. 25

*வேட்கைப் பெருக்கம், மாட்சி, செற்றம்*

391. மிகுவே ணவாவென்னில் வேட்கைப் பெருக்க மிகுந்தகுதி
தகவொடு தக்கது மாண்மாண் டல் மாட்சிய தாமுனிவு
வெகுளி செயிர்கறு வுஞ்சீற்ற மேகத மேகறுப்பொ
டகலா வயிர முடன்கோர மேசெற்ற மாமென்பரே. 26

*சினக்குறிப்பு, அதிசயம்*

392. கறுப்புச் சிவப்பு வியர்ப்புப் புழுங்கல் கனலல்கன்றல்
செறுத்தல் புகைத லுடன்வெய் துறலுஞ் சினக்குறிப்பாம்
விறற்றகு விம்மித மேயிறும் பூது வியப்புமிலைச்
சறத்தவர் யாரு மதிசய மாக வறைவர்களே. 27

*அதிசயத்தோடு இரக்கம், உள்ளக்களிப்பு, கண்ணோட்டம்*

393. அவையவ ரோவென வையோவந் தோவென வன்னோவெனு
மிவையு மதிசயந் தன்னோ டிரக்க மெழுசெருக்குக்
கவலு மதர்ப்புப் பெருமித மத்தங் களிப்புளமா
முவமையில் கேண்மை நயநாக ரிகங்கண் ணோட்டமதே. 28

*அழுக்காறு, மனக்கோட்டம், மறத்தல், இறுமாப்பு, மலர்ச்சி, உள்ளந்துணிந்தெழல்*

394. மிஞ்சா மனச்சமுக் கம்மழுக் காறவ் வியன்மனக்கோட்
டஞ்சோர் பிகட்சி பொய்ச்சாப்பே மறவி யறமறத்த
லெஞ்சாத வேக்கமுத் தம்மிறு மாப்புச்செம் மாப்பதென்னிற்
றுஞ்சா மலர்ச்சி யுரனூக்க முள்ளந் துணிந்தெழலே. 29

*கொடுமை, நிலையுடைமை, கோரம், நாணம், பேரறிவு*

395. நிகரில் கொடுமையுங் கோணென்ப வேணு நிலையுடைமை
தகுதியில் கோரங் கொடுமை கடுமையுஞ் சண்டமுமாம்
நகைதரு மானமும் வெள்கலும் வட்கலும் நாணம்நல்கு
முகரிமை யும்பேரறி வென்பதாகு முதுக்குறையே. 30

*கருதுதல், மதித்தல், இன்பம், தளர்வு, குறிப்பு*

396. கதித்தல் குறித்த லுணருதல் சுட்டல் கருதுதலா
மதித்த லதாகுங் கருதுதல் பேணல் மகிழ்நயமு
மெதிர்த்த மகிழ்வு நகையாகு நல்லின்பங் கேட்டைதளர்
வுதித்த சொன் னுட்டியந் தானே குறிப்பென் றுரைத்தனரே. 31

*சுழற்சி, ஐயம், பொல்லாங்கு*

397. கூறு மலம்வரல் கொட்புச் சுழல்வுகொ ளிற்கறங்கன்
மாறுந் தெருமர லாகுஞ் சுழற்சிகொல் மானுதலே
வேறனு மானமு மாசங்கை யும்மைய மேவுமென்ப
சூறெடு கோளிவை பொல்லாங் கெனவு முரைத்தனரே. 32

*நன்மை, இரக்கம், அகமகிழ்ச்சி*

398. மன்னிய வண்ண மணிமா சறலுடன் மானுறுதி
நன்னர் நறுமை நயஞ்சீ ரிவையென்னி னன்மையதா
மின்ன லிணைவெற் றிரக்கம தானந்த மின்பமென்னி
லன்ன வகமகிழ் வார்ந்தொய்யல் கட்டியு மப்பெயரே. 33

*அறிமடம், அறியாமை, அறிவின் திறம், மெய்யுவகை, கொண்டது மறவாமை*

399. அறிமட மாகு மறிந்தறி யாமையெய் யாமையென னுந்
திறனறி யாமையுந் துயவே யறிவின் றிறமதென்பர்
தறவுசெய் யோகையு மாரா யமுமெய் யுவகையென்பர்
கறுவுத லேகொண் டதுமற வாமை கடைப்பிடியே. 34

*நோய், உன்மத்தம், வறுமை*

400. மழுக லழுங்கல் மடங்கலுர் பையுண் மடிபிணிசூ
ழழிவுறு நோயென்பர் மாழாத்தல் மால்மற லாகுமிருள்
கழுமல் மருண்மைந் துணராமை மாழ்தல் களிமயக்க
மொழிவறு மைய லுடன் மான்றன் மாலுத லுன்மத்தமே. 35

*பொருமை, பொறை, அகல்வின்மை, வறுமை, மிகத்தெளிவு*

401. நோனமை யென்னிற் பொருமைய தாநுண்மை நோன்றல்
யானமை யோடுதண் டாமை யிரண்டு மகல்வின்மையே
தானகு மின்மை யிலம்பா டுடனெற்கந் தான்வறுமை
மேன லுணர்வுடன் றேற்றந் துணிவு மிகத்தெளிவே. 36

*தனிமை, பொலிவு, வருத்தம்*

402. புலம்பு தனிமை துவன்றல் கலித்தல்பொற் புப்பம்பலே
மலைந்த கஞற லுடன்றுப் புவப்பு மலிபொலிவாங்
கலங்க லுலங்க லயர்வே யணுக் கங்கவாவணங்கு
மலங்கல் கசிவு வயாவா குலமும் வருத்தமதே. 37

*சோம்பு, பொலிவழிதல், ஒண்மை*

403. தீங்குசெ யஞ்ச லழுங்க லலைசுதல் சிந்தித்தலே
தூங்க லசைதல் மடியிவை சோம்பென்பர் சொன்மழுங்கல்
போங்கலி னெய்திய புல்லென லாகும் பொலிவழித
லோங்கிய நன்மை மிகுதி யறிவொழுங் கொண்மையதே. 38

*அச்சம்*

404. அதிர்ப்பு வெருவலுர் கம்பலை வெம்மை யழற்றிவெறி
பொதிர்ப்புத் துணுக்க முடன்பீதி கூசல் புரனடுக்கல்
விதிர்ப்புத் துளக்கம் புலம்பல் தெருமரல் மெய்யழிதல்
கொதித்துப் பனித்த லுலைதல் கவலைக் குணமச்சமே. 39

*அன்பின்நடையது, மெலிவு, செயலறவு, அடைக்கலம்*

405. நயனள வின்பம் பயனிவை யன்பின் நடையதென்பர்
அயரு மொடுக்கமச் சாம்புதல் கூம்புத லாகுஞொள்கல்
வியனுறு சிக்க முனிவே மெலிவென்பர் கையறவே
செயலற வென்ப ரடைக்கலங் கையடை சேருமதே, 40

*துன்பம்*

406. படர்துனி துக்கம் புலம்பெல்லங் கம்பலை பையுள்செல்லல்
நடலை யிடுக்க ணுரல்லல் பீழை நழுங்கரந்தை
கடிய கவலை வறுமை பருவரல் கவ்வைபனி
தொடரு மறுகல் பனிபுன்கண் சூரிவை துன்பங்களே. 41

*துன்பம், பகை, மெலிவு*

407. விழும மழுங்கல் சிறுமை யுடன்வெய் துறலிரக்க
மழுதுய ரேயின்னல் பீடையு மத்துன்ப மாகுமென்பர்
எழுமுரண் டெவ்வு முனையுறழ் தூவோ டிகல்பகையாங்
கழிதரு புன்கண் பழங்கண் மெலிவென்பர் கற்றவரே. 42

*குற்றம்*

408. காசு கசடு நவையே மறுக்கங் கவடுபழி
மாசு தவறு களங்கம் வசைபுரை மானம்வடு
வாசு செயிர்புகர் பொக்குப் பழுதோ டனுர் கோதுதோந்
தோசம்பொல் லாப்புத் துராலிவை குற்ற மெனச்சொல்வரே. 43

*வஞ்சனை, நட்பு, கையொழியாமை, ஒழுகலாறு, ஒழுக்கம்*

409. கொடுமைசெய் குத்திரங் கைதவம் புள்ளுவங் கூடமுடன்
கெடவரு பட்டிமை மாயமும் வஞ்சனை கேண்மைநற்கோள்
தொடர்பது நட்புக்கை தூவாமை கையொழி யாமைசொல்லுங்
கடிய கையா றொழுகல்லா றொழுக்கமுங் கையதுவே. 44

*பழமை, இன்பம், மேற்கோள்*

410. தொன்மை தொடர்புடன் றொத்தொடு பூருவந் தொன்று
[தொல்லை
முன்னை புராணம் புராதனந் தொண்டு முதுமைமுந்தை
யின்னவை யாகும் பழமை நயனேம மின்பமென்பர்
மன்னிய பூட்கையும் மேற்கொ ளெனவும் வகுத்தனரே. 45

*புதுமை, ஈன்றணுமை, பிறப்பு*

411. யாணர் விருந்துக் கடிநவம் வெம்புபுத் தேளிவையே
பூணும் புதுமை புனிறெனி வீன்றணு மைப்பொழுதாம்
பேணிய தோற்றஞ் சனனஞ் சனிப்புந் பிறந்தைபவங்
காணிய சூதகம் யோனி பிறப்பென்பர் கற்றவரே. 46

*கழிபிறப்பு, இப்பிறப்பு, வருபிறப்பு, காரணம், முறைமை*

412. உம்மை கழிபிறப் பிம்மையு மிப்பிறப் போர்மறுமை
யம்மை வருப்பிறப் பாகும் நிபம்பொருட் டன்னிமித்தம்
செம்மையில் வாயில் திறன்கா ரணத்திற் றெரியுஞ் சொல்லா
மெய்ம்மை முறைமை மரபே பரம்பர மேமொழியே. 47

*இளமை, இளமைச்செவ்வி, பற்றுக்கோடு*

413. குருளை மழவு கயமிளை சேய்நவ்வி கொம்மை மஞ்சு
புருவை குழவி யுடன்சேடு போதகம் பொற்றருண
முருகு பருவ மிளமையக் கோமள மும்மிளமை
யருளிய செவ்விபற் றுக்கோடு கந்தோட லாம்பனமே. 48

*உரிமை, இலாபம், தருமம், அழுக்கின்மை*

414. பொருவரு பாங்குங் கிழமையுந் தாயமும் பூட்சியுமே
யுரிமைய தாக்கம் பலித்தல் பயன்பசை யூதியமே
கருதி லிலாபஞ் சரதஞ் சுபமங் கலஞ்சீலத்தோ
டருளுந் தரும மமலம் விமல மழுக்கின்மையே. 49

*மாதர் நண்ணுநெறி, தூய்தன்மை, தூய்மை, அறிவுள்ளது, அறிவில்லாதது, மேல்*

415. மாதர்நண் ணுநெறி பூப்பென்பர் தூய்தன்மை வாலாமையே
சூதக மென்பர் புனிதம் பவித்திரந் தூய்மையென்பர்
சேதன மென்ப தறிவுள தாகு மசேதனமே
போதமி லாதவை மேலாந் தலைதலை மைப்பொருட்டே. 50

*கணிதம், கன்னி, நானுவிதம், முதல்*

416. கரண மலகெண் கணிதங் குமரியுங் கன்னியென்பர்
பரவிய பன்முறை யேபரி யாயம் பலவிதமே
யுரைசெயு நானு விதமென்பர் மோனை யுடன்றொடர்ந்து
தெரிதகு மாதி யிவைமுத லேயெனச் செப்பினரே. 51

*முடிவு, அனுபவம், வளமை, கொழுப்பு*

417. மொழிதரு மந்தமுந் தீர்தலு மீறு முடிவதென்ப
ரழிவில தாந்துப் புரவே யனுபவ மாகுமென்பர்
செழுமை யுடன்மல்ல லேயாணர் வாய்ப்புத் திகழும்வண்மை
கொழுமை வளமைய தாகுங் கொழுமை கொழுப்பென்பரே. 52

*சிறப்பிலதாம் குணம், செல்வம், வேறுபடல், உறவு, துறப்பது*

418. சிறப்பில தாங்குணஞ் சீத்தை சிகம்பதென்பர்
வெறுக்கை விபவம் நிதானம் பொறிசெல்வம் வேறுபட
லுறத்தகு மேவி கிர்தம் விகடச்சொல் லுறவுறவித்
துறப்பது வென்னிற் றுறவிய தாகவுஞ் சொல்லுவரே. 53

*நாறுதல், இனிமையது*

419. விரைமண மன்றல் கடிவாசங் கொங்கு வெறிநறையே
முருகு பரிமள மாமோக்கங் கானகந்த முன்கமழ
லருகுடன் கந்தித்த ஞறுத லாகு மமுதுசுவை
யுருதரு சார மிவையினி மையதென் றோதுவரே. 54

*தித்தித்தல், கைத்தல், புளித்தல், ஒருபலம்*

420. தீயமுந் தீரமுந் தெங்குடன் றேமுந்தித் தித்தலென்பர்
காயமுங் காழ்த்தல் கடுத்தல் கரிலிவை கைத்தலென்ப
ராய புளித்தலே யாகும் பிராந்தித்த லானதொடி
யேய தொருபல மென்றே யுரைசெய்வ ரேந்திழையே. 55

*நீர்மை, எழுபொருள், முழுது*

421. மாலை யுழுவல் தகவியல் பேமுறை மாமரபு
பாலதி காரம் விதியே கிழமை பரிசுபண்பு
மேலுரை பான்மை குணநீர்மை யூழ்தண்மை யேயுரிமை
யேலு மெழுபொரு ளேயாகு மென்ப ரிவைமுழுதே. 56

*பண்பு, கொள்கை, உவமை*

422. குணம்நிற மும்பண்பு மாமறி வோடுகுணங் கொள்கையாம்
புணருற ழோடொப்பு நேரே நிகர்புரை போல்பொருவு
துணையொரு வீடு தகவே கடுப்புடன் றூக்குவிக
லிணையென வேயுரை செய்வா ருவமையை யேந்திழையே. 57

*பாரதிதீப வரலாறு*

423. பொழிகொண்ட லென்ன கரப்புண் டரிகன்மெய்ப் பூசுரர்தம்
விழிநெஞ்ச மென்ன வரும்பா ரதிதிரு வேங்கடவன்
செழியன் புகழண்ணல் செப்பிய பாரதி தீபத்தெட்டாய்
மொழிபண்பு பற்றிய பேரி னியலு முடிந்ததுவே. 58

ஒன்பதாவது

## செயல்பற்றிய பெயர்த் தொகுதி

**தொழில், தொழிற்பயில்வு, செயல்**

424. செயல்வினை யேதரு மங்கரு மந்தொழிற் செப்பிலிவை
யியலும் விதியுட னேர்பொரு ளாந்தொழி லென்பர்தொழிற்
பயிலது வாகு மயர்த லுஞற்ற லிழைத்தல் பண்ணல்
துயரில் வனைத லிவைசெய லாகவுஞ் சொல்லினரே. 1

**மகள்விளையாட்டு, பாராட்டு, பொழுதுகழித்தல் விளையாட்டு**

425. கெடலில யுடன்பண்ணை யோரையுண் டாட்டுக் கிரீடை
[பொய்தல்
கெடவரல் வண்டல் மகள்விளை யாட்டென்பர் கேள்மகிழ்வும்
படிமை திரிந்துகொண் டாடலும் பாராட் டெனப்பகர்வர்
விடலில விநோதம் பொழுது கழித்தல் விளையாட்டதே. 2

**புதுமணம், விழவு, ஒப்பனை**

426. புரையில் வதுவை கடிமன் றன் மூன்றும் புதுமணமா
முருகுடன் சாறுமச் சேறும் விழவென்பர் முன்புனைத
லரிதி லமைத்த லணிதகை செய்த லலங்கரித்த
லுருவுமண் ணல்பொற்பு வேய்தல் வனைதல்சொல் லொப்
[பனையே. 3

**உண்ணும் பண்பின் தொழில், அடிசிலூண் தொழில்**

427. வைத்த தயிற லருந்துத லாருதல் மாந்தல்துற்றல்
மெத்த நுகர்த லுடனுண்டல் தின்றல் மிகப்பொசித்தல்
துய்த்தல் பருகுதல் துவ்வுடன் பண்பிற் றொழிலைச் சொல்வ
ருய்த்து மிசைத லயிற வடிசில தூண்டொழிலே. 4

**சூடுதல், துஞ்சல் (உறங்கல்), நுகர்தல்**

428. துனிவற வேய்தல் மலைதல் மிலைதலுஞ் சூடுதலாங்
கனவோ டனந்த லுறங்க றுயிலுதல் கண்வளர்த
லினிதுடன் பள்ளிகொள் ளல்துஞ்ச லாகு மெடுத்துநுங்கல்
தனவிழுங் கன்றெண்ட ருனிவை யாநுகர் தற்றொழிலே. 5

*களவு, வளைத்தல், எறுதல்*

429. கரவு கயவு வடம்பட் டினங்கட்டல் கள்ளலுட
னுரைசெய் களவென்பர் கோடல் ஞெமிர்த லொடித்தலுடன்
மருவி யிறுத்த லொசித்தல்மெய் தாழ்த்தல் வளைத்தலென்பர்
விரைவுட னெக்கலி வர்கலு மேறுதன் மேற்படுமே. 6

*முரிதல், துவளல், தாழ்தல் அழுதல்*

430. எலியோ டொசித்தலு மோய்தல் முரிதலை யேயுரைக்குந்
தொலைவி றிவளல் திவண்ட லுவளல் துவளலென்பர்
மெலிவோ டிறைஞ்சல் குரங்கலுந் தாழ்தலை மேவுமென்பர்
கலுழ்தல் கலக்கங் கசித லழுதலைக் கற்பிக்குமே. 7

*கோபம்*

431. முனிவே கறுப்புக் குரோதங் குரூர முளவுகதஞ்
சினமே வெகுளி கலாம்பகை செற்றஞ் சிவப்புருத்தல்
வினைவேக மேசற வேவொத்தல் காய்தல் விளிவுசெறல்
துனி கோரங் கோபத் தொழிலது வாகமுன் சொல்லினரே. 8

*புலவி, புலவிவேகம், கடத்தல்*

432. பொருந்தலி லூடல் முதிர்வெம் புலவி புலவியதில்
வருந்திய வேகந் துனியென்பர் தாவுதல் வாவுதலே
யுரங்கொடி கத்தல் குதித்த லகற லுகழ்தலுடன்
கரைந்தெதிர் நீட்டல் நடத்தலுந் தாண்டல் கடத்தலதே. 9

*போகல், நெருங்குதல்*

433. படர்தல் பரிதல் வழங்க லிகத்தல் பதிபெயர்தல்
விடுதல் தணத்த லுடன்றீர்தல் தீர்த்தல் மிகவொதுங்கல்
தொடர்தல் நடாத்த லுடன்சேறல் போகல வெழிலுக்குஞ்
மிடைதல் கஞர லிமிர்தல் நெருங்குதன் மேல்வருமே. 10

*விரைவு, கடுப்பு*

434. கடுகல் நொறிறுனை வல்லையே யொல்லை கதழ்வுடனே
முடுகல் விரைவென்ப தாஞெள்ளல் பொள்ளல் மொழியுடனே
விடலில் கதுமென நொய்தென வெய்தென வும்விரைவா
மடரு கதனந் துரித மிவைகடுப் பாமென்பரே. 11

*திரிதல், நீர்ச்சுழலல், சுழலல், மீளுதல், ஆற்றுப்படை*

435. உழிதரல் கொட்புத் திரிதல் சுரிதலு முந்தியுநீர்ச்
சுழலல் சுரிய லதுதான் மொழியிற் சுழலலுமா
மழிவின் முரிதல் மறிதரல் மீளுத லாற்றுப்படை
வழியுட் படுவித்த லாற்றுய்த்த லவ்வழி மாற்றுதலே. 12

*பாய்தல், மண்டலம், ஊருதல், நேர்செலல்*

436. பாத முகள்தல் குதித்தலக் குப்புறல் பாய்தலென்பர்
மாதியும் வாளியுஞ் சாரிகை யுஞ்சொல்லில் மண்டலமா
மோதி லுகைத்த லுடன்றூண்ட லூருத லோர்பொருளாம்
வீதியி னேர்செலல் வாலாதி யென்று விளம்புவரே. 13

*நிலைபெறல், சுமத்தல்*

437. அசைத றெவிட்ட லறுத்தல் விதித்தலோ டல்கறங்க
லிசைதரு மல்கல் பரித னிலைத்த லினியதுஞ்சல்
பசையொடு மன்ன னிலைபெற லாகும் பரித்தலுடன்
மிசைமெய்ப் பொறுத்தல் சுமத்தலென் றேசொல்லும்
[மெய்த்தமிழே. 14

*முயற்சி, மிக்குச் செயற்றெழில், செய்தற்கரிய செயல்*

438. இயற்ற லுஞற்றுழப் பாள்வினை யூக்க மிவையுடனே
முயற்ற லுடன்றரு தாளாண்மை யென்னின் முயற்சிமிக்குச்
செயற்றெழி லேயென்ப தூராண்மை செய்தற் கரியசெயல்
இயற்றகு நாவலர் பேராண்மை யாக விளம்புவரே. 15

*எண்ணல், ஆராய்தல், தேடல்*

439. ஒளிதரு சூட்சி யுசாத் தேர்ச்சி யெண்ணெண்ண லோர்தலுமத்
தெளிதலுந் தூக்கலுந் தேர்தல் தெரிதலுஞ் சேரவிவை
யளவறு கேள்விய தாராய்த லுங்கை யரிக்கொள்ளுக
வெளியுற நாடலு நேடலுந் தேடலின் மேல்வருமே. 16

*ஒற்றுமை, ஒற்றல், வரையறுப்பு, விலைகூறல்*

440. கருதொற் றுமைக்கொள லேயொற்றல் வேய்குனித்
[தல்கணித்தல்
வரையறுப் பாநொடை விற்றல் பகர்தல் வரின்விலையாந்
துருமம் வெறிப்பு வெதிர்ப்புப் புலம்பொடு சொன்முதிர்ப்பு
வெருவல் கலங்கல் கலக்கமென் றேதுவர் மெல்லியலே. 17

*நடுக்குதல், தியாகம்*

441. விதிர்ப்புப் பனிப்பு விதலைகம் பம்முடன் மெய்ப்பொதிர்ப்போ
டதிர்ப்பு நடுக்குதல் வேள்வி யுதவிவே ளாண்மைகொடை
மதித்துப் பகரல் பொழித லிடுதல் வழங்கல்நல்கல்
திதத்தி லளித்த லருளுத லீதல் தியாகமதே. 18

*வரையாது கொடுத்தல், வேள்வி, வேள்வித்தறி, பாதுகாத்தல்*

442. ஏற்ற கொடைமட மேவரை யாது கொடுத்தலென்ப
மாற்றரு மோமங் கிருதுட னேயெச்சம் யாகமகம்
மேற்றி கழிட்டி யிவைவேள்வி யூபமும் வேள்வித்தறி
போற்றலு மோம்பலு மேபாது காத்தற் பொருட்டென்பரே. 19

*கொளற்பொருட்டு, அகத்தீடு, தலைக்காவல், பிச்சை, கரத்தல், இரத்தல், பூசனை*

443. தேவு கொளற்பொருட் டாகுங் கவவகத் தீடுதலைக்
காவ லிளையென் பரையம் பலிபிட்சை யாங்கரத்தல்
வாவு கரவ திரவே யிரத்தல் வழிபாடுடன்
ருவி லருச்சனை யாராத னைபூசை தானென்பரே. 20

*தொழுதல், காமவினைத் தொடர்பு, உண்டாதல்*

444. வணங்கல் பராதல் பரவுத லஞ்சலி வந்தனையே
தணிந்து பணித லிறைஞ்சலுந் தாழ்தலுந் தான்றொழுத
லிணைந்தவெங் காம வினைத்தொடர் பென்ப ரிணைவிழைச்சுப்
புணைந்துசொல் பூத்தல் பயத்தலுண் டாதற் பொருட்டதுவே.21

*மெய்க்கூட்டம், வெட்டல், களைதல்*

445. குறித்த புணர்ச்சி கலவி யிரண்டுமெய்க் கூட்டமதா
மொறுத்தல் தடிதல் துணித்தல் துமித்த லுடனறுத்த
லெரித்தல் பிளத்தல் வகிர்ந்திட லீர்த்தலி தாகும்வெட்டல்
பறித்த லுடன்கட்டல் குற்றல் களைதற் பயன்படுமே. 22

*நெரித்தல், ஞெமுங்கல், கொல்லுதல், அழித்தல்*

446. நெரித்தல் வெறுத்தல் ஞெமுங்க லழுங்கலை நேருரைக்கு
மெருக்குதல் காதுத லெற்றுதல் கோற லெழிறுலைத்தல்
முருக்குத லெண்ணி லொருபொரு ளாமென்பர் முன்செகுத்த
லரித்தல் சவட்ட லுதைத்தல் தெறுத்த லழித்தலதே. 23

*துளைத்தல், கொழித்தல், வாய்மைச் செயல், கடைதல்*

447. தொட்ட லகழுதல் தோண்டல் குயில்தொள் கலுந்துளைத்தல்
மட்டின் வறண்டல் வரன்றல் கொழித்த லென்றாதலதே
யுட்டெரி வாகு முவனித்தல் வாய்மைச் செயலுரைக்குங்
கட்டல் ஞெலிதல் கவர்தல் குடைதல் கடைதலதே. 24

*சிந்துதல், வடுப்படுதல், தினவு, கூடிடல், ஆறலைத்தல், மீதூர்தல்*

448. அடர்த்திற் றவற்றல் சிதர்த்தலுஞ் சிந்துத லாங்கதுவாய்
வடுப்பட லாகுங் கண்டூர்த் தினவா மென்பர் மாறின்றியே
யடுத்தலுங் கூடிட லான வழிபறி யாறலைத்த
லுடத்தி னெருக்க லிடங்கழி மீதூ றுதலென்பரே. 25

*அலைப்பு, முடங்கல், கொலைத்தொழில், குன்றல்*

449. உலைத்தல் நெரித்த லுடன்மிறை வேதனை யோடுசெற
லலைப்பென லாகு முணங்கன் மடங்க லதுமுடங்கல்
தொலைத்திடல் வெட்ட லணங்கண்டல் பிட்டல் சொல்லிலிவை
கொலைத்தொழி லென்பர் தலையெஞ்சல் சிங்கலுங் குன்றலதே.
26

*சாதல், வேறுபடுத்தல், வேற்றுமை*

450. வீதல் விளித லுலேதல் முடிவுடன் வீட்டல்பொன்றல்
மாய்தல் தபுதலு டன்றுஞ்சல் சாதலின் மாற்றமென்பர்
பேதுடன் வீற்றுத் திரிவுடன் விள்ளலும் பேசிலிவை
தீதுறு வேறு படுத்தலும் வேற்றுமை யுஞ்செயுமே. 27

*உள்தளர்வு, வளைப்பு, நிணர்வு*

451. உற்ற விளைப்போ டமுங்கலு மொல்கலு முட்டளர்வாஞ்
சுற்றுத ரெட்டல் வரைத்தல் பிடித்தல் தொடித்தலுடன்
முற்றுதல் சூழுதல் சூழ்போத லென்று மொழிவளைப்பு
மற்று வலத்தல் சுவலல்சுற் றல்நிணர் வாமதுவே. 28

*யாத்தல் (கட்டல்), விடல்*

452. விசித்தல் சிமிழ்த்தல் பந்தித்தல் சுருக்குதல் வீக்குதலோ
டசைத்த லிமிழ்த்தல் வரித்தல் தொடர்ந்திட லார்ப்புக்கட்ட
லிசைத்தலி னேடி யாத்தலென் றேதுவ ரீர்த்தலுடன்
வசத்தினிற் றீர்த்தல் விடல்பொருட் டாகிய மாற்றங்களே. 29

*பூசல்*

453. திறிமுரண் ஞாட்பிக லாயோ தனமொய் செருவெஞ்சமம்
உறழ்விர ணஞ்சமர் தாக்கே சினவுத லோடமரே
லிறல்தெவ்வுப் போர்சங் கிராமஞ் சமீகம் விணைமலைவு
மறமலி யும்பகை யாகவம் பூசலின் மாற்றங்களே. 30

*மிகுத்தல், கடுத்தல், கொற்றவள்ளை, தழிஞ்சி*

454. பாரித்தல் பூரித்தல் தோற்றுத லேயென் பதுமிகுத்தல்
வாரித் தறன்னெடு வாராணை யாகு மதுகடுத்தல்
கோரத் தடையலர் நாடமி வாவது கொற்றவளைத்
தாருற்ற மாற்றலர் மேற்பட ராமைத் தழிஞ்சியதே. 31

*பாதீடு, கொட்டாவி, உயிர், வருத்தங் களைதல், உளம் வெதும்பிக் காட்டல், உயிர்த்தல்*

455. அளித்தலும் பொய்தலும் பாதீடு கொட்டாவி யாபித்தலே
யொளித்தமெய் யாவி யுயிரா மயாவுயர்த் தல்வருத்தங்
களைத லுறக்கம் வியர்த்த லுளம்வெம்பிக் காட்டலதாந்
தளப்ப முடனுற் றுயிர்த லுயிர்போ தரவிடலே. 32

*காதித்தல், உமிழ்தல், புயல் சொரிதல், தெவிட்டல்*

456. (கழி)ய முனித்தல் வறத்த லுறுத்தலுங் காதித்தலா
மொழுகிய பில்கல் பிலித்த லுமிழ்தற் பொருளதென்பர்
பொழிதல் பனித்த லுடனீட லென்னிற் புயல்சொரிதல்
விழைத லுமிழ்த (லிமிழ்த) றெவிட்டலின் மேல்வருமே. 33

*மழைவிடல், உடன்படல், பொழுது நீட்டித்தல், மூடுதல்*

457. மட்டுறு தூவல் துவலை துளித்தல் மழைவிடலா
மொட்டல் வலித்த லுடனேர்த லென்னி னுடன்படலா
நெட்டை நெடித்தற் பொழுதொடு பாணியு நீட்டித்தலா
முட்டல்மொய் மூய்தல் கவித்தலு மாமென்பர் மூடுதலே. 34

*மொய்த்தல், எழுப்புதல், சோர்வு, வழு, குடியிறை*

458. மூசலு மூழ்த்தலு மூஞ்சலுந் தானிவை மொய்த்தலென்பர்
ஏச லுணர்த்த லெடுப்ப லெனிலிங் கெழுப்புதலா
மாசறு சோர்வு (கயக்கு பிற)க்கு வழுவதென்பர்
கூசுங் கரமுங் கடனுங் கறையுங் குடியிறையே. 35

*அரசிறை, சுங்கம், எழுச்சி மிகுதி, எழுகிடல், (எழுப்புதல்)*

459. அரசிறை யேதிறை யன்றி யுலகிறை யாகுஞ்சுங்க
முரவு கலித்தலகஞ் சுற்றுதல் பம்ம லுடனளுறல்
தருவ தெழுச்சி மிகுதியின் பேரென்ப தாமிவர்ச்சி
யருளு முறுமலோ டோக்க முகைத்த லெழுகிடவே. 36

*தழீஇக்கோடல், சார்வு*

460. தணவுத லன்றி முயங்குதல் விள்ளல் தழீக்கோடலா
மணவுத ரேய்த ரெடுத்தல் புணர்தலோ டண்ணுதலே
நணுகுதல் புல்லல் பொருந்த லுடன்சார்ச்சி நண்ணுதலே
குணமொடு செல்தல் படிதருஞ் சார்வென்று கூறுவரே. 37

*கலத்தல், தடவுதல், திமிர்தல், வளைதல், வைப்புறுத்தல்*

461. கடிது கலாவல் துளாவ லளாவல் கலத்தலென்பர்
தடவுத லாகும் வருடலு நீவ (லுந்) தைவரலும்
வடிவு நிமிர்த றுவருதலா மவ்வளை (தல்வக்ர)
முடன்மெய் தெருட்டல் வருட்ட லிவைவைப் புறுத்தலதே. 38

*குற்றுதல், முளைத்தல், விரிதல், பதனழிவு*

462. அடுத்த லவைத்தலுங் குற்றுத (லாமலர்) த லங்குரித்தல்
பொடித்தல் வெடித்த லிவையே முளைத்தலும் போதலர்தல்
வெடித்தன் மலர்த லெதிர்தலிம் மூன்றும் விரிதலென்ப
ரடைத்தல் தழைத்த (லூழ்த்தல்) செவ்வியோடு பதனிழிவே. 39

*சமைத்தல், மறித்தல், அசைதல், எட்டல், மேவல்*

463. இசைவொடு சேர்த்த லமைத்தல் சமைத்த லிகுத்தலுடன்
விசைவுறு வீழ்தன் விழுதன் மரித்தலே மேவுமென்ப
ரசைதல் துயல்வர லாமெட்ட லாவ தணவுதலாந்
திசைபுகழ் வீழ்த்தலு மார்த்தலு மேவலைச் செப்புமதே. 40

*கூடல், சரண்புகல், காவல்*

464. குறைவில் பொருந்தல் சிவண லுடனெல்லல் கூடலென்பர்
மறைபுகு தற்சொற் சரண்புக லாமென்பர் மண்கடியுஞ்
சிறையு மொழுக்க நவிற்றல் செறிந்துதுற் றல்பயில்தோ
டுறைதரு கட்டு (கதவு காவலா)க வுரைசெய்வரே. 41

*ஏவல், வறுமை, ஒழுக்கம், அவித்தல்*

465. வியலரை யேவல் வியங்கோள் வறுமையும் வீதிதென்ப
ரியல்பொடு மாலைகை யாறே நடனிழ லேசரிதை
செயலிவைய மொழுக்க நவிற்றல் செ...துற்றல்
பயில னெகுத்த லவித்தலென் றேதுவர் பாவலரே. 42

*மூட்டல், செறித்தல், கூட்டம், விடுதலை, வேகம்*

466. மோகமின் மாட்டல் பொருத்த லிரண்டையு மூட்டலென்ப
ராகமே மூழ்கல் குளித்தல் செறித்தல தாகுமென்பர்
யோகமுங் கூட்டம் வியோகம் விடுதலை கூறுமென்பர்
வேகம தோதிற் கடுமையும் வெய்ய விவேகமுமே. 43

*செய்கடன், குயிலுவம், குமரனுடல், அரியினுடல்*

467. செயலுறு கின்ற நியம நியதியுஞ் செய்கடனும்
பயிலு நரப்புக் கருவியிற் சேர்தரு பாடற்பண்பே
குயிலுவ மாகுங் கொடைதுடி யாடல் குமரனதா
மயர்தரு மல்லல் வியங்குட மாட லரியதுவே. 44

*சிவனுடல், திருமகளாடல், அயிராணியாடல், காமனுடல், துர்க்கையாடல்*

468. படர்கொடு கொட்டியுங் காபாலம் பாண்டரங் கஞ்சிவனுட்
டடர்சேர் பாவைதிருமக ளாட்டயி ராணியதாங்
கடைய நடம்புகழ் பேடாடல் காமன தாகுமென்பர்
துடியிடை மாதர் மரக்கால தாடலுந் துர்க்கையதே. 45

*கூத்து, நிருத்தம், குரவை*

469. பரத நடன முடனுடல் நாடக மேபிடிதந்
தரமுட னுடன மாலுத றாங்கிடல் தாண்டவங்கூத்
துரமிகு நாட்டி யங்கண்ணி நிருத்தமு மாங்குரவை
கரமலர் கோத்துட னுடலென் றேசொல்வர் கற்றவரே. 46

*நடன விகற்பம், துணங்கை*

470. கரண மலைப்புக் குனிப்புமுள் ளாளங் கடகம்பித்த
முர(ணு) பவுரியம் பிரமாம் வீரிட் டதாளமுடன்
பகரு வினட (மி)ருகை முடக்கிப் பழுப்புடையிற்
றுரித லலிதத்தி னடித்துட னுட றுணங்கையதே. 47

*வேலனுடல், கைகுவித்துத் தட்டல், வாய் தட்டல், குந்தியகாலின் நிலை*

471. (வெ)றியே யணங்கு கழங்காடல் வேலன தாடலதாங்
குறியா லகங்கை குவித்து முற்றட்டலுங் கொம்மையதா
மறியாத பிள்ளைகள் வாய்தட்ட லாவலங் கொட்டலதா
நெறியானங் குஞ்சித்தல் குந்திய காலி னிலையென்பவே. 48

*கைகூப்பி மெய்கொட்டி நிற்றல், தாளவொத்து, நடனம்*

472. நீடு குடந்தமுங் கைகூப்பி மெய்கொட்டி நிற்றலென்ப
தேடிய த(ாளத்தினொ)த்தின வாஞ்சதி சீரதென்ப
ராடி லதனி னடக்கு நடனமு மாகுமென்பர்
பாடல் பயிலும் பனுவற் றமிழ்தெரி பார்த்திபரே. 49

*பாரதிதீப வரலாறு*

473. கயல்தங்கு வாவிக் கடம்பைய ராதிகைக் கார்நிகரு
மியறங்கு செந்தமிழ்ப் பாரதி பாவல ரேற்றரிதா
முயர்செஞ் சொலாற் சொன்ன பாரதி தீபத்தி னேரொன்பதாய்
முயலுஞ் செயல்பற் றியபே ரியலும் முடிந்ததுவே. 50

பத்தாவது

# ஒலிபற்றிய பெயர்த் தொகுதி

***சொல்***

474. கருது நொடியும் பனுவலுங் கூற்றுங் கதையுஞ் சொல்லு
முரையு மறையும் மொழியும் விளவு மொலிப்பறையு
மருவு மிசையுங் கிளவியும் வாணியு மாற்றமுமே
யரிய வெழுத்தினி லாகிய லோசைச்சொல் லானதுவே. 1

475. பகர்த லியம்பல் குயிறல் மறுத்தல் பன்னல்சொற்றல்
புகறல் விளம்பல் கரைதல் வழங்கல் புகழ்தல்செப்ப
லிகலொடு மோதல் மிழற்ற லறைதல் வசனமிவை
யிகலுறு கட்டுரை பேசுதல் கூறல்சொல் லென்பர்களே. 2

***உண்மை, பொய், புறங்கூறல், வாழ்த்து***

476. திடமாணை வாய்மையுஞ் சரதமெய் யுண்மை சிறந்ததென்பர்
மடிமாயை வஞ்சமு மேசக டங்கூடம் வாய்த்திரத்தோ
டுடந்தி சதமும் பொய்பிசி னங்குஞ்ச முங்குறளை
கொடுவா யெனிற்புறங் கூருசில் லாழ்த்தெனக் கூறுவரே. 3

***திசைச்சொல், வாழ்த்து, பெருஞ்சொல், சிறுசொல்***

477. மருவிய தேசிக மாகுந் திசைச்சொல் வழுத்தலுடன்
பரவல் துதித்த லுடனேத்தல் போற்றல் பழிச்சலிவை
தெரிதலில் வாழ்த்துப் பலரறி சொற்பெருஞ் சொற்சிறுசொ
லருளில் பழிச்சொல் பழியவை கௌவையு மாம்பலுமே. 4

***ஆம்பல், அலர், இடக்கர், கீர்த்தி***

478. அடக்க முடன்சிலர் தம்முட் புறஞ்சொல்ல லாம்பலென்ப
ரடக்கமில் லாமற் பலர்புறங் கூற லலரதென்ப
ரிடக்கர் மறைத்துரை யாடல் மெய்(யிநெ)டிசைபுகழுங்
கிடைத்தருள் சீர்த்தியு மீக்கூ றலுஞ்சொல்லிற் கீர்த்தியதே. 5

***ஏற்றம், மிகுபுகழ், தேற்றம், உறுதிக் கட்டுரை***

479. எழில்புனை தோற்ற முடனே மலைவெனி லேற்றமதாம்
விழைதரு சீர்த்தி மிகுபுக ழாகி விடுங்குறிக்கோள்
வழுவுறு மோர்ப்புக் கடைப்பிடி தேற்றத்தின் மாற்றமதாங்
கழற லிடித்த லுறுதிய தாகிய கட்டுரையே. 6

**உரப்புதல், தேற்றமொழி, நிரம்பாத சொல், நிமித்தம், புனருத்தி மோனம்**

480. தெழித்த லுரப்புதல் மன்றவென் மாறென்சொற் றேற்றமதாம்
நிழற்றன் மிழற்ற னிரம்பாத சொற்சொன் னிமித்தமெனிற்
றெழுத்தகு வாய்ப்புள் விரிச்சிய தாஞ்சொன்ன சொல்லைச்
[சொல்லல்
மொழிப்புன ருத்தியென் வாளாவென் சொல்லெனின்
[மோனத்ததே. 7

**சூளுறவு, விளித்தல், கீழறுப்பு**

481. சூளொடு வஞ்சனை யேசப தஞ்சொல்லி சூளுறலாம்
நீள விளித்தல் கரைதன்முன் கூவுத னின்றுளைத்த
லானை யழைத்த லறைகூறல் சொல்லல் விளைத்தலதாங்
கேளறை போதலுங் கீழாறுப் போதற் கிளவியதே. 8

**முதுசொல், காரணச்சொல், உபகாரச்சொல், விழைவுறுசொல், வினவல், வினவெதிர் சொல், நெடுமொழி**

482. மொழிமை முதுசொற் கதைகா ரணச்சொல் முகமாற்றுட
னழகுறு நன்னய முபகா ரமசதி நகையே
விழைவுறு சொல்லு வினவல் கடாவல் விடையெதிர்சொற்
பழுதி னெடுமொழி தன்னைமேம் பாடு படச்சொல்லலே. 9

**அல்லவாம் எனல், கேட்பித்தல், உரையசைச்சொல், முன்னிலை யசைச் சொல்**

483. அன்றென் கிளவி யதுவல்ல வாமெனு மம்மவென்சொ
லொன்றது கேட்பிக்கு மாங்கது வேசொல் லுரையசையா
மென்றுரை செய்வர் மியாயிக மோமதி யோடிகுஞ்சின்
குன்றிய சொன்முன் னிலையசைச் சொல்லென்று கூறுவரே. 10

**அசைநிலைச்சொல், இசைநிறை அசைச்சொல், இரண்டினும் எய்துவது**

484. வாய பிறபிறக் கியாகாவ ரோவேழ் மாவெனுஞ்சொல்
லாய தசைநிலை யாகு மிசைநிறை யோடசைச்சொல்
லேயுங் குரையு மெனுமோ டிரண்டினு மெய்துமொப்புப்
போயதோர் போலியு மப்பொருட் டாகப் புகலுவரே. 11

**சாரியை, இடைச்சொல்**

485. இன்னன் வற்றத்த மொன்னு னியக்கிகந் தேயொடம்மே
யன்மன் னிவைசா ரியையது வாகுமெம் மெந்தமம்மாங்
கொன்மன் னுடனே னள்ளார்தம் பாக்குக் கொல்லொடும்முந்
தன்னுடன் றில்லெனு வென்ரு விடைச்சொலின் றன்மையதே.
[12

*எழுத்தின் சாரியை, வேற்றுமையுருபு, சுட்டு, ஐயச்சொல்*

486. காரமு மானமுங் கானுங் கரமுங் கருதெழுத்தின்
சாரியை யையொடு(கு) வின் னதுகண் டனேக்கிளக்கி
லோருமவ் வேற்றுமை யின்னுரு மூன்றுரைக் கிற்சுட்டிதாங்
கூரிய கொல்லனே யாதென்னே யையச்சொற் கூறுவரே. 13

*இடத்தின் ஐயுற்ற சொல், கல்வி, வேதநூல்*

487. ஏதமி லாண்டையு மியாங்கு மிடத்தினுக் கேற்றசொல்லா
மோதியறிவு கலேகேள்வி சால்பு முறைக்கிற்கல்வி
யாதி நன்னூ லெழுதாக் கேள்வி சாகை யருஞ்சுருதி
வேத முறையிவை தானென்று கூறுவர் வித்தகரே. 14

*வேதநூலின் இருவகைப் பொருள், ஞானபாகை, உபநிடதம், வைதிகம்*

488. அருண்ஞான பாகை யுடன்கரும பாகையென் றோதுநன்னூ
லருமறைப் பொருள்படு நூல்வே தத்தி னேதமற்ற
வொருஞான பாகை யுபநிடம் வேதத்தி னுட்பொருளாம்
வருவேதந் தன்னின் வழிமார்க்க மாகுமவ் வைதிகமே. 15

*முதல் வேதம், இரண்டாம் வேதம், சாமவேதம், நூல்*

489. சாரும் பவுடிக முன்னேய தாகுந் தயித்திரியப்
பேரிரண் டாவது சாமமுங் கீதப் பொருநடையா
மாரிட மாகம மேயதி கார மரும்பிடகம்
பாருள தந்திரம் பனுவலு நூலின் பன்மையதே. 16

*முதுரை, பாடம், சூத்திரயாப்பு*

490. முதுரை முன்னே பழமொழி யோடு முதுமையென்ப
ரோதமை யாடலும் பாடம தாகு முரைவிதியி
னேதமில் சூத்திர யாப்பா வடிவரை யின்றிச்செய்யிற்
கோதறு கேள்வி யகவற் பொருளெனக் கூறுவரே. 17

*பாயிரம், ஓத்து*

491. பூத்திகழ் பாயிர நூன்முகத் தோடு புறவுரையாம்
நீத்தில வாத வினமணி தன்னே நிரைத்ததுபோல்
வாய்த்த வினப்பொரு டன்னே யொருவழி வைத்துரைப்ப
தோத்தென வோதுவர் சொற்றமிழ் நூல்கற் றுயர்ந்தவரே. 18

*படலம், விருத்தி நடையது, விரித்துரை, பொழிப்புரை*

492. புரக்கு மொருமொழி யன்றி விரவும் பொதுமொழியா
யிருக்கும தாகும் படலஞ் சருக்க மிலம்பமுற்றும்
விருத்தி நடையது வென்றும் விரித்துரை மெய்யுரையின்
பொருட்டிற மாமப்பொருட் பிண்டம தாகும் பொழிப்புரையே.
[19

*பதிகம், இலக்கியம், அரும்பொருள் நடை*

493. கோட்டுப் பதி(கம்) பலவனச் சொற்பொருட் கூட்டமென்ப
ரோட்டு மிலக்கியந் தன்னோ டுதாரண மும்மெடுத்துக்
காட்டல தாகும் பிசிதியு ஞா(பக) முங்கருதி
ஞட்டிய வப்பொரு ளின்னடை யாக நவிலுவரே. 20

*யாப்பு, வெண்பா, கலிப்பா, ஆசிரியப்பா, வண்ணகம்*

494. கவிதை யுடன்செய்யுள் பாத்தூக்குப் பாட்டுக் கவியதென்னி
னுவமையில் யாப்பு முதற்பாவெண் பாவ துரைமுறைமை
யவிர்கலிப் பாத்தொகை தன்னோ டகவலு மாசிரிய
மிவரு மராக முடுகியல் வண்ணக மென்பர்களே. 21

*குளகதச்செய்யுள், சந்தம், தாண்டகம், கணக்கு*

495. தெரிகுற் றெழுத்துத் தொடர்பாக் குளகதச் செய்யுளென்ப
ரிருபத் திருமூன் றெழுத்தாகி நான்கடி யெய்துஞ்செய்யுட்
டருவது சந்தம் தானமிகு தாண்டகந் தானதென்பர்
கருதெழுத் தோடெண் ணிவைதா னிரண்டுங் கணக்கென்பரே.
[22

*எண், எழுத்து, ஒற்றெழுத்து, காஞ்சி*

496. இடறில் கரணங் கணித மிவையெண் ணெழுத்துரைக்கின்
வடிவொடு தன்மை பெயர்முடி வேயென மன்னெழுத்தர்
முடைய விராமை புலுத முடன்மெய்யு மொற்றெழுத்து
கடன லுலகம் புகப்பாட் டெழுத்தது காஞ்சியதே. 23

*முதுமொழிக் காஞ்சி, பேரியற் காஞ்சி, பொருண்மொழிக் காஞ்சி, முதுபாலை*

497. கழிந்தவற் காட்டி னதுவே முதுமொழிக் காஞ்சியென்ப
ரழிந்தகக் கேட்டுரை பேரியற் காஞ்சியருண்மொழிமெய்
மொழிந்தசொற் சொல்லல் பொருண்மொழிக் காஞ்சி முதுசுரத்தி
னிழிந்திறைக் கேங்கன் முதுபாலை யாக வியம்புவரே. 24

*குற்றிசை, குறுங்கலி, பாசறைமுல்லை, இல்லாண்முல்லை*

498. பன்னித் துறந்தது குற்றிசை முற்றப் பழியவன்றன்
முன்னின் றுரைத்தல் குறுங்கலி பாசறை முல்லைக்கொண்கன்
மின்னினை யுள்ளலில் லாமுல்லைப் பாசறை மீதிறையே
யுன்னித் தகாதென்பர் நன்னூ னெறிகற் றுயர்ந்தவரே. 25

*இசைப்பாட்டு, இன்னிசை, பல்லியந்தரு பாடல்*

499. வரிகொளை பன்னிசை பாண்கானம் பாணி மருவியகந்
திருவமென் கீத முடன்கேயங் காமரஞ் சேரிசையா
மிருளறு மன்னிசை சங்கீதம் பல்லிய மிராகமுடன்
பரவி யமர்ந்த லிசைகர் குனிதரு பாடலதே. 26

*நாற்பெரும்பண், இசைவிகற்பம்*

500. மொழிதரு பாலைகுறிஞ்சி மருதமென் முல்லையென்ப
வெழில்புனை யாழ்வகை நாற்பெரும் பண்ணெனன்பர் யாழை
[நல்யாழ்க்
கொழிதரு செவ்வழி யாழறை யேயக் குறிஞ்சி முல்லை
விழைபயி ரேனை யெனினே ரிசையின் விகற்பமதே. 27

*குறிஞ்சி யாழ்த்திறன்*

501. நந்து படுமலை காந்தாரம் பஞ்சுர நைவளைத்தொ
டந்தமருள் செந்திருதி பிரற்றயி ராங்குறிஞ்சி
சிந்தையில் லாதவ(ரா)கங் குறு(ங்கலி) தேர்நிறமே
பந்த மிலாக்கா ணங்குறிப் புத்து ...... பாலையதே. 28

*பாலையாழ்த்திறன், மருதயாழ்த்திறன், செவ்வழி (முல்லை) யாழ்த்திறன்*

502. படுமலை செவ்வழி யேயெனிற் செம்பாலை பாலையுடன்
விடல்தரும் பாலை யுடன்கொடிப் பாலை விளரியென்பர்
வடிவில் வியந்தை நவிரே குறிஞ்சி மருதத்ததாந்
திடனில் பெயர்த்திறஞ் சாதாரி யாமையஞ் செவ்வழித்தே. 29

*நெய்தல் யாழ்த்திறன், பாடலுக்கு ஏற்பது, ஆடலுக்கு ஏற்பது, வள்ளைப்பாட்டு*

503. நீடு விளரித் திறங்காலம் யாழ்நெய்த னீணிலத்தாம்
பாடலுக் கேற்பது செந்துறைப் பாட்டுமென் பாவையன்ன
ராடலுக் கேற்பது வெண்டுறை யாகு மவருலக்கை
மாடமுற் கொண்டுமென் சீர்பாடிக் குற்றலும் வள்ளையதே. 30

*எழுத்திலா ஓசை, அனுகரண ஓசை*

504. பிளிறல் குரைத்த லிரைத்தல் சிரத்தல் பிரத்தலுடன்
குளிறு பயில்த லுழைத்த தெழுத்துடன் கூரவிசைசெய்
யெளு(மெ) னழுமெனல் கல்லென லோலென லிம்மெனலோ
டளவி லனெரொ பொள்ளெனிலா மனுகர ணத்ததுவே. 31

*ஆரவாரம்*

505. இரைத்தல் திரைச்சி தழங்கல் கறங்க...லனெள்ள
லுரைத்தறு வைத்தல் கலித்தல் கரைத்தலு மும்பபொலி
குரைத்த ரெளித்த லரவமோ டாகுல மெக்காளித்தல்
புரைத்தல் துழனியோ டார்ப்பார வாரம்வெம் பூசலதே. 32

*பாரதிதீப வரலாறு*

506. கன்னல் குலாவும் வயல்சூழ் கடம்பைமன் கஞ்சமலர்
மின்னுள வாகும் புயபா ரதிதிரு வேங்கடவன்
பன்னிய பாரதி தீபத் திடையினிற் பத்தெனவே
முன்னுமொலி பற்றியேபே ரியலு முடிந்ததுவே. 33

பதினோராவது

# ஒருசொற் பலபொருட் பெயர்த் தொகுதி

*ஏமம், விழுமம், செழுமை*

507. சேமமே காவல்பொன் னின்பமேமாப் பிரவு செறிமயக்க
மேமம தாகுஞ் சிறப்பொடு சீர்மை யிடும்பையிசை
தாமுரை செய்யில் விழுமம தாகத் தருஞ்செழுமை
நாமம தென்னில் வளனே கொழுப்பெனு நானிலமே. 1

*உறை, உந்தி*

508. நிந்தைசெய் கூறை கழுவுவர் நீர்த்துளி நீர்மருந்து
பந்தவென் னேய்தவிர்த் தின்பந் தருபொருட் பாலுறுபீர்
முந்திய காரமொழுக லிடைச்சொன் மொழியினுறை
யுந்திகொப் பூழ்நதி தேருருள் யாழ்க்கண்ண தோருறுப்பே. 2

*பாழ், நந்தல், விருப்பு, வெம்மை, கூத்து*

509. அன்பா லுறையுள் சயனமு மூரு மடல்வலியு
வன்பாழி யாக்கமுங் கேடு மதாநந்த லென்புருக்கு
மின்பாட லாட லும்விருப் போடெனல் வேண்டல்வெம்மை
வன்பாட லாவ குகன்மாற்க கூத்தின் வகுத்தனரே. 3

*ஓசை*

510. கலித்த லமுங்கல் துவைத்த லிரங்கல் கவனம்விம்மல்
சிலைத்த லிமிழ்த்த லிரட்ட லழுங்கல் சிலம்பல்சும்மை
நலத்தகு கம்பலைத் தோடணை நெய்த னவிற்றலுட
னொலித்த லிசைத்தல் கறங்கலென் றேதுவ ரோசையையே. 4

*ஒல், பண்ணை, புரை*

511. ஓதை புலம்ப லரவமோ டோசை யொலியுடனே
நாதமு மொல்லென்பர் நன்னீர்ப் படுவும் நன்னுதலா
ராதர வான விளையாட்டு மாயமு மாகும்பண்ணை
போதுவ மைச்சொல் லுயர்புடன் குற்றம் புரையென்பரே. 5

*யாமம், தாமம், வரைதல், பரிவு*

512. யாம முரைக்கிற் பொழுதுடன் சாம மிரவதென்பர்
தாம முகைநன் ஞெளியுடன் ருரென்ப தாம்வரையு
மாமது நீக்குதல் கொள்முத லாமென்ப ரானதுன்பங்
காமுறு மின்ப மிரண்டும் பரிவெனக் கற்பித்ததே. 6

*மஞ்சு, துஞ்சுதல், வாமம், வெறி*

513. மஞ்ச துரைக்கின் முகிலோ டிளமை வனப்பதென்பர்
துஞ்சுதல் சாத லுறங்கல் நிலைத்தலுஞ் சொல்லுமென்ப
ரெஞ்சலின் வாமங் குறங்கே குறளிடப் பாலதென்பர்
மிஞ்சிய நாற்றம் விரையணங் காட்டு வெறியென்பரே. 7

*பாணி, கோடகம், கோதை*

514. நீடிய நீரொடு கையே நெடித்தற் பொழுதோடுநே
ராடலுட் பல்லியம் பாணி மரக்கொம்பு பாய்பொதும்பு
கோடக மாகுங் குரங்குட னேயென்பர் கோதைமுடி
சூடிய சேரன்வின் ஞண்டுடர் கைக்கட்டத் தொங்கலதே. 8

*வஞ்சி, தோல், வாரணம்*

515. நாற்பாவி லொன்றுட ஞற்றகத் தோர்கொடி நன்னுதற்பேர்
மேற்போய் விடுஞ்சொற் கருவூருந் தான்வஞ்சி வேழமுடன்
றேற்பன போர்வை பலகை வனப்பிவை தோலதென்பர்
காற்போர் செய் கோழியும் வேழமும் வாரணங் காணென்பரே.9

*மால், மா, மலைதல்*

516. அரிமுகில் வேட்கை மருந்து மயக்கமோ டானபுதன்
கருமையு மேனைப் பெருமையு மாலென்பர் காமர்வண்டு
திருநிற மோடு மிருளுங் கருமை திகழ்பருமை
மருவிய மாமலர் சூடல் பொருதல் மலைதலதே. 10

*சூர், தார், விண்டு, சிலை*

517. சூரது வஞ்சனை யஞ்சாமை தெய்வமுஞ் சொல்லுமென்பர்
போரெதிர் செல்லுங் கொடிப்படை யாவிற் புனைமணியும்
வேரிசெய் மாலையுந் தாரென்பர் மாயனும் வெற்பும்விண்டா
மேருறு வில்லு மலையுஞ் சிலையென் றியம்புவரே. 11

*கொண்டல், ஆரல், ஆரம், குயம், காரிகை*

518. வாருறு மேகமுங் கீழ்காற்றுங் கொண்டல்செவ் வாய்கார்த்திகை
யாரல்முத் தாத்தி யணிமாலை சந்தன மாரமென்பர்
கூரரி வாளோ டிளமைபின் கொங்கை குயமதென்பர்
காரிகை மாதெனில் கட்டளை யாகுங் கலித்துறையே. 12

*இவர்வு, சாறு, அளி, குவலயம்*

519. சேற லொழுக்கத் துடனே விரும்பல் செலுத்துதலே
யேறலிவர்வென் கிளவிய தாங்கள் ளிசைவிழவே
சாறது வாகு மதுக்கொடை வண்டினந் தானளியே
கூறுவர் நெய்த லுடனில மாகுங் குவலயமே. 13

*வைகல், தொண்டு, சேய், பொழில்*

520. கழிதரு நாள்புல ரிக்காலம் வைகறங் கற்பொருட்டாம்
பழமை நவமிகுங் கேண்மைதொ ழும்போடொன் பானுந்
தொண்டா
மொழியி னிளமை மகவுஞ்செவ் வாயு முருகனுஞ்சேய்
பொழிலெனிற் காவு முலகமு மாகப் புகலுவரே. 14

*பிரசம், அரில், கோடு, பாடு*

521. பிரச மெனும்பெயர் தேனீயுந் தேனும் பிணக்குக்குற்ற
மரிலென வாஞ்சங்கு மூதுமக் கொம்புட ஞர்மருப்புக்
குரையு மரக்கொம்பு நீர்க்கரை யும்வெற்புங் கோடதென்பர்
பரவு பெருமை படுத லொலியிவை பாடென்பரே. 15

வை, இளமை, கறை, குளிர்தல்

522. மொழிதரு கூர்மை நெற்ருட் புல்லு வையென்பர் மொய்யிளமை
களிதரு காமமுந் தன்மையுஞ் சொல்லுங் கறையெனுஞ்சொல்
லொழுகு முதிரந்திறை யேநிறமு முரைக்குமென்பர்
குளிர்த லுரைக்கிற் றுளேயே மராமெனக் கூறுவரே. 16

*சிறை, பரிவு, வேழம், அளகம், சூழி*

523. சிறையெனிற் காவ லிறகாம் பரிவு செயல்விருப்பாம்
விறலிபங் கன்னல் கொறுக்கை வெதிரிவை வேழமென்ப
ரறைமட. மாதர் குழலும் பினலு மளகமென்பர்
துறைபயில் வாவி முகபடா...முமென் சூழியதே. 17

*வயா, பரி, கண்டகம், தொடி, அந்தம்*

524. மருவும் வயாவெனின் வேட்கைப் பெருக்கம் வருத்தமதாம்
பரிபரி யேசெலவே பாது காவற் படர்வருத்தஞ்
சுரிகையொள் வாள்முள் ளிவைகண் டகந்தொடி தோள்
[வளேயோ
டொருபல மாமந்த மீறழ காக வுரைசெய்வரே. 18

*கந்தம், கடு, துண்டம், கண்டம், குயிறல்*

525. கடியே கிழங்கு புனல்கந் தமாகுங் கடுமரமே
விடமே கடுவென்பர் துண்டங் கழுத்துமெய் சேர்கருவி
யடல்வாள் திரையுடன் றேசமுங் கண்டம தாஞ்செறிதல்
குடையொடு கூற லிவை....யென்பர் குயிறலுமே. 19

*ஏற்றல், போற்றல், பகல், கோள்*

526. இகலோ டெதிர்ந்து பொருதலுங் கோடலு மேற்றனலாம்
புகழ்த லுடன்பாது காத்தலும் போற்றல் பொருவருநாட்
டிகழொளி யோ(டு) நடுள... செயலுந் தெளிந்துரைக்கிற்
பகலது வாங்குணங் கோட்பாடு கோளென்பர் பைந்தொடியே. 20

*கம்பலை, மடல், உம்பர், குழை*

527. கருது நடுக்கச்ச மோதையின் ஞங்கிவை கம்பலையா
மருவு தொகுதி பனையிதழ் பூவிதழா மடலோ
டுரைசெய்வர் மேலிடந் தேவர்தம் பேரிவை யும்பரென்பர்
குருமணி சூழ்குண் டலமே தளிர்த்தல் குழையென்பரே. 21

*கார், ஆர், தபனன், கனலி, கழுமல்*

528. காரே கருமை புனல்மாரிக் காலங் கருமுகிலா
மாரேபத தேருறுப் பேகூர்மை யாத்தி யனலருக்கன்
பேரே தபனன் கதிரவன் பாவகன் பேர்கனலி
நேரே மயக்கமும் பற்றுங் கழுமல் நிலைபெறுமே. 22

*முல்லை, கஞ்சா, கன்னல்*

529. வன்றிறற் கான்தனி லங்கதான மல்லிகை மாறுபடா
வென்றி தருமுல்லை கஞ்சாபூங் காடும் விரையுமென்பர்
குன்றலில் நாழிகை வட்டில் சருக்கரை யோடுகுட
மென்றிவை கன்னற் பெயராங் கரகமு மேந்திழையே. 23

*மது, களம், களரி, இழுமெனல்*

530. பொழில்தருத் தேறல்செந் தேன்மது வென்பர் பொருநிலத்தோ
டொழுகு கருமை மிடறே களமென்ப ரோங்குகடங்
கழிவில் கமைகள் செருச்செய் நிலமுங் களரியென்ப
ரிழுமென லோசை யினிமையென் றேசொல்லு மிவ்வுலகே. 24

*காழ், பால், கலை, துன்னல்*

531. கோல்பரல் சேகு மணிக்கோவை மாலை குலவொளிகாழ்
பால்திசை பக்கம் பருத்த லுடனியல் பாமொழிந்த
நூல்கல்வி யாடை முசுவேறு காலநுட் பங்கலையா
மேல்செறி வோடு குறுகலுந் துன்னல் விளங்கிழையே. 25

*அணி, மாழை, பணை*

532. அணியெழல் பூணே டழகாடை யும்பையோ டாயமுடன்
பணியில கட்டிபொன் ஞேலையு மாழை பணையெனும்பேர்
மணமுர சோடு புரவியின் பந்தி மரத்தினிற்கோ
டுணர்வில் பழனம் பெருத்தல் பணைத்த லுடன்கழையே. 26

**திணை, துத்தி, அம்பரம், வம்பு**

533. நெறிசே ரொழுக்கங் குலமொழுக் கத்தி னிலந்திணையாம்
பொறியே சுணங்கு திதலையுந் துத்தி பொருகடல்விண்
செறிகூறை யம்பரங் கச்சு நிலையின்மை சேர்புதுமை
நறையோடு நான்கிவை வம்பென வோதுமிந் நானிலமே. 27

**அணங்கு, அளக்கர், தொடுத்தல், கவலை**

534. மாதரும் பேயும் வருத்தமுந் தெய்வமும் வன்கொலையு
மோதி லணங்கதி லஞ்சே றுததி யுறுமளக்கர்
சூதின் வளைத்தல் பிணித்தன்மெய் பற்றல் தொடுத்தலென்பர்
காதிய துன்பங் கவர்நெறி யாகுங் கவலையுமே. 28

**கந்தரம், அந்தில், மை. கொன், எல்லை**

535. கந்தரமேக முலைமுழை யோடு கழுத்தெனலா
மந்தித லாங்கு மசைநில மைமுகி லாடுங்குற்ற
முந்திய காலம் பயனிலி யச்ச முடன்பெருமை
தந்திடுங் கொன்பகற் றன்னோ டளவை தருமெல்லையே. 29

**பிறப்பு, செறிவு, ஏசல், பதி, மள்ளர்**

536. பேசு பி(றவி) பிறப்புச் செறிவு பெருக்கலுமா
மேச லிகட்சி நகையென லாம்பதி யேயுரைக்கி
லோசை பயிலு மிறையவ னோடங் குறைவிடமா
மாசறு வீர ருழவர்தம் பேரென்பர் மள்ளருமே. 30

**கருங்கை, பதம்**

537. கொல்லுந் தொழில்வன் றெழில்கருங் கையென்பர் கூறுநிதி
சொல்லி னுறு(செ) பயல் பல்பண்ட மாம்பொருள் சோறுவழி
யெல்லுறு கால முடனிறம் பாவல ரெட்டுடனே
புல்லிய பேத வுரைபத மாகப் புகலுவரே. 31

**புதை, செம்மல், மாலை**

538. ஏவதின் கட்டும் புதுமையு மாம்புதை யேற்றபழம்
பூவிறை புத்திரன் மாரி பெருமை புகலிற் செம்ம
லேவுபொன் பூமணி சொல்லிற் றெடுத்தவை யேறுமிருள்
வாவிய வந்தி யியல்பது மாமென்பர் மாலையதே. 32

**துப்பு, செத்து, தானை, ஓதி**

539. ஒப்புறு வண்ணம் பவளம் வலியரக் கோதிலிவை
துப்பது வென்பர் கருத்தொப்புச் செத்தென்பர் சூழ்கலிங்கங்
கைப்படை காலாட் படையிவை தானைசெங் காலெகின
மைப்பயில் கேசம் மலி யோதி யாக வகுத்தனரே. 33

*கரணம், செச்சை*

540. சொல்வரெல் லாரு முதற்பொருட் டான்றுணைக் காரணமும்
பல்வகை யாடலும் பாடலுங் காமப் பகுதியுடன்
கல்வியு மெண் ணுங் கரணமென் றேயொன்றுங் காமர்வெட்சி
கொல்வினை மேவுவெள் ளாட்டேறு மேசெச்சை கூறிடிலே. 34

*புலம்ப, சிலம்பு, கலுழி, கலித்தல்*

541. புலம்பே தனிமை யுடனே நடுக்கம் புலம்பலுமாஞ்
சிலம்பே மலையொலி காலணி யாமென்பர் சேர்கலுழி
கலங்கர் நீருவுடன் கானயாற் றென்பர் கலித்தலென்னில்
நலஞ்சே ரெழுச்சி யொலித்தலென் றேசொல்லும் நானிலமே.35

*புலவர், மறம், உருத்தல்*

542. அலைவறு தேவர் கவிகள்மெய்ப் பாடுந ராடுநரே
புலநட ராக வறியோர் பொருநர் புலவரென்ப
சிலைதரு வீரங் கொடுமை சினங்கொலை செய்தன்மற
முலைவறு தோன்றல் வெகுட்சிய தாகு முருத்தலதே. 36

*பொருநர், கோள், நிழற்றல்*

543. ஆளும் பெரும்போர்த் தலைவருங் கூத்தரு மானபடை
வாளொன்று வீர ரிவரே பொருநர் மருவுநவ
கோளுங் கொளலுங் கொலையிடை யூறுமக் கோளதென்பர்
நீளுங் குடைநிழல் செய்த னுணுக்க நிழற்றலதே. 37

*வாரி, வதுவை, கனவு, நனவு*

544. கனைகடல் வெள்ள மிகுதி மதிநூல் கதவுதடை
யெனிலிவை வாரி வதுவை மணமன்ற லென்றிவையும்
புனைதரு வாச மணம்புணர் வாந்துயில் பொய்மயக்கங்
கனவென லாகு நனவே தெளிகண் ணனென்பரே. 38

*வேய், தா, கேள்வி, வாயில்*

545. வேயமை யொற்றுடன் வீணையு மாகு மிகுவருத்த
மேய வலியிடை தாவென் றுரைசெய்வ ரேற்ற கல்வி
சே(ய) செவியிவை கேள்விய தாம்புல(னுந்) திறனும்
வாயில தென்பர் வடிவே லனைய மதர்விழியே. 39

*வேளாண்மை, நாகம், முளரி*

546. வேளாண்மை யாவ துபகார மெய்யுப சாரம்விண்ணே
...ரங்கோர் மரப்பேர் மலையா டரவு
காளா சலமிவை நாகமென் றேதுவர் காய்கனலே
காளார் மரை முண்மாமர முளரிய......தே. 40

**வேலன், விருத்தி, சுடர், கயம்**

547. உரைமுரு கன்வெறி யாட்டாளன் வேல னுரியபொருள்
விரிதர வோதல் விருத்தி முதுமொழி வெங்கன(லே)
சொரிதண் திங்கள் கதிரே (சுட) ரென்பர் சூழ்கயமே
கரியினிற் கன்றுட னுழநன் னீரெனக் கற்பித்ததே. 41

**தாலம், மதலை, பதலை, இறும்பூது**

548. தரைபனை யுண்கல நாத்தால மாகுந் தவப்புதல்வர்
பரவு மரக்கலந் தூணே மதலை பதலையென்னின்
விரவிய தாழி பரந்தரு வாய்ப்பறை மெய்வியப்போ
டருள்சிறு தூறு மலையிறும் பூதென் றறைவர்களே. 42

**குளிர், பிறங்கல், மறை, சிரகம்**

549. இரைபயில் கிள்ளை கடியுங் கருவி யிலைமூக்கரி
கருவி குடமுழ வாகுங் குளிர்பிறங் கல்லுயரம்
பெருமையு மாகுமறை தேரல் வேதப்பெயர் மறையாஞ்
சிரகம தென்னிற் கரகந் துவலை செயறருமே. 43

**நீவி, கேவலம், ஆகம், வியம், எகினம்**

550. நீவி யரித்த றுகில்கொய் சகமுட னேதுடைத்தல்
கேவல மாகுந் தனிமையு முத்தியுங் கேயூரமா
ராவி பயிலுட லாகஞ் செறிதுட ருகலவறி
தேவிய நாயோ டனமே கவரி யெகினமதே. 44

**முடலை, விடங்கம், படலை, மடங்கல், இருத்தல், கவிகை**

551. முடலை திரட்சி முருடாம் விடங்க முகடழகாம்
படலை யெனிற்பகை கூற்றூழித் தீச்சிங்கம் பாயுமுரு
மிடிநோய் மடங்க லிகுத்தல் செகுத்தலும் வீழ்த்துதலுங்
குடைகொடை யென்னு மிரண்டுங் க(விகைய தாமென்ப)ரே.45

**அள், ஞெள்ளல், பள்ளி, இதழ், வள்**

552. அள்ளெனிற் காது செறிவுடன் வன்மைய தாகுமென்பர்
ஞெள்ளல் தெருவுடன் மென்மை துயிலிட னேயிரண்டும்
பள்ளி பனையிலை பூந்தோட தாகும் பயினிதழாம்
வள்ளெனிற் கூர்மை வலியுட னேவடி வாளென்பரே. 46

**ஆணை, தாயம், ஆயம், மத, காயம்**

553. ஆயமெய்ப் பட்டோ டிலாஞ்சினை சூழ்விற லாணையென்பர்
தாய முரிமை யுடன்றங் குடித்தமர் தாய்த்திரள்சூ
தாயம தென்பர் வனப்பே வலியுட னீளமதாங்
காயம தென்னிலி யாக்கையுங் காழ்ப்புங் கருதியதே. 47

**கோல், கட்டளை, தெவிட்டல்**

554. இறைமுறை செய்தலின் யாழ்நரம் பேமை யெழுதுவது
நிறையே துலாமத்தி கையம்பு கோலென்பர் நீண்டநெறி
யறிவ துரைத்தங் கறிவது கட்டளை யாமொழித்தல்
திறவோ டுமிழ்த லிரட்டல்தெ விட்டலின் செய்தியதே. 48

**அழுங்கல், வழங்கல், அற்றம், உலவை, கழங்கு**

555. அழுங்க லிரக்க முடன்கே டுறல்சொல்ல லோடளித்தல்
வழங்கல தாமற்றஞ் சோர்புட னீய மறைப்பொருளா
மொழுங்கோர் சாற்று மரக்கோடு மாமருப் பாமுலவை
கழங்கணங் காட்டுக் கொடிகழ லாகவும் கற்பிப்பரே. 49

**அறல், இறை, உறழ், பொறை**

556. அறலே வயவு கருமணல் நித்திரை யாகுமென்ப
ரிறையே சிறிதுயர்ந் தோர்தங்க லேகடனில்லிறப்பா
முறழே செறிவிடை யீடே புணர்வுட னெத்தலுமாம்
பொறையே சுமத்தல் பொறுத்தலு மாகப் புகலுவரே. 50

**கருவி, ஓரை, முற்று**

557. சுடர்பூண் டொகுதி படைக்கலம் பல்லியத் தின்றொடர்யா
ழிடமேவு கொண்டல் கலனை கவச மியங்கருவி
யுடன்மாதர் கூட்ட மிராசியுங் கூற்றொடு மோரையென்பர்
முடிவாய் வளைத்தல் முழுவது மாமென்பர் முற்றினையே. 51

**தூவு, கழுது, வேலை, சினை**

558. ஏவும் பசையுந் தசையும் பறவை யிறகினையும்
தூவென்பர் பேய்வண் டிதணங் கழுதென்பர் சூழ்ந்தகடன்
மேவுங் கடற்கரை காலமுந் தானிவை வேலையென்ப
ரோவுஞ் சினைமரக் கோடா குவவொன் றுறுப்பென்பரே. 52

**படர், பதங்கம், நனை, கடிகை, காலை**

559. படரெனி லுன்னல் செலவே பரிவு பதங் கம்விட்டி
லொடுபற வைப்பொதுப் பேர்களும் நனை (பூவின்) மொட்
[டென்பர்
கடிகையும் வேத சமயங்க ளுழிகை காலையெனிற்
றொடர்தரு காலமு நாட்கூறு மாமெனச் சொல்லுவரே. 53

**எற்று, வயிரம், மற்று, கொற்றம்**

560. எற்றே னினைவு துணித்தல் புடைத்தல் லெறிதலெற்றல்
செற்ற முடன்வன்மை வச்சிரங் கூர்மையச் சேகுமணி
மற்றிவை யேவயி ரம்வினை மாற்றென்பர் மற்றெனுஞ்சொற்
கொற்ற மரசியல் வெற்றியு மாகவுங் கூறுவரே. 54

*வீசல், தேசிகம், பாடலம், காசறை, பாசம்*

561. வீசல் கொடுத்த லெறிதல் திசைச்சொல் மிகுமழகுந்
தேசிக மேயென்பர் பாடலம் பாதிரி யேசிவப்பாங்
காசறை நாணலுங் காயா மரமென்பர் கற்றறிந்தோர்
பாசமு மூசித் துளேகயி ருகப் பகருவரே. 55

*தண்ணடை, பாடி, கட்சி, ஓரி*

562. நாடுட னூரிவை தண்ணடை நாடு நகரமிவை
பாடியு மாகும் படைவீ டஃதென்பர் பாதகஞ்சேர்
காடுடன் கூடித ணென்ற(ல்) கட்சி கருநரியோ
டாடவர் தங்கள்மயி ரோரி யாக வறைவர்களே. 56

*மூரி, ஊர்தி, தரணி*

563. மூரி பெருமையு மானேறு மாகு முழங்குகரி
தேரொடு மாவுஞ் சிவிகையு மூர்தி திகழரலேப்
பேரது கூறிற் கனிக்காழ் கழலேப் பிறங்கலுடன்
ருரணி தன்னே டிரவியு மாகுந் தரணியதே. 57

*இரலே, பல்லம், முரண், கழிதல், இறத்தல்*

564. இரலேபுல் வாய்கலே யூதிய கொம்போ டிசைதலேநாட்
கரடி சிலீமுகம் பல்லம தாம்வலி பாய்பகையே
முரணென லாகுங் கழித லிறத்தன் மொழியினிவை
யுருவழி சாவு கடத்த லிகத்தலென் றேதுவரே. 58

*தட, தவ, வெடி, முருகு, ஏனே*

565. தடவெனிற் கோட்டம் பெருமை தவமிகு தல்குறைதல்
வெடியெனில் வெள்ளிடை யோடு வெருவுதல் வேள்விழவு
கடியோ டிளமை வெறியாடு வேலன் கருதெழுச்சி
யுடனே முருகெனு மேனே யொழிவோ டிடைச்சொலதே. 59

*மானுதல், படை, தானல், வயின்*

566. மானுத லொப்பு மயக்கமு மாமென்பர் மண்சயனந்
தானேயோ டாயுத மேயுழு நாஞ்சிலுந் தான்படையாந்
தானல் கதிரொளி யேமலேச் சார்கடற் சார்பொழிலா
மான வயிறு மனேயிட மேவயி னுமென்பரே. 60

*கூலம், மூலம், கழல், வேலி*

567. கூலமு நீர்க்கரை பல்பண்டம் பாகலேக் கூறுமென்பர்
மூலமெனும் பெயர் நாளொடு வேரு முதலுமென்பர்
காலடித் தோலொடு காலொடு காலணி யுங்கழலாம்
வேலி மதிலுடன் காவலு மாக விளம்புவரே. 61

*வண்ணம், காசு, கரை, அருணம், ஆசு*

568. மாசின் மரபு பெருமையும் வண்ண மணிகுற்றமே
காசென லாகுங் கரையே யிடைச்சொற் கருதொலியா
மாசி லருணஞ் சிவப்பொடு மானழ காகுமென்ப
ராசுமெய் சேர்வு கலியே சிறுமை குற்றமதே. 62

*பனி, வனம், அழுங்கல், கனம், நியமம்*

569. பனியெனிற் றுன்ப நடுக்கமச் சந்தரும் பாய்புனல்கான்
வனமென லாகு மழுங்க லரவ மிரங்கலென்பர்
கனமென லாகுஞ் செறிவொடு மேகமுங் காமர்தெரு
நிலைகவ லாத நியதியு மாகு நியமமதே. 63

*ஊறு, வசை (வசி), நூல், அசைதல்*

570. உசையிடை யூறுற் றறிபுலன் றுனிவை யூறதென்பர்
வசையெனிற் போழ்ந்த வடுக்கூர்மை தாட்சி வருட்டலென்ப
ரிசைதரு நூலெனி னெண்ணம் பனுவ லிசைக்குமென்ப
ரசைதலை நேரதா யங்கலு மாக வறைகுவரே. 64

*நவிரம், குலம், ஆலுதல், சேண், ஆர்தல்*

571. மலைதனி னுச்சி மருத யாழ்த்திற னவிரமென்பர்
குலமெனி னில்லமுங் கூட்டமுங் கூட்டுங் குடியுமா
மொலியுட னுடுத லாலுத னீள முயரமுஞ்சே
ணலைவற வார்த னிறைதலு முண்டலு மாமென்பரே. 65

*தளிமம், வலம், நளி, மறலி, வளம்*

572. உறைதரு மெத்தை யழகே தளிம முறைவிடமே
விறலொடு மேலிட மேவல மென்பர் மிகுபெருமை
செறிவிவை யேநளி யென்பர்வெங் கூற்றெருடு சேர்மயக்க
மறலிய தென்பர் வளப்பாடு பண்டம் வளமென்பரே. 66

*மூரல், பாலை*

573. மூர னகையெயி றேசோறு நீரின்றி யேமுதிர்ந்த
பார்தரு பாரினிற் பாடலும் பாலைப் பதியிடத்திற்
பேரல் பொருளிற் பிரிதல் ப(ரி) வரை பெண்ணுடன்கொண்
டாருடன் போத லவைபாலை யாக வறைகுவரே. 67

*குறிஞ்சி, மருதம், படிவம், அண்டர்*

574. செழுமலைச் சார்விட மந்நிலப் பாடல்செம் முள்ளிசெவ்வே
மொழிவர் குறிஞ்சி பயனில மந்நிலத் தோர்முடிய
வழிபடு பாடல் மருத மவிர்தல் வடிவமிவை
யழிவில் படிவ மமரரோ டாயரு மாமண்டரே. 68

*மனவு, சுடிகை, புணரி, முனை, வியங்கோள்*

575. மனவெனி லக்கு மணியாடை வேணி மயிர்முடியும்
புனைதரு சூளிகை யோடே சுடிகை புணரிகடல்
வனைகடல் சூழுங் கரைதிரை யாம்வெம் பகையிறைமை
முனையென லாம்வியங் கோளாணை யேவன் முறைபெறுமே. 69

*வரை, கணம், அருகல், கரில், தாபரம்*

576. வரையெனிற் பாட லெழுதல் வடிவுவட் டந்திரட்சி
யுரைசெய் (கணமென்)பர் சாதல் சுருங்க லுடனுரைக்கி
லருகலென் றேதுவர் கூர்த்தல் கொடுமை யவையுரைக்கில்
கரின்மலை போன்மரம் போனிற்குந் தாபரங் காணென்பரே. 70

*பலி, பரவை, அலரி, சித்திரம், மெய்*

577. பலியை யஞ்சோறு கடலே பரப்புப் பரவையென்ப
ரலரிமென் பூவு மருக்கனு மாம்பொய்யை யானமெய்போற்
சிலசெய் தலும்வடி வழகொடு கோலமுஞ் சித்திரமே
நிலைபெறு சொற்பொருள் மெய்யெழுத் தோடுமெய் நேர்ந்
[திடுமே. 71

*மன், தன்மை, இயல், மாடு, கணை*

578. மன்மன் னவனிடைச் சொல்லுடன் மன்னலு மாஞ்செய்தலுந்
தன்மை யிடப்பொரு ளுந்தன்மை யாமியல் சாயல்நடை
பொன்மணி போல்வன வேதனமாடு புனைதிரட்சி
வின்மலி யேவும் பகழிய தாகும் விறற்கணையே. 72

*செயிர், கற்பம், அரணம், விதி, குரல், கரைதல்*

579. செயிரெனிற் குற்றஞ் சினவலு மாங்கற்பந் தேவருல
கயனுடை யாயுள் மதிலே கவச மரணமென்ப
ரியல்புட னேசெய லாகும் விதிகுரல் யாழ்நரம்பு
பயில்கதிர் கூவன் மொழிதல் கரைதலின் பாற்படுமே. 73

*சிக்கம், காரி, நீலம், வெள்ளை*

580. உறிமயிர் வார்தரு சீப்பிவை சிக்க முயர்சனிக்கோள்
கறைபயி னஞ்சொடு சாத்த னிருணிறங் காரியென்பர்
நிறைபுன னெய்தலி னீலநிறைத்தன நீலமணி
யறைகுவர் நீலம்வெள் ளாடுவெண் பாவெண்மை யாம்
[வெள்ளையே. 74

*உழை, வழி, வாரம், கைக்கிளை*

581. உழையெனில் யாழ்நரம் போடிவை மானென் றுரைத்திடுவர்
வழியிட னேடுபின் னும்வரை யாரென்பர் வாரமென்னிற்
கிழமை பகுதி மலைச்சார்வ தாமென்பர் கைக்கிளையே
கழுமிய யாழி னரம்பொ டொருதலைக் காமமுமே. 75

*வையம், ஆற்றல், வாள், கூரம், எஃகம், வில்*

582. தேரோ டவனி சகட மெருது சிவிகையென்னும்
பேரிவை வையம் வலிசெய லாற்றலின் பேரதென்பர்
கூரிய வாளொவ் வொளிவா ளுழுபடை கூரம்வைவேல்
தாருமெஃ கம்வில் விரட்டை யோடொளி தான்றருமே. 76

*அங்கதம், விளரி, எல், நாண்*

583. அங்கதந் தோளணி தன்னே டரவென்ப தாமிளமை
தங்கிய வேட்கை யுடன்யாழ் நரம்பு தருந்தகுதி
யிங்கிவை யாகும் விளரியெல் லேயொளி யோடிரவா
மங்கல மான வணிபாசம் நாணென்பர் மாதவரே. 77

*அரி*

584. சிங்க மளி திரு மால்கவி யிந்திரன் திகிரிபடை
பைங்கிளி கிண்கிணி பெய்பரல் வாசி பறவைநிறம்
வெங்கதிர் பன்றி வலிபகை பொன்புகை வெம்பணிகூற்
றங்கி புலிகவி வாள்தேரை யூகை யரியென்பரே, 78

*நகை, பொருள், இடி, தொய்யல்*

585. மகிழ்வினே தம்வினே யாட்டிடை யோடு வருநகையே
யிகழ்வது மேபெறுஞ் செல்வம் வெறுக்கை யென்னிற்
[பொருளாம்
தகரநறுஞ் சுண்ண மோடு தருப்பணந் தானிடியாந்
திகழ்முழ வேர்குழை தொய்யன் மகிட்சியுஞ் செப்புவரே. 79

*நாகு, கூழ்*

586. ஆனு டெருமை மரையிவை யல்லன வாங்கொழுமை
யீனு விளமைநன் னீர்வாழுஞ் சாதி யிளமரமே
தானுகு நாகு தழையுடன் சொல்லுந் தமனியமு
மேனு டுணவு பயிரிவை கூழென வேண்டுவரே. 80

*இதை, கிழி, ஊக்கம்*

587. இதையே மரக்கலப் பாயே புதுப்புன மேற்றபொருட்
பொதி யாடை கீற லெழுதும் படமும் புனேகிழியாம்
விதமார் முயற்சியும் வண்மையு முண்மையு மெய்மனத்தி
லுதையா தரத்து மிகுதியு மாமென்ப ரூக்கமதே. 81

*கடி, நேர்*

588. விரைவு விளக்கங் கரிப்பே புதுமை மிகுதியையம்
வரைவுமுன் றேற்றுச் சிறப்பொடு கூர்மை மணமெச்சமே
கருது காப்புவெம் பேய்மணஞ் செய்தல் கடியெனலாம்
நெடிதுடன் பாடு கொடையொத்த லேதனி நேரென்பரே. 82

*வாகை*

589. எண்ணெண் கலையினி னீகையிற் பண்பி னெழிலொருத்த
னண்ணுஞ் செயலின் மரபினிற் செல்வத்தி னல்லறிவிற்
கண்ணுந் தருமத்தின் வீரத்தி னைம்புலன் காத்துமுத்தி
வண்மை பெறுநெற்றி யிற்பேர் பெறுவது வாகையதே. 83

*பாரதிதீப வரலாறு*

590. வெருவா துயரந்தமு மெய்வீடு கண்டருள் வேங்கடவன்
பருதிக் கதிரொளி போல்வன பாரதி பங்கையஞ்சே
ரிருகைப் புயல்சொற்ற பாரதி தீபத்தி னேகாதசத்
தொருசொற் பலபொருட் பேரா னியல்முடி வுற்றதுவே. 84

பன்னிரண்டாவது

## பலபெயர்க்கூட்டத் தியற்பெயர்த் தொகுதி

***இருமை, இருவினை, இருசுடர், இருவகைத் தோற்றம், இருமரபு, இருவகைக் கந்தம்***

591. இருமை மறுமையு மிம்மையு மாநன்று தீதெனலா
மிருவினை சந்திர சூரிய ரென்ப திருசுடரா
மிருவகைத் தோற்றஞ் சராசர மாந்தந்தை தாய்வழியென்
றிருமர பாகுநற் கந்தந்துர்க் கந்த மிருவகையே. 1

***மும்மை, முப்பொறி, முச்செயல், முக்காலம், மும்முரசு***

592. மருவிய மும்மையு மிம்மையோ டும்மை மறுமையதாங்
கருதிய வாக்கு மனங்காய முப்பொறி காத்தளித்தே
யிரித்தலு முச்செயல் முக்கால மிறப்பெதிர் நிகழ்வா
முரசெனில் வீரம் (நியாயம்) தியாகமிம் மூன்றென்பரே. 2

***மூன்றிடம், முந்நிலம், முக்குற்றம், முச்சுடர்***

593. முன்னிலை தன்மை படர்க்கை யெனுமிவை மூன்றிடமா
முந்நிலம் பூமியோ டந்தரங் கோவென்பர் முக்குற்றமே
முன்னிய காமம் வெகுளி மயக்கென்பர் முச்சுடரே
முன்னெழு மாதித்தன் சந்திரன் றீயிவை மூன்றென்பரே. 3

***மும்மொழி, மூவகைச் சீவவனல், முத்தீ***

594. மும்மொழி வாழ்த்தல் பழித்தல்பட் டாங்கென்பர் மூவகையாஞ்
செம்மையில் பூதமுதர முடன் விந்துச் சீவவன
லம்முத்தீ கா(ருகபத்) தீய மாக வனீயமுடன்
கைம்மிகு மன்சுவந் தென்றிசை யங்கிக்குக் கற்பித்ததே. 4

***முக்குணம், சாத்துவிகம், இராசதம்***

595. முக்குணஞ் சாத்து விதமோ டிராசதந் தாமதமா
மக்குண ஞானந் தவங்கல்வி யோடைம் புலனடக்க
லிக்குண நல்லரு ளானந்த மெய்ம்மை யினியதவந்
தக்கதோர் தானந் தருகு மிராசத தற்குணமே. 5

*தாமத குணம், மூவகைத் தானம், உத்தம தானம்*

596. கிளர்பெரு வுண்டி மடிவஞ் சனைநிதி கேடுறக்கங்
கனைதரு காமஞ் சலமிவை தாமதங் கட்டுரைக்கி
னளவெனு முத்தம மத்திமத் தோடத மங்களதா
யுளத்தினி தேற்ற நிதிநற் றவர்க்கிடி லுத்தமமே. 6

*மத்திம தானம், (அதமதானம்)*

597. ஆதுல ரந்தகர் மாத ருறுப்பிலி யாங்களவர்க்கே
யீதலு மத்திமங் கண்ணேட்டங் காரண மேற்றனுக
...... ...... ...... ...... ......
...... ...... ...... ...... ...... 7

*திரிகடுகம், திரிபலை, திரிபுரம், ஆதித்தன், மூவகை வீதி*

598. திரிகடு கஞ்சொல்லிற் சுக்கு மிளகிவை திப்பிலியாந்
திரிபலை தான்றி கடுநெல்லி வெள்ளிபொன் சேரிரும்பாந்
திரிபுர மேட மிடப மிதுன மெனத்திகழுந்
திரிவித மாதித்தன் றேரோடு வீதித் திறமிதுவே. 8

*நாற்புவி, நாற்படை, நாற்கதி, நாற்புகல்*

599. நாற்புவி முல்லை குறிஞ்சி மருத நறுநெய்தலாம்
நாற்படை தேர்கரி காலாட் குதிரை யெனநவில்வார்
நாற்கதி யும்பர் மனிதர் விலங்குட னுகரென்பர்
நாற்புகல் வெற்பு மதில்காடு நீரென நாட்டினரே. 9

*நான்மறை, நாற்புலவோர்*

600. தாதரு ஞான்மறை தானே யிருக்குத் தயித்திரியங்
(கீதத்த) டர்தரு சாம மதர்வண மேகிளர்க்குங்
காதிய நாற்புல வோருங் கவியுட னேகமகன்
வாதியும் வாக்கி யுடனே யுரைக்கு மகிதலமே. 10

*கவி, கமகன்*

601. சிலர்புகழ் நா(ல்) வகை யாசு மதுரமச் சித்திரத்தோ
டலைவறு பல்வகை வித்தாரம் பாடு மவன்கவியா
மிலகிய ஞாபகஞ் செம்பொரு ளாமவற் றெப்பொருளுங்
கலைதெரி யும்படி பாடவல் லோனக் கமகனுமே. 11

*வாதி, வாக்கி*

602. கருதிய வேதுடன் மேற்கொ ளெடுத்துடன் காட்டித்தன்கோள்
வரநிறுவிப்பின் பிறன்கோள் மறுப்பவன் வாதியென்பர்
விரவி னறம்பொரு ளின்பநல் வீடிவை மெய்விளங்க
வுரைசெயு மாற்ற லுடையானை வாக்கியென் றேதுவரே. 12

*ஆசுகவி, மதுரகவி*

603. தொடுத்த பொருளிற் றெடுத்தவின் பத்துடன் றேமளவா
யடுத்த பொழுதினிற் பாடுவ தாசென்ப ராமடியோ
டெடுத்த தொடையும் விகற்பமுங் கேள்விக் கினியசொல்லாய்
வடித்த பொருட் செல்வ மாயபாப் பாடன் மதுரமதே. 13

*சித்திர கவி*

604. அக்கர சித்திர மாகார சித்திர மானகதி
மிக்கிடு சித்திரம் பெந்திதை சித்திர மேயெனநான்
கொக்க விருத்த லறுபத்து நாலென் றுரைச்சித்திரந்
திக்கய முற்றும் புகழ்தரப் பாடுகை சித்திரமே. 14

*வித்தார கவி*

605. தெரிதரு கோவை பரணி யுலாமடற் சின்னமென்றே
ரரிதனிற் பாடும் புராணமே யக்கா வியமைந்துமா
யிருளறச் சொல்லு மியலிசை நாடகத் தோடெவையும்
விரிதரப் பாடுதல் வித்தார மாக விளம்புவரே. 15

*நால்வகைப் புண்ணியம், சிலேயோர் நால்வகை நிலே, பைசாசம்*

606. நாலது புண்ணியந் தானந் தவங்கல்வி நல்லொழுக்க
நாலுள தாகும் வகையே நிலேமைபை சாசமுட
ஞலிட மண்டில மப்பிரத் தாலிட மற்றவற்றோர்
காலே முடக்கி யொருகா னிறுத்தல்பை சாசமதே. 16

*ஆலீடம், மண்டலம், பிரத்தாலீடம்*

607. முதல்வலக் கால்மண் டலித்திடக் காலுடன் முந்துறவே
யதுவிருப் பாலிட மல்லிருக் கான்மண் டலித்தழகா
லெதிரிருப் பாய்மண் டலமிடக் கால்வலேத் திட்டொருகால்
...விதியின் முற்பந் தாமெனச் செப்பினரே. 17

608, 609, 610. 18 முதல் 20 வரை 3 பாடல்கள் இல்லே. இவற்றை எழுதத்தக்க அளவு — 64 ஆம் ஏட்டினடியில் இருவரிகள், பின் பக்கம் 5 வரிகள் எழுதக்கூடிய அளவு — வெற்றிடம் விடப் பட்டிருக்கிறது. எனவே, இவ் வேட்டிற்கு மூலமான ஏட்டிலும் இக் குறைபாடு இருந்ததுபோலும். திவாகரத்துடன் ஒப்பு நோக்கினுல், ஐந்திணே, பஞ்சவாசம், பஞ்சாங்கம், ஐவகை இசைக்கருவி, மதனன் பஞ்சபாணம் பற்றியனவாக இப் பாடல்கள் அமைந்திருத்தல் வேண்டும் என ஊகிக்கலாம்.

*பஞ்ச சயனம், ஐம்பால், முடி, ஐந்துண்டி*

611. திடமயிர்ச் சேணம் படாம்பஞ்சின் மெத்தையந் தூவியுடன்
படர்விரிப் பாயுடன் பஞ்ச சயனமைம் (மயிரின்) முடியாம்
வடிகுழ றெங்கல் பனிச்சை சுருள்கொண்டை மாந்தனக்க
லடர விழுங்கல் கடித்தல் சுவைத்தலோ டைந்துண்டியே. 21

*குதிரை, ஐங்கதி, சிவன் ஐம்முகம், ஐம்பால்*

612. மருவிய மல்லர் மயல்முய றன்னுடன் வாமேக
சரகதி யாகும் பரியைங் கதிவாமஞ் சத்தியந்தற்
புருடமீ சான மகோரமிவ் வைந்தும் புராரிமுக
மொருவ ஞெருத்தி பலரொன்று பலவைம் பாற்குரித்தே. 22

*வினு ஐந்து, அந்தணர் அறுதொழில்*

613. அறியான் வினுத லறிவொப்புக் காண்டலை யம்மறுத்தல்
பிறிதா முணர்வவன் பாற்கோட லேசொற் பினையலற்கே
யுறவார்மெய் காட்டல் வினுவைந் துடனேத லோதுவித்தல்
முறைவேட்டல் வேட்பித்த லேற்றல் கொடுத்தல்மும்
[மூன்றதுவே. 23

*அரசரறு தொழில், வணிகர் செய் தொழில் ஆறு*

614. ஓதுதல் வேட்டல் கொடுத்தல் படைக்கல முற்றியற்றல்
பூதலங் காத்த லரசற் கறுதொழிற் பூவணிகர்க்
கீத லுழவு பசுக்காவல் வாணிக மென்றுமறை
தீதற வோதுதல் வேட்டலென் ருறென்பர் செய்தொழிலே. 24

*உழவர் அறு தொழில், காருகவினைத் தொழில்*

615. உழவொடு வாணிக மேபசுக் காவ லுயர்மறையோர்
வழிவர நிற்றல் குயிலுவங் காருகம் வானனதித்
தொழுமர பாராறு தொழிற் பட்டுத் துகிலமைத்தல்
கழுவுத லோடு சுமத்தற் ரெழிலென்பர் காருகமே. 25

*ஆறங்கம், அறுசமயத்தர்*

616. வேதமெய் மந்திரஞ் சந்தோ பிசிதி வியாகரண
மாதி நிகரில் திருத்தமச் சோதிட மாறங்கமாந்
தீதினை யாயிகர் மீமாங்க ரேபுத்தர் சேடிகரே
தாதிய லோகா யுதரே யருகர் சமையத்தரே. 26

*உட்பகை ஆறு, அறுவகைத்தானை*

617. காமம் வெகுளி மயக்க முலோபங் கருதுமத
மேமாறு கொளலிவை யாறு மெய்யுட் பகையெனவாம்
வாமவில் வேல்வடி வாளானை தேர்வடி வாசியென
லாமவை யேயறு தானையென் ரேதுவ ரந்தணரே. 27

*நாட்டு வகை ஆறு, அரசியல் ஆறு*

618. செய்வுறு செல்வ விளைவொடு பல்வளஞ் சேமமுட
னவரு நோய்குறும் பின்மையி தாறு நவின்றிடுமெய்
யுய்வகை யாகும் படைகுடி கூழமைச் சொடுநட்போ
டைய்வகை யாகு மரணே யுடைய தரசியலே. 28

*அறுசுவை, அறம் பொருள் இன்ப — அறநிலை மறநிலை ஆறு*

619. அலைவி லறுசுவை தித்தித்தல் கைத்த லறப்புளித்தல்
துலைவுறு கார்த்த லுடனே யுவர்த்தல் துவர்த்தலென்ப
ருலகி னறம்பொரு ளின்பம் மூன்றினி லோரிரண்டாய்
நிலவி யறமறந் தன்னோ டறுவகை நேர்படுமே. 29

*அறநிலை அறம், அறநிலைப்பொருள்*

620. தூநிரை மீட்டல் துடர்நிரை யோட்டல்செஞ் சொற்றுறவோர்
மானவொ டேவின செகுத்த லறநிலை மன்னறமாஞ்
சேனையோ டாரமர் கொள்ளல் நிரைகொள்ளல் செய்தவத்தா
லானதண் டிப்பொரு ளெல்லா மறநிலைக் காம்பொருளே. 30

*மறநிலை இன்பம், கன்மபூமிப் பயன்*

621. ஏறு தழுவல் பொருளே கொடுத்த லிலக்கமெய்தல்
சீறி வலிதினிற் கோடல் ம(றநிலை)சே ரின்பமாங்
கூறுமுழவு தொழில்வா ணிபம்வித்தை கூடுபுகழ்ப்
பேறு படுசிறப் பேகன்ம பூமிப் பெரும்பயனே. 31

*போகபூமி*

622. ஒத்த குலங்கல்வி யேரோ டிளமையு மோகவின்பத்
தொத்த பிராயப் புமான்மட மாதினுக் கோங்குதரு
வொத்து நுகர்ச்சி யமுதோ டளிக்க வுருகிவிடா
வொத்தவப் போகந் தருபோக பூமியென் ரோதுவரே. 32

*அறுவகைப் போகபூமி*

623. மாமதி லாயரி வஞ்சனை நல்லரி வஞ்சமுட
னேமத வஞ்ச முடனே ரவண்வஞ்ச மீதுடனே
தாமுறை தேவகுருவ முடனுத் தரகுருவ
மாமவை யாறு வகைப்போக பூமி யதுவென்பரே. 33

*அறுவர் சக்கரவர்த்தி, எழுதீவு*

624. புகலி னரிச்சந் திரன்முசு குந்தன் புரூரமன் போர்ச்
சகர நளன்றன் னுடன்கார்த்தி கேயனுந் தானறுவர்
மிகுசக் கரவர்த்தி நாவ விறலி விறற்குசையே
திகழ்க வுஞ்சஞ்சன மாலிதென் புட்பகந் தீவென்பரே. 34

*எழுகடல், மேலேழுலகம்*

625. உப்புக் கரும்பு மதுநெய் தயிரோடொண் பாலுடனே
யப்புக் கடலிவை யேழாகு மேழுல காகுமவையா
மொப்பற்ற பூப்புவ லோக முடன்சுவ லோகஞ்சொலுந்
தப்பற்ற மாசன லோகந் தவத்தவ லோகத்ததே. 35

**கீழேழுலகம்**

626. ஏரா ரதலத்துட னேழ்தல மெழினி தலங்
காரார் சுதலத் தொடுமென் னிராதலங் காண்கைக் கெட்டாப்
பேரார் தராதல மாதல மென்பவை கீழுலகாங்
கூரகி மெத்தக் குலேயே படைக்கட் கோமளமே. 6

**ஏழ் நரகம்**

627. எரியழல் வட்ட மெரிபரல் வட்ட மெரிபடையாய்
வருசுடர் வட்டம் பொருகரி வட்டம் வறுத்துடனே
சொரிமணல் வட்டம் புகைவட்டஞ் சேரிருள் சூழ்ந்தவட்டம்
பெருகழ ருவட்ட மென்றேழ் நரகமும் பேர்பெறுமே. 37

**ஏழு மாதாக்கள், ஏழு தாதுக்கள்**

628. பார்ப்பினி சங்கரி கௌமாரி நாரணி பன்றிமுகி
யேற்பவள் சாமுண்டி யிந்திராணி யாகுவ ரேயெழுபேர்
தோற்பொலி யுந்தசை யென்பு நரம்புநெய்த் தோர்நிணமே
மேற்பொழி விந்து வுடனேழு தாதென்ன வேண்டுவரே. 38

**வேந்தனின் ஏழு பண்பு, எட்டுத் திக்குப் பாலர்**

629. அறம்பொரு ளின்ப மறுமை புகழ்மதிப் பண்பிவையேழ்
பெறும்பொரு வேந்திந் திரனங்கி யேயமன் பேணிருதி
யுறும்புனல் மன்னுயிர் புட்பக னீசன்றிக் கோரெண்மரே.
சிறந்துல கெண்டிக்குப் பாலகராகச் சிறந்தவரே. 39

**எண் திசைக்குறி, அட்டமங்கலம்**

630. கொடிபுகை சீய முடனே யிடபங் குலக்கழுதை
யடலிபங் காக மிவையெண் டிசைக்குறி யாடிசுடர்
படர்கொடி தோட்டி யிணைக்கய லேகும்ப னீர்க்கவுரி
யிடமுர சானல் லிவையட்ட மங்கல மென்பர்களே. 40

**அட்ட மூர்த்தம், அட்டமா சித்தி**

631. மதியங் கதிரங்கி நீரிய மானனன் வானிலங்கா
விதுவட்ட மூர்த்த மடலட்ட மாசித்தி யேயணுமாக்
கதியுற்ற தோர்மகி மாலகு மாபிராத்தி காமிகத்தோ
டுதவு மசித்துவம் விசுவத்துவம் காமரூபி...வமே. 41

**எண் வகை யோகம், இயமம்**

632. மாயா வியம நியமா தனத்துடன் மன்னுபிரா
ணுயாம மேபிரத்தி யாகாரந் தாரணை யானபடி
யேயாந் தியானஞ் சமாதியென் பார்க ளியமமுண்மை
யாயேகொல் லாமை புலன்காவ லாம்பொரு ளாசையற்றே. 42

*நியமம், எண்வகை எச்சம்*

633. சாதக மான தவஞ்சவு சத்துடன் றத்துவநூ
ஒரிதியி ஞேதல் கடவுளர்ப் பேண ஒியதியென்பர்
தீதுறு கூன்குற ளுமை செவிடு சிதடெனமாப்
பேத மருளுறுப் பில்பிண்ட மெண்வகைப் பேரெச்சமே. 43

*எண்குணம்*

634. தெழியா வனந்தமெஞ் ஞான மனந்த தெரிசனத்தோ
டழியா வனந்தமெய் வீரியந் தன்னோ டனந்தசுக
மிழிவான ஞமை முடனுகுங் கோத்திர மின்மையின்ப
மொழியா வியல்பவை யெண்குண மாக வுரைசெய்வரே. 44

*செட்டி எண்குணம்*

635. தனிமையி னுற்ற லுறுவது தேர்தல் தன்னேட்டரின்
மனனழி யாமை பொழுதொடு சேரல் வருவதஞ்சா
தினிமைய னுதல் பொருளீட்ட னல்க லெவரிடத்து
முனிவில னுத லிவையெட்டுஞ் செட்டிக்கு முன்னுளதே. 45

*எண்வகைக் கணம், எட்டு மெய்ப்பரிசம்*

636. இந்திர னங்கி ... ...... னிரவி லளியியமா
னந்தர மாமெண் கணமும் (பி)டித்த லடித்தலுடன்
வந்துறக் கேட்டல் தடவுதல் தட்டல் வாக்குரைத்தல்கோ
பந்தனில் வெட்ட லிவையெட்டு மாமெய்ப் பரிசங்களே. 46

*எண்வகை மணம், எண்வகைப் போர்த்தொழில்*

637. அருள்பிர மம்பிர சாபத்தி யத்துட ஞரிடமே
பெருகிய தெய்வ மசுர மிராக்கதம் பேய்நிலைகாந்
திருவம தெண்மணம் வெட்சி கரந்தை தெரிந்தவஞ்சி
மருவிய காஞ்சிநொச் சியுழி ஞைதும்பை வாகையெட்டே. 47

*எட்டுத் திக்கு யானை*

638. ஆமயி ராவதம் புண்டரீ கங்குமு தம்மஞ்சனம்
வாமனம் புட்பதந்தஞ் சாறுவ பூம வருமதத்துத்
தேமலி யுஞ்சுப் பிரதீப மென்னத் திசையெட்டினு
நாம மிகுங்கரி நாற்கோடுடைத்தது நன்னுதலே. 48

*நவ கண்டம்*

639. தெற்கு வடக்குக் குணக்குட பாலெனச் செப்புதற்கே
யெக்குல வுந்திசை தன்னில் விதேய மிரேவதமாந்
தற்குறிப் பாகிய பேரெட்டு மத்திமந் தன்னுடனே
நற்குறிப் பேற்ற திவையென லாகு நவகண்டமே. 49

*நவமணி, காணப்படாமணி*

640. மாணிக்க முத்து மரகத நீலம் வயிரந்துப்பு
யாணர்க் கதிரின் வயிடூ ரியம்பற்ம ராகமிரு
ணணத் திகழொளி கோமே தகமென் னவமணியாங்
காணப்படாமணி சிந்தா மணியக் கவுத்துவமே. 50

*நவதாரணை, நவரசம்*

641. நாம மிலக்கம் பரிகரி கஞ்சம் நயந்தசெய்யுட்
டாம வெழுத்துச் சதுரங்க நீர்நவ தாரணையாங்
காம மவல முருத்திர மச்சஞ்சிங் காரநகை
யேமறு வீரம் வியப்பே கருணை ரசநவமே. 51

*நாரணன் பத்து அவதாரம்*

642. மீனமை கேழல் நரசிங்கம் வாமன மேபரசு
ராம னிராம னலாயுத னுகு வடமதுரை
யானுகுங் கிட்டினன் கற்கி யுடனவ தாரம்பத்துந்
தானுகி வையம் புரப்பவ னாரணன் றனென்பரே. 52

*சிற்ப வினைக்குறிப்பு பத்து, தசாங்கம்*

643. கல்லுமண் செங்கல் லுலோக மரஞ்சுதை காமர்வண்ணஞ்
சொல்லிய சந்த மெழுகுளம் பத்துஞ் சிற்பவினை
நல்ல நதிமலை மாவாசி யூர்தொடை நாடுகொடி
வெல்லு முரசுட னாணை தசாங்க வினைப்பயனே. 53

*உயிர் வேதனை பன்னிரண்டு, அரசர் ஐம்பெருங்குழு*

644. வாதம் புனல்கன லாயுதம் வல்விட மாவசனி
சீதமத் தாகம் பசிதெரி யாச்சின நோய்மருந்தா
மாதுய ராறிரண் டாமுயிர்க் கைங்குழு மந்திரந்
தூது புரோகிதன் சேனு பதிபொற (றுர) யற்கே. 54

*பதினெட்டு மொழியாளர்*

645. அங்கர் கலிங்கர் கவுசலர் சோனக ராரியரே
சிங்களர் மாளுவர் மாராடர் மாகதர் சிந்தவரே
கொங்க ருமணர் களப்பரர் சீனர்கள் கொங்கணரே
வங்கர் துளுவர் மலையாளர் பத்தெட்டு வாசகரே. 55

*பதினெண் கணம்*

646. சுரரோ டசுர ரிராக்கதர் சித்தர் தொழுமிசைக்கிம்
புருட ரியக்கரே வித்தி யாதரர் நன்முனிவர்
கருடர் பிசாசரு மாகா சியர்கந் திருவர்தக்
கருகர்வெம் பூதரு மிப்போக பூமிப்பன் னெண்கணமே. 56

*அரசர் பதினெண் கணம்*

647. கரணத் தினவர்......ரேகடை காப்பர்சுற்றம்
மருமக் கரிமிசை யோர்பரி வீரர் படைத்தலைவ
ரருமைப் பதியினர் தாமென்பர் (வே)திய ஞேடுநட்டோ
ரரசற் கடும்படை யனமா மருததனி .... தே. 57

*உலகர்க்குறுதுயர் பதினெட்டு*

648. வெறுப்புப் பசியி......னீர் வேட்டல் வெகுளியின்பம்
பிறப்புக் கிலேச மதமோ டதிசயம் பேதமையே
யிறப்புச் செனூநரை பொச்சாப்பு பகை ...நினைப்
புறதச செயலற வேலர் வுலகர்க் குறுதுயரே. 58

*பதினெண் புராணம்*

649. மச்சம் பிரம வராகம் வயிணுவ மார்க்கண்டை
மச்ச மிலிங்கம் பவுடிகம் வாமனங் காந்தர்ப்ப
மெச்சுகதஞ் சைவம் மாக்கினே யம்பிர மாண்ட மிகுநாரத
கச்சபங் காருட மற்றும் புராணக் கலைபலவே. 59

*முப்பத்திரண்டு அறம்*

650. ஆதுலர்க் குண்டி யறுசமை யத்தருக் காமுணவு
(மே) ாதி னருட்சிறைச் சோற்றத் தொதன முண்கண் மருந்
தேதில் பிணஞ்சுடல் கண்ணுடி நோய்மருந் தின்பமெண்ணெய்
காதல் மகப்பெறு வித்தல் பிற......லொடே. 60

651. சந்ததி பெற்றல் முலைப்பால் மடந்தடங் காவிலங்க
னந்தமில் வண்ணுர் நாவிதர் பட்டார் வணைது......
பந்தாமட் டுணி சன நாளோலை களாப பாலுநல்க
லிந்தொழில டறினன் பண்ட முப்பத் திரண்டறமே. 61

*பிள்ளைப் பாட்டு*

652. திங்க ளிரண்டினி லைந்தினி லேழினி லொன்பதினி
லங்கொரு பத்தொன்றிற் காப்புச்செங் கீரை யமுதுடன்ருல்
தங்குசப் பாணிமுத் தங்கூற லாண்டு தனிற்புதல்வ
விங்கெதிர் வாவெனல் பூச்சூட்டல் திங்களோ ரெட்டினிலே. 62

*ஆண்பிள்ளைப் பாட்டு*

653. ஆண்டிரண் டுற்ற சிறுபடை கொட்ட லணுகியமு
வாண்டினிற் கோழகந் தான்செய்தல் சிற்றி லழித்தலைந்தா
மாண்டின்மை யாடல் சுரிகைமெய் சேர்த்த லவையவைவ்
வாண்டினிற் பாடுத லாண்பிள்ளைப் பாட்டுக் கடைவதுவே. 63

### பெண்பிள்ளைப் பாட்டு

654. முன்னவை யாண்டின் முடித்தலவ் வாண்டெல்லை
[மூன்றுதன்னி
லுன்னு கும்பக னைந்தொட தெல்லையி னேங்குவில்வே
டன்னை வழிபட னீராடல் தண்கட லாடல்சிற்றில்
பன்னலமண செ ...... பொன்னூசல் பெண்பிள்ளைப்
[பாட்டென்பரே. 64

### பெண்டிர் இலக்கணம்

655. நல்லுரை யாடியு நல்லிசை யோர நகைவிளைத்து
மெல்லென வொல்கி விலங்கி நடந்தும் விழிவலையாற்
கொல்லுவர் போலெதிர் நோக்கியு நாணியுங் கொங்கையிற்கை
யொல்லை நலிந்து மழுதுட னேங்கி யொடுங்கியுமே. 65

656. மருங்கினிற் கைவைத்து வாகியு னெற்றியின் வைத்தொருகை
யொருங்குட னுடியும் மெண்ணுன தாகியு முன்னழிந்து
குரங்(க)யின் கூந்தலி லேந்துகை வீதியுங் கோதுசெய்து
மிரங்கியு மெல்லென்று செய்வது பெண்டிர்க் கிலக்கணமே. 66

### உற்பாதம், ஏழு மேகம்

657. அரவொடு திங்கட் கதிர்பரி வேட மழல்புகையிந்
திரவி வடுவழ லுற்பாதங் காலொளி தீப்புகையே
மருவுறு நீலிநி நீவ வாருணி வாரியுட
னிருமைய வாம் புட்கலாவந்த மேமென் றேழ்முகிலே. 67

### திருப்பொறி

658. தாமரை சக்கரஞ் சங்க நிறைமதி தாவிடபங்
காமுறு மானே ரெட்டி நிறைகுடங் காரமுமே
பூமுடி தோரண நாவாய் துணைக்கயல் பூங்கடலே
யேமுறு ரேகை திருப்பொறி யாக வியம்புவரே. 68

### அரசுயானை இயல்பு

659. ஓரே முயரநன் னீள மதேபெற்று மொன்பதின்முன்
றீரேழ் முழஞ்சுற் றுடைத்தா யச்சங்க ரேசிறுமண
காரே நிறமுன் பாதுயின் ருழ்ந்துகை கான்மருப்புச்
சீரேயுந் தாலவட் டத்தாலுங் கோறலுந் திண்கரியே. 69

### குதிரை இயல்பு

660. நாறிய பூங்குழ லார்மனம் போன் ...... ரயக்கதலி
மீறிய பூமடற் போற்செவி யாகி முகமழகாய்க்
கூறிய நாற்கதி பெற்றேத மஞ்ச காலுணையாய்
வீறிய வெண்பத் திரண் குலி யத்திரி வேடிக்கையே. 70

*பதாதி, கும்பி, பிராதனை*

661. ஒருகரி தேரொன்று மாநான்கு சேவக ரீரைவரா
யருள்வ பதாதிய தாகும் பதாதிகள் மும்மடியே
வருசேனம் மும்மடி கும்பி தெமும் மடிகணமே
தருமும்மை வாகினி யென்பது மும்மடி பிராதனையே. 71

*அனிகம், அக்கிரோணி, பத்து, நூறு, பதினுயிரம்*

662. தானையு மேமும் மடியாஞ் சமுகமுந் தன்னின்மும்மை
யான தனிகமு மாம திலைமடி யக்கி ரோணியா
மேனைய பத்துச் சதநூறு பத்தெனி லீரைந்துநா
லூனமிலோர்பதி னுயிர மேய யுதமென்பரே. 72

*அயுதம், நூருயிரம், அற்புதம், கும்பம், வாமனம்*

663. ஆட லயிதமு நூரு யிரமாகு மாலயிதங்
கோடி யதுபத்து நூரு யிரமதக் கோடிபத்தே
வாடல் வற்புத மக்கோடி நூறென்ப மாகும்பமும்
நீடது நூறுபத் தாங்கோடி வாமன நேர்படுமே. 73

*சங்கு, சமுத்திரம், அந்தியம், மத்தியம், பிரமகற்பம்*

664. வாமனம் பத்துச்சங் கென்பரச் சங்கெனின் மற்றறுப
தாமது வாகுஞ் சமுத்திர மாங்கது பத்தந்தியம்
மாமது மேற்பத்து மத்தியம் பாரத மேற்பதத்தாங்
காமரு வும்மேற் பத்தது மேபிரம கற்பெனுமே. 74

*பாரதி தீப வரலாறு*

665. கந்தர மென்னக் கொடையுடை யான்கடம் பாடவிவா
ழிந்திரன் மேன்மலை வாழ்முனி போல விலக்கணத்தாற்
செந்தமிழ் நூல்தெரி பாரதி பாரதி தீபந்தன்னின்
முந்திய பல்பொருட் பன்னிரண்டாமியல் முற்றியதே. 75

பாரதி தீபம் முற்றும்

---

* ஏட்டின் இறுதியில் பின்வரும் குறிப்புக் காணப்படுகிறது;—
"ஆகத்தொகுதி பன்னிரண்டிற்குக் கலித்துறை 663.
சிவமயம். பிறமாதூத ஹு பங்குனி மீ 11 வ
செவ்வாய்க்கிழமை திரிதிகை சித்திரை நட்சத்திரம் பெற்ற
தினத்தில் பாரதி தீபம் எழுதி முற்றின. சிவமயம்."
நூலுள் ஏட்டில்கண்டபடி கணக்கிட்டால் 665 பாடல்கள் உள்ளமை
தெரிய வரும்.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

*[எண் : செய்யுள் எண்]*

## பாரதி தீபம்
## முதற்பத்துத் தொகுதிகளின்

# பொருளகராதி

# 11, 12 ஆம் தொகுதிகளின் பல பொருளொரு சொல், தொகைப் பெயர்களின் அகராதி

# சென்னைப் பல்கலைக் கழகம்

## தமிழ்த்துறை வெளியீடுகள்

1. திருவாய்மொழி (பகுதி 1 முதல் 10 வரை)
—ஆசிரியர் : திரு. பு. ரா. புருஷோத்தம நாயடு
2. ஆசார்ய ஹிருதய மூலம்
—ஆசிரியர் : திரு. பு. ரா. புருஷோத்தம நாயடு
3. பத்துப்பாட்டு ஆராய்ச்சி
—டாக்டர் மா. இராசமாணிக்கனர்
4. திருக்குறள் யாப்பு அமைதியும் பாட வேறுபாடும்
—திரு. மு. சண்முகம் பிள்ளை
5. திருக்குறள் நீதி இலக்கியம்
—திரு. க. த. திருநாவுக்கரசு
6. திருக்குறள் அணிநலம்
—திரு. இ. சுந்தரமூர்த்தி
7. திருக்குறள் அமைப்பும் முறையும்
—திரு. மு. சண்முகம் பிள்ளை
8. சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்
—டாக்டர் ந. சஞ்சீவி
9. திருக்குறளில் கற்பனைத் திறனும் நாடக நலனும்
—திரு. க. த. திருநாவுக்கரசு
10. பல்கலைப் பழந்தமிழ்
—(ப. ஆ.) டாக்டர் ந. சஞ்சீவி
11. நாக குமார காவியம்
—(ப. ஆ.) திரு. மு. சண்முகம் பிள்ளை
12. இந்திய விடுதலையும் தமிழ் இலக்கியமும்
—(ப. ஆ.) டாக்டர் ந. சஞ்சீவி
13. திருவிசைப்பா—திருப்பல்லாண்டு
திரு. மு. அருணசலம்
14—17. தமிழாய்வு (நான்கு தொகுதிகள்—1, 2, 3, 4)
—(ப. ஆ.) டாக்டர் ந. சஞ்சீவி
18. அப்பாண்டைநாதர் உலா
—(ப. ஆ.) திரு. மு. சண்முகம் பிள்ளை
19. தெய்வத் தமிழ்
—(ப. ஆ.) டாக்டர் ந. சஞ்சீவி
20. பெருங்காப்பியச் சிற்றிலக்கியப் பெருந்தமிழ்
—(ப. ஆ.) டாக்டர் ந. சஞ்சீவி
21. தமிழாய்வு (5, 6, 7, 8, 9, 10 தொகுதிகள்)
—(ப. ஆ.) டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்
22. தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon) — தொகுதி I
23. அகப்பொருள் மரபும் திருக்குறளும்
—திரு. மு. சண்முகம் பிள்ளை
24. A Study of the Literature of the Cēra country
—Dr. C. Balasubramanian
25. கல்கத்தா தேசிய நூலகத் தமிழ்ச் சுவடிகள்
—திரு மு. சண்முகம் பிள்ளை, டாக்டர் இ. சுந்தரமூர்த்தி